**Rs. 150.00**

**MELANMAI PONNUSAMI KATHAIKAL - Part - 2**

*by*

**Melanmai Ponnusami**

First Edition : 2002
Second Edition : 2012

*Published by*

**RAJARAJAN PATHIPPAGAM**
19 Kannadhasan Salai
T. Nagar, Chennai - 600 017.
Ph : 044 - 2434 5641, 2431 3221

*Typeset by*

**Classic Designs,** Chennai - 17.

*Printed at*
**Udayam Offset,** Chennai - 2.

# சமர்ப்பணம்

சொந்தநிலமில்லாமல் சிந்தும் வியர்வையில்
உலகத்துக்கே பந்திவைக்கும் உழைப்பாளித் தலித்கள்,
நிலமிருந்தும் வியர்வைக்கு விலை கிடைக்காமல்
வெந்து கருகும் பிற்படுத்தப்பட்டோர், உயர்சாதியில்
பிறந்ததாலேயே துயர் சுமக்கும் உயர்சாதி ஏழைகள்
அனைவருக்கும்...

# பொருளடக்கம்

## மேலாண்மை பொன்னுசாமி கதைகள்

பாகம் - 2

# 1. பிறந்த போதினிலே...

நாராயணிக்கு உடம்பின் ஒவ்வொரு அணுவிலும் இன்பத்துள்ளல். தலை கால் புரியாத சந்தோஷம். மனசுக்குள் ஆனந்த மலர்கள் பூத்துச் சொரிந்து வண்ணமாய்ச் சிரித்தன.

கூரை வீட்டின் முன் பக்கத்தில், இன்று காலையில் திடுமென உதித்தெழுந்த சின்னஞ்சிறு ஓலைத் தாழ்வாரத்தின் நிழலில், கறுப்புக் குன்றாக நின்ற எருமை மாட்டைப் பார்க்கப் பார்க்க, அந்தச் சிறுமிக்கு நெஞ்செல்லாம் நிறைந்து ததும்பியது.

''ஹைய்...எங்க மாடு...எங்க மாடு'' என்று எல்லையற்ற பெருமையுடன் பூரித்தாள்.

ஓர் உயிரைச் சுமந்து கொண்டிருக்கும் பெருமிதம், அந்த எருமையின் முகத்தில் ஒளியாகவும், உடம்பின் கருமையான மினுமினுப்பாகவும் ஒளிர்ந்தது. அதன் உப்பிய வயிறும், பால் நிறைந்து தடித்த மடுவும் கண்ணையும், நெஞ்சையும் நிறைத்துச் சந்தோஷமளித்தது.

நேற்றுதான் வீட்டுக்கு வந்து சேர்ந்த இந்த மாட்டின் மீது... நாராயணிக்கு இனம் புரியாத பிரியம். கறுப்பு வைரமாக ஜொலித்த அதன் கண்கள், அங்குமிங்குமாக நகரும்போது... நாராயணியின் இதயத்தில் சந்தோஷம் பொங்கிப் பீறிட்டது.

''ஹைய்... எங்க மாடு என்னையே பார்க்குது... வாலை ஆட்டுது...'' என்று குதூகலிப்புடன் கைகொட்டிக் குதித்தாள்; சிரித்தாள். பூவாகச் சிதறும் சிரிப்பு. சங்கீதமாக இனிக்கும் வெள்ளைச் சிரிப்பு.

''அடியே... நாராயணி...காதுலே வுழலே? எங்க போய்த் தொலைஞ்சே-? உஸ்ஸ்ஸ்.......''

வீட்டுக்குள்ளிருந்து வந்த வீரம்மாவின் அழைப்பில், அசதி தெரிந்தது. ஏதோ அவஸ்தையைச் சகித்துக் கொண்டிருக்கும் வேதனை இருந்தது.

''என்னம்மா, கூப்டீயாம்மா?'' துள்ளிக்கொண்டே உள்ளே பாய்ந்தாள் நாராயணி. நேராக அமரமுடியாமல், சுவரில் சாய்ந்த நிலையில் திண்ணை மீது உட்கார்ந்திருந்தாள் வீரம்மா. இடுப்புச் சேலையை நெகிழ்த்துவிட்டிருந்தாள். அதையும் மீறி வயிறு முன்பக்கமாகத் தள்ளிக்கொண்டு தெரிந்தது. ஒரு புதிய ஜீவனை ஏந்திக் கொண்டிருக்கும் பெருமிதத்தைவிட... சலிப்பும், சோர்வுமே... அவளிடம் அதிகமாகக் காணப்பட்டது.

''உங்கய்யா எங்கே போயிருக்கார்?''

''எங்கயோ... எனக்குத் தெரியாதும்மா.''

''எங்க போய் தொலைஞ்சாரோ; பொறுப்பத்த மனுஷன். 'வாயும் வவுறுமா நா இருக்கேன். இப்ப மாடு பிடிக்க வேண்டாம், புல்லுப் பிடுங்கிப் போடக்கூட முடியாது'ன்னு படிச்சுப் படிச்சுச் சொன்னேன். காதுலேயே போட்டுக்கலே. 'சினைமாடு ஆயிரம் ரூபாய்க்கு கிடைக்குது'ன்னு பிடிச்சுக் கொண்ணாந்து கட்டிப் போட்டு... உடம்பு புல்லரிக்காமெ தெருவுலே அலைஞ்சா என்ன அர்த்தம்? பாவம் வாயில்லா சீவன்... அதுவும் வாயும் வயிறுமாயிருக்கிற சீவன்...குலைபட்டினியா கிடக்குதே... நான் என்ன செய்றது?''

வீரம்மாவின் அங்கலாய்ப்பு நீண்டது. உஸ்ஸென்று களைப்பான பெருமூச்சுடன் முடிந்தது'.

மாடு வந்த சந்தோஷத்தில் திளைத்த நாராயணிக்கு, அம்மாவின் அங்கலாய்ப்பு பிடிக்கவில்லை. எரிச்சலாக இருந்தது. இருந்தாலும், வாயும் வயிறுமாக இருக்கும் அம்மாவைச் சங்கடப்படுத்தக்கூடாது என்கிற நினைப்பில் மௌனமாக இருந்தாள்.

இதேபோல்... போன வருஷம் அம்மா வயிற்றைத் தள்ளிக் கொண்டு அங்கலாய்ப்பும் எரிச்சலுமாக இருந்தாள். ஒரு முன் காலைப் பொழுது...

கனவா... நினைவா என்று இனம் பிரித்துப் பார்க்க முடியாத தூக்க மயக்கத்தில் கிடந்த நாராயணி, ஏதோ அரவம் கேட்டு விழித்தாள். சுற்றிலும் மனித அரவம். ஒரு சில பெண்களின் கசாகசா சப்தம். காடா விளக்கின் மங்கிய வெளிச்சத்தில் உலவும் அவர்கள்... ஏதோ வேற்று உலக மனிதர்களின் நிழல்களைப்போலத் தோற்றமளித்தனர்.

நாராயணி எழுந்தாள். அம்மா திண்ணையில் படுத்திருப்பதைப் பார்த்தாள். அடிபட்ட புழுவைப்போல அம்மா நெளிந்தாள்.

என்னவோ ஏதோ என்று பதைத்த நாராயணி, நெஞ்சுள் பொங்கிப்பீறிட்ட அழுகையை அடக்கிக்கொண்டு, கூட்டத்தினூடே நுழைந்து பார்த்தாள்.

அம்மா வலி பொறுக்காமல் துடித்தாள். ரத்தம் கசிய உதட்டை அழுந்தக் கடித்துக் கொண்டு... உடம்பின் சகல நரம்புகளும் வேதனை தாங்காமல் விறைத்து விம்ம... தவித்துக் கொண்டிருந்தாள். கைகள் விரிப்புத் துணிகளை வெறியுடன் கவ்வி, நசுக்கின. பெண்கள் சுற்றிலும் துரிதமாக இயங்கினர்.

சில நிமிஷங்கள். பதைப்பும் பயமும் நெஞ்சையழுத்தும் கனத்த நிமிஷங்கள். ஒரு புதிய குரல் அழுகையாக ஒலித்தது. பூமிக்கே புதிய குரல்.

"...ஆம்பளைப் புள்ளை...ஆம்பளைச் சிங்கம், பட்டத்து ராஜா பெறந்துருக்கார்..." சுற்றிலும் ஆனந்தக் கூச்சல், எல்லாப் பெண்களும் குலவையிட்டனர். ஆழ்ந்த நித்திரையில் மூழ்கிக்கிடந்த தெருவையே உசுப்பிவிடும் குதூகலக் குலவை. சாம்ராஜ்யம் கட்டி, சக்கரவர்த்தியாக இருந்து ஆளப்போகும் ஆண்சிங்கத்தை ஈன்ற தாய்க்குப் பாராட்டு வழங்கும் குலவை. வாழ்க்கை முழுதும் ஒளியும் உல்லாசமும் நிறைந்திருக்கட்டுமெனப் பிறந்த புதிய ஜீவனை வாழ்த்தும் குலவை.

மூன்று குலவைகள், ஆனந்த கீதமாக எழும்பி, காலை நேரத்து அமைதியை உல்லாசமாக்கிவிட்டு அடங்கியது.....

......."என்னடி, இப்படி நிக்கிறே?" பழைய இனிய நினைவுகளில் மிதந்த நாராயணி, அம்மாவின் அதட்டும் குரலால் பிரக்ஞையுற்றாள். "போய், உங்கய்யாவைக் கூட்டிட்டுவா..." என்று வீரம்மா விரட்டினாள்.

வெளியே வந்த நாராயணியை, எருமைமாடு காதுகளைத் தூக்கி நிமிர்த்துக்கொண்டு.... பார்த்தது. ஓர் எதிர்பார்ப்புடன் கனத்து வாயைத் திறந்து "ம் ம்மே ஏ-க் க்க்" என்றது. அதன் தலையை அன்புடன் தடவினாள். ஈரமும், மினுமினுப்பும் இருந்த வாயின் மிருதுவான பாகத்தைத் தடவினாள்.

"என்னடீ... போகலீயா?" அம்மாவின் அதட்டல் முதுகில் அறைந்து விரட்ட, மனசில்லாமல் நகன்றாள்.

எதிரே ராமசாமி வந்தான். வழக்கம்போல பீடியைக் குடித்துக்கொண்டு வந்தான். உடம்பின் உறுப்புகள் ஒவ்வொன்றும் பிணங்கிக் கொண்டதுபோல முறையற்றிருந்தன.

நடக்கும்போது கால்கள் ஏதோ ஒரு வித்யாசமான முறையில் வளைந்தது. கைவீசும்போது... முழுங்கையின் வளைவு நிரந்தர வளைசலாகத் தெரிந்தது. சற்றுக் கூனல்.

''என்னம்மா நாராயணி?'' காந்தலான எச்சிலை, 'புளிச்' சிட்டான். ''அம்மா கூப்பிட்டாள்.''

நிறைமாத கர்ப்பிணியான தனது மனைவியின் அழைப்பு என்றதும், மனது ஜில்லிட்டது. ஏதோ ஓர் பதைப்பு. ''ஏன்? எதுக்கு?'' ஆவலும், அவசரமும், கேள்வியில் எதிரொலித்தது.

அந்த ஆவலும், அவசரமும், நாராயணிக்குப் பொருத்தமற்றதாக - சலிப்பாக இருந்தது.

''சும்மாதான்'' என்றாள். ராமசாமியின் வேகம் அடங்கி...சமனமாகி ''சரி சரி, வா...'' என்றான். வீடு நெருங்கியது.

அய்யாவைக் கண்டதும் அம்மா புலம்ப ஆரம்பித்தாள். நோக்கின்றி எங்கெங்கோ நீண்டது. கடைசியில் ''இப்ப எதுக்கு மாட்டைப் பிடிச்சுக் கட்டணும்? நல்லபடியா பெத்தெடுத்து - நா எந்திச்ச பிறகு மாடு பிடிக்கலாமில்லே? இப்ப மாட்டைப் பிடிச்சாச்சு. புல்லுக்கு யார் போறதாம்?''

ராமசாமி, நீண்ட மௌனத்தை உடைத்துக்கொண்டு நிதானமாக சமாதானம் கூறினான்.

''சும்மாயிரம்மா... ஆயிரம் ரூபாய்க்கு இப்படிப்பட்ட சினைமாடு எப்பவும் கிடைக்குமாக்கும்? ஏதோ பெத்த பொண்ணைக் கரையேத்தணும்கிற அவசரத்தாலே பொன்னையா... இந்த மாட்டை இந்த விலைக்குக் கொடுத்தாரு. நல்ல ஜாதி. பொட்டைக்கன்னு போடுற மாடு. பாலும் நாலு லிட்டருக்குக் குறையாது. இப்பேர்ப்பட்ட ஜாதி மாடு கிடைக்கும்போது விட்டுட்டா... நினைச்ச நேரத்துல மடியிலே ரூபாயைக் கட்டிக்கிட்டு அலைஞ்சாலும் கிடைக்குமாக்கும்?''

தன் பக்க நியாயத்தை விளக்குவதில் வேகமாக இருந்த அய்யாவின் பேச்சு, நாராயணிக்கு இனித்தது. குதூகலமாக இருந்தது.

''அதெல்லாம் சரித்தான்... புல்லுக்கு எங்க போறது?'' வீரம்மா தனது 'பிடி'யை விடாமல் கேட்டாள்.

''போம்மா... புல்லுக்கு மலைக்கா போவாக? இதோ நா போறேன். அஞ்சு நிமிஷத்துலே புல்லுக்கட்டோடு வாரேன். நாராயணி, அய்யாவுக்குக் கஞ்சி ஊத்து.''

அலட்சியமாகப் பேசித் தைரியம் கூறிய ராமாசாமி, தலையில் சுற்றியிருந்த துண்டை உருவி உதறித் தோளில் போட்டுக்கொண்டு, கைகால் கழுவிக் கொள்ள 'வெளிப்பானை'க்குப் போனான். சிறுமி நாராயணி வட்டிலைக் கழுவினாள்.

நாராயணி ஊற்றிவைத்த கஞ்சியின் முன் அமர்ந்து, மனைவியை ஏறிட்டுப் பார்த்தான் ராமசாமி.

"நா சாயங்காலம் திருவேங்கடம் போறேன்."

"எதுக்கு, சினிமாவுக்கா?" கேள்வியில் கண்டனமும், குத்தலும் வெளிப்பட்டன.

"உனக்கு எப்பவும் இதே நினைப்பு. நாந்தான் கேக்கிறேன், சினிமா பாக்கிறது தப்பா?"

"ம்ஹ்ம்..." அம்மாவின் உறுமல் நாராயணிக்கு எரிச்சலாக இருந்தது. ராமசாமி சமாதானம் கூறினான்.

"இல்லே, வீரம்மா...திருவேங்கடம் போய் உனக்குப் பிள்ளைப்பேறு சாமான் வாங்கணும். எருமைக்குக் கொஞ்சம் பருத்தி விதையும், புண்ணாக்கு தவிடும் வாங்கிட்டு வரணும்."

"இன்னிக்குத்தான் போகணுமா? நாளைக்குப் போனா ஆகாதா?"

"நாளை என்னென்ன ஜோலி இருக்குமோ? இன்னிக்கே போய்ட்டு வந்தால்தான் நல்லது..."

அம்மா, சமாதானப்பட்ட அடையாளத்தில் மௌனமானாள். இவ்வளவு பேசியதில் ஏற்பட்ட களைப்புடன், உஸ்ஸென்ற நீண்ட பெருமூச்சுடன் கண்ணை மூடிச் சுவரில் சாய்ந்தாள்.

அய்யா, வயிற்றைக் கஞ்சியும் நீருமாக நிரப்பிக் கொண்டு, பீடியில் நெருப்பை ஏற்றிக்கொண்டு அரிவாளும் கையுமாக வெளியேறிய பிறகு-

"நானும் வயிற்றைத் தள்ளிக்கிட்டு உக்காந்துட்டேன். பூதம் மாதிரி ஒரு மாட்டையும் பிடிச்சுக் கட்டிப் போட்டாச்சு. பாவம், இந்த மனுஷன். எல்லா வேலைகளையும் ஒத்தையாளாக இருந்து சுமந்து தவிக்கிறாரு. ம் ஹூம்... அவருக்குத்தான் எம்புட்டுக் கஷ்டம்!"

கனிவும் அன்பும் அடர்ந்த அம்மாவின் இந்த முணுமுணுப்பு, நாராயணிக்கு ஆச்சரியத்தைத் தந்தது.

எரிச்சலும் கோபமுமாக இந்நேரம்வரை கனல் பறத்திய அம்மாவுக்கும், இந்தக் கனிந்த அம்மாவுக்கும் எத்தனை வித்தியாசம்! கனிந்த இந்த அம்மாவைப் பார்க்க அவளுக்குப் பிடித்தது. அவளைச் சேர்த்துக் கட்டிக்கொண்டு சிரிக்கணும்போல மனதும் உடம்பும் துடித்தன.

"அம்மா..."

"என்ன நாராயணி?" மனசின் கனிவு மேலும் குழைந்திருப்பதை உணர்ந்தாள். நீண்ட நேரமாக நெஞ்சுள் உறுத்திக்கொண்டிருந்த சந்தேகத்தைக் கேள்வியாக்கினாள்.

"ஏம்மா...மாடு பொட்டைக் கண்ணு போட்டாத்தான் நல்லதா?"

"ஆமாடி...எருமை பொட்டைக் கண்ணு போட்டா வளர்க்கலாம். அதுவும் சினையாகி கண்ணு போடும். வாழையடி வாழையா வம்சம் தழைக்கும். நமக்கும் வளர்த்ததுக்குப் பலனாக ஆயிரம் ரெண்டாயிரம் கெடைக்கும். கெடாக்கன்னு போட்டா...... எதுக்காகும்? மாடு பால் தர வரைக்கும் ஏனோதானோன்னு வளர்த்துட்டு, அடிமாடா சக்கிலியனுக்கு அஞ்சோ பத்துக்கோ விக்க வேண்டியதுதான். ஏதோ... முத்துக்காளை பாண்டியன் சாமி புண்ணியத்திலே, நம்ம மாடு பொட்டைக்கன்னு போட்டா... உங்கய்யா படுற பாட்டுக்குப் பலன் கெடைக்கும்...ம்ஹூம்... எப்படி விட்டிருக்கானோ... சாமி."

நாராயணிக்குப் புரிவது போலவும், புரியாதது போலவும் ஜாலம் காட்டியது. ஆனால் அதற்கும் மேலாகக் கேள்வி கேட்டால், அம்மாவுக்கு எரிச்சல் வந்தாலும் வந்துவிடும். பாவம்... அவளுக்கு வயிற்றில் சுமை...! இவ்வளவு பெரிய சுமை... அவளாலே எப்படித் தாங்க முடியுது?

சிவப்பை உதிர்த்துவிட்டு, சூரியன் வெளுப்பாக்கிக் கொண்டு மேலேறினான். உஷ்ணத்தை அறிமுகப்படுத்த ஆரம்பித்துவிட்டான்.

எருமை, கட்டுத்தரையில் இருப்புக் கொள்ளாமல் அலை பாய்ந்தது. வயிறும், பின்புறமும் விம்மிவிம்மித் தணிந்தது. வலி பொறுக்க முடியாமல் தலையை வெறியுடன் ஆட்டியது. கட்டுத்தரையில் கொம்புகள் மோதின. 'சட்டேர் சட்டேர்' என்ற ஓசை, கொடூரமாய் ஒலித்தது.

'ம் ம்மே ஏ க் க் க்...ம் ம் மே ஏ க் க் க்' மாடு வேதனை தாங்காமல் தொடர்ச்சியாகக் கதறியது. அதன் கரகரப்பான குரலில், அளவில்லாத துன்பமும் சோகமும் தெரிந்தது.

வீரம்மா, 'அய்யாவை அழைத்து வரும்படி' நாராயணியைத் துரிதப்படுத்தினாள்.

"மாடு கதறுது...கன்னு போடப்போகுது...அய்யாவைக் கூட்டிட்டு வா...ஓடு ஓடு, சீக்கிரம்!"

குதூகலம், நாராயணியின் இதயத்தைக் கவ்விக் கொண்டது. அவள் மனம் சிறகு முளைத்து, வானத்தில் உல்லாசமாகப் பறந்தது. 'கன்னு போடப் போகுது...கன்னு போடப் போகுது...' என்ற நினைப்பு, உற்சாக வேகத்தில் உதட்டில் நிரந்தர முணுமுணுப்பாகத் தங்கிவிட்டது.

சதையிலும் ரத்தத்திலுமிருந்து உதயமாகி, சதையும் ரத்தமுமான ஓர் உருவமாக புதிய உயிராக வெளிவரப் போகும் கன்றைப் பற்றிய அவளது கற்பனை எண்ணங்கள்... ஆவலைத் தூண்டியது.

அந்தக் கன்றைப் பார்க்கணும்ங்கிற விருப்பம், ஒரு பேயாக அவளைப் பிடித்து ஆட்டியது.

ராமசாமி வந்தான். மாடு, வேதனை தாங்க முடியாமல் கதறியது. கால்களை மாற்றி மாற்றி வைத்து அலைபாய்ந்தது. அதன் இரண்டு பெரிய கண்களிலும் கரிய நீர்க்கோடு... அதன் உடல், வேதனைச் சோகமாக வழிந்தது. சற்று நேரத்தில்,

ஒரு புதிய ஜீவன், இதுவரை பார்த்தறியாத சூரியப் பிரகாசத்தையும், காற்றையும் உணர்ந்தது.

"பொட்டைக்கன்னு போட்டிருக்கு."

ராமசாமியின் ஆனந்த அறிவிப்பு, நாராயணியின் மனதில் உற்சாகப் பிரவாகத்தை மடை திறந்துவிட்டது.

"பொட்டைக் கன்னுதான் போட்டிருக்கு..." என்பதை உடைந்த இசைத்தட்டுப் போல, நாராயணி ஓயாமல் உல்லாசக் குரலில் கத்தினாள். அம்மாவின் முகத்தில்கூட சந்தோஷ வெளிச்சம் படர்ந்திருப்பதைப் பார்த்தாள். அய்யாவிடம் அந்தச் சந்தோஷம் சுடர்விட்டுப் பிரகாசித்தது. வீட்டின் ஒவ்வொரு மூலையிலும் ஒளி துலங்கி, சுற்றுப்புறமே ஆனந்தக் களியாட்டம் போடுவது போலிருந்தது.

நாராயணிக்கு...அம்மா, ஆண் பிள்ளை பெற்ற தினத்தில் வீட்டில் கேட்ட மகிழ்ச்சி நாதம், நினைவில் கேட்டது.

இருபது நாட்கள் ஓடியிருக்கும். ஒரு மாலைப்பொழுது. சூரியன் சிவந்து, பெரியதாகி மறையத் தயாராகிவிட்டான். தெருவில்

சிறுமிகளுடன் விளையாடிப் பொழுதைக் கழித்து விட்டுப் பசியுடன் வீட்டுக்கு வந்தாள்.

வீட்டுக்குள்ளிருந்து சில பெண்கள் வந்து-போய்க் கொண்டிருந்தனர். அவளுக்குத் திகீரென்றது.

இதே போலத்தான்... நாலைந்து மாதங்களுக்கு முன்பு ஆறு மாத வயதுள்ள தம்பி இறந்தபோது... கனத்த துக்கத்துடன் பெண்கள் வந்து போய்க்கொண்டிருந்தனர்.

அன்று அம்மா அழுத அழுகை, அதைப்பார்த்துத் தான் அழுதது, அய்யாவின் முகத்தில் மண்டியிருந்த சோக இருள், வீடு முழுக்க நிரம்பித் திணறடித்த துக்க வெள்ளம்.

எல்லாம் ஒரு கணத்தில் ஒரு மின்னலாக ஓடி, நாராயணியைப் பயமுறுத்தியது. அச்சத்தில் ஒளிர்ந்து ஜில்லிட்ட நெஞ்சுடன், உள்ளே நுழைந்தாள்.

அம்மா திண்ணையில் படுத்திருந்தாள். பிரசவ வேதனையில் துடித்துக்கொண்டிருந்தாள். பெண்கள் அங்கும் இங்குமாக துரிதகதியில் இயங்கிக் கொண்டிருந்தனர். நல்ல வேளை பயமில்லை.

பயம் தணிந்து போனாலும்... வேறுவிதமான பதைப்புடன், திகைப்புடன் நின்றாள் நாராயணி.

ஒரு குழந்தையின் அழுகை-கீச்சுக் குரலாகக் கேட்டது. பூமிக்கே புதிய குரல் அவள் செவியை ஸ்பரிசித்து, நெஞ்சில் இனிப்பாகப் பரவிய இனிய குரல்.

இதோ குலவைச் சப்தம் கேட்கப்போகிறது... குழந்தையை வாழ்த்தி... குழந்தை பெற்ற பாக்யவதியைப் பாராட்டி... ஆனந்த கீதமாகக் குலவை ஒலிக்கப்போகிறது... தெருவின் கதவையே ஈர்த்து விடக்கூடிய குலவை கேட்கப்போகிறது.

கனத்த எதிர்பார்ப்புடன் ஆவலில் நெஞ்சு துடிக்கக் காத்திருந்த நாராயணி, சில நிமிஷங்களைச் சிரமப்பட்டுப் பொறுத்துக் கொண்டாள். ஆனால்... ஏனோ... எந்தப் பெண்ணும் குலவை போடும் ஞாபகமே இருந்ததாகத் தெரியவில்லை. நாராயணியின் பிஞ்சு இருதயம், ஏமாற்றத்தை ஜீரணிக்க முடியாமல் திணறியது. முகம் கறுத்து, மனசு குழம்பிக் கிடந்த நாராயணியிடம் ஒரு கிழவி சொன்னாள்.

''அடியே நாராயணி, உனக்குத் தங்கச்சி பொறந்திருக்கு.''

''தங்கச்சியா?'' நெஞ்சின் ஒவ்வோர் பகுதியிலும் முட்டிமோதிய மகிழ்ச்சி... மடை உடைத்துக்கொண்டது. முகமெல்லாம் ஒளிதுலங்க, வாய்மலர்ந்தாள்.

ஆனால், கிழவி சலிப்புடன் எதிரொலித்தாள்.

"ஆமாடி, பொட்டச்சிதான் பொறந்திருக்கு...பாவம், ராமசாமி! அவனுக்கு இன்னொரு பத்தாயிர ரூபாய் சுமை...ம் ஹூம். இந்தப் பொம்பளைப் புள்ளை...இந்தப் பூமியிலே எப்படிக் கஷ்டப்படப் போகுதோ...?"

நாராயணி துணுக்குற்றாள். இதில் கவலைப்படவும், சலித்துக் கொள்ளவும் என்ன இருக்கு?

அய்யாவைப் பார்த்தாள். அவன் முகத்திலும் இருள். கண்களில் சோகம் நிழலாகப் படிந்திருந்தது. அம்மாவின் முகத்தில்கூட, அன்று தம்பியைப் பெற்றெடுத்த சமயத்தில் இருந்த பெருமிதத்தையும், சந்தோஷத்தையும் காணவில்லை. ஒரு கசப்பை விழுங்கும் பாவனை தெரிந்தது.

தம்பி இறந்த நாள் நினைவுக்கு வந்தது. அன்றைய துக்க நிழல், இன்னும் வீடு முழுக்க நிரம்பியிருப்பது போலிருந்தது. நாராயணி திணறினாள். தூக்கக் கலக்கத்தில் எதிலோ முட்டிக் கொண்டது போன்றதோர் திகைப்பு. இது என்ன? ஏன்? புரியவில்லை. குழப்பம், மனசை ஒரு இருட்டாகச் சூழ்ந்தது.

இது என்ன? ஏன்?

எருமை மாடு பொட்டைக்கன்னு போட்டா, வீடெல்லாம் சந்தோஷ ஆரவாரம். அம்மா பொட்டை பிள்ளை பெத்தா...வீடெல்லாம் துக்கமா? இதுஎன்ன? பொம்பளைப் பிள்ளைன்னா...அத்தனை மட்டமா?

கண்ணில் நீர் முட்டியது. ஏதோ ஒரு சிறுமி தன்னை மானக்கேடாக வைத்துவிட்டாற்போன்ற அவமான உணர்ச்சி அவளைக் குத்தியது.

மனம் விம்மியது. நெஞ்சுக்குள் எங்கோ ஒரு பகுதி நொறுங்கிச் சரிந்தது.

வெளியே வந்தாள். எருமை மாட்டைப் பார்த்தாள். கனத்த செவிகளைத் தூக்கிக் கொண்டு, தனது கன்றைப் பாசத்துடன் நுகர்ந்து கொண்டிருந்த எருமையின் முகத்தில் ததும்பிய பெருமிதத்தைப் பார்த்தாள்.

அவள் மனதில், இனம் புரியாத பொறாமை தலைகாட்டியது.

–செம்மலர். 1985



# 2. நிறம் மாறும் நிஜங்கள்

''என்ன, உப்பு ஏவாரமெல்லாம் எப்படியிருக்கு? நல்லாருக்கா?''

''ஏதோ இருக்கு...மோசமில்லே...''

''நீங்க உரக்கடை ஆரம்பிச்ச நேரம்... நல்ல மழை பேய்ஞ்சிருக்கு. விவசாய வேலை நல்லபடியா நடக்கும். உரம் நல்லா விக்குமய்யா...''

''விக்கத்தான் செய்யும். ஆனா, சம்சாரி கையிலே 'பசை' இல்லியே! வெளைஞ்ச வத்தலுக்கு வெலையில்லே, வெலையிருக்குற பருத்தி வெளைச்சலில்லே. என்ன செய்றது, சம்சாரிக பொழப்பு...உப்பு விக்கப்போனா மழை பேயுது, மாவு விக்கப் போனா காத்தடிக்குதுங்கிற கதையாப் போச்சு.''

''நீ சொல்றது நெசந்தான் தம்பி. ஆனா... மழை பேஞ்ச பெறகு, 'பசை'யில்லேங்குறதுக்காக வெள்ளாம செய்யாம இருக்க முடியுமா? தாலிக் கொடியை அத்து வித்தாச்சும்... வெதைச்சுப் போடணுமே......ம்ம்...இதென்ன மூடைக தம்பி''

''டி.ஏ.பி. மூடைக.''

''இது என்ன அட்டியல்...? யூரியா மூடைகளா?''

''ஆமண்ணாச்சி.''

''இந்த மூடைக என்னது தம்பி?''

''இது... எண்ணூத்திப் பத்து தூள் மூடைக.''

''நெல்லுக்குப் பனிப்பதத்துலே வெதைக்கிற தூசி மருந்தா...? ம்ஹூம்... கடை வைச்சு ஒரு மாசமாகுதே... ஏதாச்சும் லாபம் தெரியுதா?''

''என்ன லாபம்! மூடைக்கு ஒரு ரூவா, முக்கா ரூவாதான் மிச்சமிருக்கும். என்னத்தையோ சில்லறைக்கு ரெண்டு மூடையாச்சும் வித்தாத்தான்...ரெண்டு துட்டைப் பாக்க முடியும்.''

''அது சரிதான்... காத்துக் கெடந்ததுக்குக் காசு பணம் இல்லாமலா போயிடும்? ஆமா தம்பி...நம்ம ஊர் ஏவாரத்துல கடன் ரொம்பப் போகுமே.''

''கேக்கத்தான் செய்றாக... ஆனா, குடுக்கிற சக்தி ஏங்கிட்ட இல்லையே.''

''கடன் குடுக்காம ஏவாரம் விக்குறது செரமமாச்சே.''

''வித்த மட்டும் போதும் அண்ணாச்சி. ரொக்கத்துக்குத்தான் ஏவாரம். கொஞ்ச ரூவாயை வைச்சுதான் கடையை துவக்கியிருக்கு. அதுக்குள்ளேதான் வண்டியை ஓட்டணும். பெறகு எதை வைச்சு கடன் குடுக்குறது? கடன் குடுத்தா கடையை இழுத்து மூடிட்டிப் போக வேண்டியதுதான்.''

''அதுவும் அப்படியிருக்கோ... உர மூடைக மொத்தமா எடுப்பீகளே, அங்க கொஞ்சம் கடன் தர மாட்டாகளோ?''

''பைசா மாத்தி எண்ணி வைச்சுட்டுத்தான் மூடையிலே கை வைக்க முடியும். அங்க அவ்வளவு கண்டிஷன்.''

''இங்க எப்படியும்...முகம் பார்த்து, ஆள் பார்த்து ஒன்னு ரெண்டு புள்ளிகளுக்காச்சும்...ஒரு நா ரெண்டு நா தவணைக்காவது விட்டுப் பிடிக்க வேண்டியிருக்குமே.''

''அது ஆளைப் பொறுத்து... ஒரு நா ரெண்டு நாள்னா சமாளிச்சுக்கலாம்.''

''அதானே பார்த்தேன்... கடன் குடுத்து வாங்காம கிராமத்துலே முடியாதே...''

''ம்ச்சூம்... அதைப் பாத்துக்கலாம்.''

''ஆனா... நம்ம ஊருக்கு உங்க உரக்கடை ரொம்ப அவசியம் தம்பி. உழவை, நடுவையை வைச்சிட்டு வந்து 'அவக்'குன்னு மூடையைத் தூக்கிக்கிட்டுப் புஞ்சைக்குப் போயிடலாம். இங்க கடையில்லேன்னா... ஆத்திரம் அவசரத்துக்கு திருவேங்கடம்தானே ஓடணும்? பணத்தை எண்ணிக் குடுத்தாலும், மூடையைத் தூக்கி, அதுக்கொரு ஆளைப் பாத்து, வீடு கொண்டு வந்து சேர்க்கிறதுக்குள்ளே, 'ஆத்தாடி,அம்மாடி'ன்னு ஆயிப்போகுமே... நீங்க கடை வைச்சது, நம்ம ஊரு சம்சாரிகளுக்கும் 'கைவாப்பு'லே மூடைக வந்த மாதிரி... உங்களுக்கும் ஒரு தொழில் நடந்த மாதிரி...''

''ஆமண்ணாச்சி... உங்களுக்கு என்ன, உரம் வேணுமா?''

''நெல்லுக்கு இருபது கிலோ யூரியா உப்பு வேணும். மொளகாய்க்கு உழவுலே போட ஒரு மூடை டி.ஏ.பி. வேணும்.''

''வாங்கிட்டுப் போறீங்களா? பெறகு வந்து வாங்கிக் கிடுதீகளா?''

''இப்பவே வாங்கிக்கிறேன். ஆனா, ரூவா... பால் ரூவாயிலே தான் கெடைக்கும் தம்பி.''

''கடனா? தாங்காது அண்ணாச்சி, நம்மாலே.''

''பால் ரூவாயிலே நமக்கு முன்னூத்தைம்பதுக்கு மேலே வரும். குடுங்க. ஒத்த வரியிலே குடுத்துடுதேன் தம்பி...''

''இல்லே...நீங்க குடுத்துருவீக. அதுவரைக்கும் தாங்குற நெலமை நம்மகிட்டே இல்லே.''

''பால் ரூபா வர்றவரைக்கும் தாக்குபிடிக்காது. பயிர் நாசமாயிரும். கடன் குடுங்க.''

''இல்லே... சரிப்படாது... வருத்தப்படாதீக அண்ணாச்சி.''

''ம்ம்...ஹும்.......''

''...........''

''நாளைக் கழிச்சு காலையிலே தந்தாப் போதுமா, தம்பி?''

''போதும். ஆனா, சொன்னா சொன்னபடி இருக்கணும். இழுத்தடிச்சு, ஏவாரத்தைப் பாழாக்கிடக்கூடாது.''

''சரி தம்பி... உரம் குடுங்க. ஆட்டு ஏவாரிகிட்டே ரூவா கேட்டுருக்கேன். அவர்கிட்டே வாங்கி... உங்களுக்குக் குடுத்துருதேன்.''

''சரிண்ணாச்சி. ஆனா... சொன்ன சொல்லு சுத்தமா யிருக்கணும். அப்புறம் 'அது, இது'ன்னு சொல்லக்கூடாது.''

''அப்படியெல்லாம் செய்வேனா? சொல்லுலே என்ன தம்பி இருக்கு? மனசுலே சுத்தமும், நேர்மையும் இருக்கணும். கரெக்டா தாரேன்.''

***

''என்னண்ணாச்சி, உங்களைத்தானே தேடிக்கிட்டு வாரேன்.''

''என்ன தம்பி?''

''முந்தா நாள் காலையிலே ரூவா தாரேன்னு உரம் தூக்கிட்டுப் போனீக, இன்னும் பணம் தரல்லியே...''

''ஆட்டு ஏவாரி தர்ரேன்னு சொல்லியிருந்தாரு. கோவில்பட்டிச் சந்தைக்குப் போன அவரு, இன்னும் வந்து சேரலே. அவரு வீட்டுக்கு, நானும் நூறுதரம் நடந்துட்டேன். இன்னும் வரலே.''

"அதுக்கு நா என்ன செய்ய? எனக்குப் பணம் வந்து சேரணும். நா சரக்கு வாங்கப் போகணும்லே?"

"பால் சொஸைட்டி செக்ரட்டரி ஆசைத்தம்பிகிட்டே முன் கூட்டி எரநூறு ரூவா கேட்டுருக்கேன். இன்னிக்கு பேங்க்குக்குப் போய்ட்டு வந்து தாரதாக சொல்லியிருக்கான். வந்தவுடனே சாயங்காலம் தாரேன். ஆட்டு ஏவாரி வந்துட்டாலும், அதுக்குள்ளே வாங்கித் தந்துடுறேன். என்ன தம்பி?"

"ம்ச்ச்சூம்... வேறன்ன செய்ய...? எப்படியும் சீக்கிரமா குடுங்க."

***

"உங்களைத் தேடி மூணுநாளா அலையுதேன். ஆளையே பாக்க முடியலியே."

நடுவை நடக்குது தம்பி. ஆளுக கெடைக்கல. ஆள் பாக்கணும். நாத்தைப் பிடுங்கி நட்டிவைச்சுட்டோம்னா... கவலை ஒழிஞ்சது பாருங்க."

"நேத்து ராத்திரி அடிச்ச முரட்டு மழை... நடுவைக்குப் பொருத்தமாயிருக்குமே."

"ஆமா தம்பி, நீங்க உரமுடை குடுத்தீக. நெல்லுக்கும் வெள்ளைப் பயிரு விழாம உரம் போட்டாச்சு. டி.ஏ.பி. யை போட்டு உழவடிச்சு வச்சதாலே, மழை பேயவும், இந்தா நடுவை முடிச்சாச்சு."

"நீங்க காரியமா முடிச்சுக்கிட்டீக. சாயங்காலம் தாரேன்னு சொல்லி மூணு நாளாச்சு. என்னை ஏமாத்துதீகளே..."

"ஏமாத்து ஒன்னும் இல்லே தம்பி. ஆட்டு ஏவாரிகிட்டேயிருந்து வரவேண்டியது, இன்னும் வந்து சேரலை. மொளகா நாத்து முன்னூறு ரூவாய்க்கு வித்துருக்கு. அந்தப் பணமும் கைக்கு வந்து சேரலை. பால் சொஸைட்டி செக்ரட்டரி பேங்குக்குப் போனவன், சொஸைட்டியிலேயிருந்து செக்கு வராம, 'பணம் கிடையாது'ன்னு கை விரிச்சுட்டான். வரவேண்டிய பணம் வந்து சேந்துட்டா...ஒரு நிமிஷம்கூட நிறுத்தமாட்டேன் தம்பி. கடன் குடுத்தாலும், வழி நடந்தாகணும். நாளைக்கு உங்க முகத்தை எப்படி ஏறெடுத்துப் பாக்குறது?"

"சரி...இன்னிக்குச் சாயங்காலமாச்சும் தாரீகளா, இல்லே இன்னும் இழுத்தடிக்கப் போறீகளா?"

''சாயங்காலம் எதுக்கு? இந்தாங்க தம்பி, இப்பவே வாங்கிக்கங்க. எம்புட்டு ரூவா? நூத்து எம்பத்தி ஒன்னுதானே? இந்தாங்க எரநூறு''

''மிச்ச சில்லறை இல்லியே...''

''ஓடியா போகுது? நாளைக்குக் குடுங்களேன். நீங்க நல்ல கட்டத்துலே குடுத்து உதவுனீகளே, அதுதானே தம்பி முக்கியம்!''

''நாளைக் கழிச்சுத் தாரேன்னு சொல்லி வாங்கிக்கிட்டு, ஏழெட்டு நாளைக்கு இழுத்தடிச்சுட்டீகளே அண்ணாச்சி. யார் வார்த்தையையும் நம்புறதுக்கு இது காலமில்லே!''

''அது உங்க கணக்கு. பால் ரூவாயிலே தாரேன்னு உண்மையை நேர்மையா சொன்னேன். ஒத்துக்க மாட்டேனுட்டீக. என்ன செய்றது, ஏழை சம்சாரிக பாடு இப்படியிருக்கு, இந்தப்பாடு பட வேண்டியிருக்கு...நீங்களும் சரக்குக்குப் போறேன்னு அவசரமா சொன்னீக. போகலே. நேத்துத்தான் போனீக.''

''எல்லாரும் மாய்மாலம்தான் செய்ய வேண்டியதிருக்கு.''

''என்ன செய்றது தம்பி... உண்மையைச் சொல்லி நேர்மையா வாழனும்ங்கிற நெனைப்பைக்கூட வாழவிடாத ஒலகம் தம்பி! அதுசரி. பூச்சி கொல்லி மருந்து கொண்டு வரப்போறீகளா, தம்பி?''

''நாளைக்கு சரக்குக்குப் போறேன். வாங்கிட்டு வாரேன் அண்ணாச்சி.''

''கொண்டு வாங்க தம்பி, களை வெட்டிட்டு மருந்தடிக்கணுமில்லே?''

–செம்மலர். 1988.



# 3. அரும்பு

சாரல் காற்று குளிர்ச்சியை வாரியிறைத்தது. கூதலடிக்கிறது. அப்படியே மூடிக்கொண்டு முடங்கிக்கொள்ள ஆசைப்படுகிற குழந்தை மனசு. 'நிமாண்ட் நாழியிலே ரெடியாகு'. சாட்டைக் குச்சியாக மனசுக்குள் குத்துகிற ஏஜெண்டின் குரல்.

உறக்கத்துக்கு ஏங்கித் தவித்த மனசை, அம்மாவின் இருமல் சத்தம் திசை திருப்பி வழிநடத்தியது. அடுப்புச் சாம்பலில் பல்லைத் தேய்த்தாள். கஞ்சியைக் குடித்தாள். தலையில் எண்ணெய் வைத்து, பின்னிக் கொண்டாள். கணக்குச் சிட்டையையும், சில்லறை டப்பாவையும் எடுத்துக்கொண்டாள். சோறு வைத்த தூக்குச் சட்டியை நீட்டினாள், வேலாயி.

பாவம், அம்மா! நோய் அவளைத் துளைத்துத் துப்பட்டி யெடுத்துவிட்டது. தசையையெல்லாம் கரைத்துக் குடித்துவிட்டு, எலும்பும் தோலுமாக்கிவிட்டது. நிற்கக்கூடத் தெம்பில்லாமல், இடது கையால் சுவரைப் பிடித்துக் கொள்கிறாள்.

''நேத்து எம்புட்டுக் கட்டை அடுக்கினே, செல்லம்?''

''இருவத்தி ஒண்ணும்மா.''

''இன்னிக்கு சனிக்கிழமை. நாளை லீவ். திங்கட்கிழமை என்ன செய்யப்போறே?''

அடிபட்டவளாய்த் திகைத்து நிமிர்ந்தாள், செல்வி. சட்டென்று வாடிக் கறுக்கிற பிஞ்சு முகம். சிறு கண்களில் கலக்கம். இமைகளில் ஈர மினுமினுப்பு. எதுவும் சொல்லத் திசையற்றுப் போய், மௌனத்தில் உறைந்தாள்.

வேலாயியின் குலை பதறியது. பெற்ற மனசு பதைத்தது. மகளின் தலையை அன்புடன் தடவினாள். அவள் கண்களில், மாலை மாலையாகக் கண்ணீர்.

''ஏசெண்டுத் தம்பி கண்டிசனா சொல்லிருச்சே.'' மனசைப் பிசைகிற வேதனையோடும் புலம்பினாள், வேலாயி. தாயைப் பார்த்து மனம் கலங்கி, பீதியுடன் நிற்கிற எட்டு வயசுச் சிறுமி செல்வி.

''செடிக்குச் செடியா உக்காந்து பறக்கிற தட்டானைப்போல... தெருவுலே ஓடி விளையாட வேண்டிய சின்ன அரும்பு.

விடியுறதுக்கு முந்திப் போய், பாடுபட்டு, பொழுதடைஞ்சு இருட்டுனப் பிறகு, வீடு வந்து சேருகிற கொடுமை!''

மனக் குமுறல் தாளாமல், மார்பில் மடேரென்று அடித்துக் கொண்டாள், வேலாயி. ''அடப் பாதரவே, கூத்துவன் என்னை ஒடிச்சுப் போட்டுட்டு, இப்படிக் கூத்துப் பார்க்கானே! கண்ணு முழியாத இந்தக் குஞ்சு ஒழைச்சுக் காலம் ஓடவேண்டியதாயிடுச்சே. அந்த 'ஒழக்கரிசிச் சீவன்' இருந்திருந்தா... நமக்கு இந்தக் கதி வந்திருக்குமா?

வேட்டு வெடித்த கிணற்றுப் பாறையில், நசுங்குண்டு இறந்துபோன புருசனை நினைத்தாள். அந்த இழப்பின் கனபரிமாணம், நொந்துபோன இந்த நேரத்தில் முழுசாகத் தாக்கியது. விசும்பினாள்.

அழுது கதறுகிற அம்மாவைப் பார்க்கச் செல்லியின் மனம் சகிக்கவில்லை. முட்டுகிற விம்மலை அடக்கிக்கொண்டாள்.

''நேரமாச்சும்மா...நா போகட்டா?''

''போறியா? போய்ட்டு வா, கண்ணு. யார்கூடயும் சண்டை கிண்டை போடாம, கருத்தா வேலையைப் பாரம்மா. எல்லாத்தையும் எடுத்துக்கிட்டியா?''

தலையசைத்து விட்டு வாசல்படியைத் தாண்டிய செல்லியை, இருட்டு அப்பிக் கொண்டது. 'நாய் குரைக்குமோ...' பயத்தில் திகைத்துப் போய்த் தேங்கி நின்றாள். நல்லவேளை, மேலத் தெரு முத்துலட்சுமி வந்துவிட்டாள்.

''வாரியா?''

துணை கிடைத்துவிட்டது.

''திங்கட்கிழமைக்கு ஒண்ணும் பதில் சொல்லாமப் போகுது, புள்ளை. என்ன செய்யப் போறாளோ...'' அம்மாவின் புலம்பல் சத்தம், காலை நேர அமைதியில் துல்லியமாகக் துரத்துகிறது.

தெருவில் ஒரு சுடுகுஞ்சுகூட விழித்திருக்கவில்லை. நாய்கள் கூடக் கூதலடிக்காத இடம் பார்த்துப் போய் முடங்கிக்கொண்டன. அத்துவானக் காட்டில், ஒத்தையில் நடப்பது போலிருந்தது, செல்லிக்கு.

கீழடி வானம் முகம் சிவக்கத் தொடங்கியது. விடி வெள்ளியைச் சாரல் மேகம் ஒளித்துக்கொண்டது.

கிராமத்தையே கதிகலங்கடிக்கிற மாதிரி...விடாத ஓங்காரமாய் ஹாரன் சத்தம். பஸ் வந்துவிட்டது. செல்லி, நடையை எட்டிப் போட்டாள். முத்துலட்சுமி நடைக்கு ஈடுகொடுக்க முடியவில்லை. சிறுமி குட்டோட்டமாய் ஓடினாள்.

ஏற்கனவே வந்திருந்த பிள்ளைகள், பஸ்ஸுக்குள் ஏறிப் படுத்திருந்தன.

ஓட்டமும் நடையுமாக ஓடிவருகிற இவர்களைப் பார்த்து, கண்டக்டர் கோபமாய் அதட்டினார்.

''என்ன, தேரு மாதிரி ஆடியசைஞ்சி வாரீக? விருட்டுன்னு வாங்க. இன்னும் ஏழு ஊர்கள்லே புள்ளைகளை ஏத்திக்கிட்டு, ஆறு மணிக்குத் தீப்பெட்டியாபீஸ் போய்ச் சேர்ந்தாகணும்.''

இந்த அதட்டல் உருட்டலெல்லாம் செல்லி மாதிரியான சிறுமிகளிடம்தான். தாவணி போட்ட முற்றிய சிறுமிகளிடம், பூப்பெய்திய இளம் பெண்களிடம் தொனியே மாறிவிடும். அவர்களிடம் பேசும்போது, எத்தனை நெளிவு... என்னமாய்ச் சிரிப்பு... எவ்வளவு குழைவு!

அதைப் பார்த்தாலே... செல்லிக்குப் பற்றிக்கொண்டு வரும். கண்டக்டர் கழுத்துக்கு மேலே ஓநாய் மூஞ்சி இருப்பதுபோல மனசுக்குள் பயமாகவும் வெறுப்பாகவும் இருக்கும். காறித் துப்பணும் போல மனசில் தோன்றும்.

தீப்பெட்டியாபீஸுக்குள் போய்விட்டால்... இது போல நிறைய ஓநாய் மூஞ்சிகள்... எச்சில் வடிகிற நாக்குகளோடு ஓநாய்கள்...

செல்லி, பஸ்ஸுக்குள் ஏறி உட்கார்ந்தாள். தாராளமாய் இடம் கிடந்தது. அடுத்த ஊரிலேயே சீட்டுகளெல்லாம், நிரம்பிவிடும். அப்புறம் உள்ள ஊர்களில் ஏறுகிற பிள்ளைகளெல்லாம், ஓவர் லோடுதான்!

மாதாங்கோவில்பட்டியைத் தாண்டுகிறபோது, பஸ்ஸுக்குள் மூச்சுப் போக இடமிருக்காது. புளிச் சிப்பமாகப் பிள்ளைகள் திணிக்கப்பட்டு, கிட்டிக்கப்பட்டு... வியர்த்து, கசங்கி, திணறி...

சில சமயங்களில் ஒன்றிரண்டு பிள்ளைகள், மயக்கமே போட்டுத் துவண்டு விடும்.

மந்தையாடுகளைப் பற்றிக்கொண்டு வருவதைப்போல... குழந்தைகளை நகர்த்திக்கொண்டு பஸ்ஸுக்குள் அடைத்தார். ஏஜெண்ட், தலைகளை எண்ணிப் பார்த்தார்.

''ஒண்ணு குறையுதே, யாரு?''

''ஆவுடைச்சி.''

''அவாதான் சடங்கா(பூப்பெய்து)கிட்டாளே. இன்னும் பானைஞ்சு நாளுக்கு வர மாட்டாளே...'' சொல்லி விட்டுக் கண்டக்டர் அசிங்கமாகக் குறுநகை செய்தான்.

''ஆமா... நாந்தான் அயத்துட்டேன். அப்பச் சரி... வண்டி போகலாம். ரைட்.'' ஏஜெண்ட் இறங்கிக்கொண்டார்.

டிரைவர், சாமி படங்களை - ஸ்டீரிங்கை - எல்லாம் கும்பிட்டு விட்டு, ஸ்டார்ட் பண்ணினார். கிடங்கும் மேடுமான சாலையில், இடமும் வலமுமாய்ப் பஸ் ஆடியசைந்து குலுங்கும்போதெல்லாம்... சிறு பிள்ளைகள் குதூகலமாகச் சிரித்தனர்; கை தட்டினர்; 'ஹோ....ஹோ' வென்ற மழலைக் கூச்சல்கள்...

எரிச்சலில் நெருப்பாகச் சீறினார், டிரைவர்.

''ஏய் குட்டிப் பிசாசுகளா! என்ன இளிப்பு வேண்டிக்கிடக்கு? வாயைப் பொத்திக்கிட்டுச் சும்மா கிடங்க.''

சட்டென்று பஸ்ஸுக்குள் ஏறிக்கொண்ட மௌனத்தின் அழுத்தத்தைத் தாங்க முடியாமல்... டிரைவர், கண்டக்டருடன் பேச்சுக் கொடுத்தார்.

ஜன்னலோரம் உட்கார்ந்திருந்த செல்வி, வெளியே இருட்டையே பார்த்துக் கொண்டிருந்தாள். அவளைத் 'திங்கட்கிழமை' மிரட்டிக் கொண்டிருந்தது. விலகிச்செல்லப் பாதையில்லை. வழிமறித்துக்கொண்டு நிற்கிறது. மென்னியைப் பற்றிக்கொண்டு இறுக்குகிறது.

முந்தா நாள், ராத்திரி எட்டு மணி. இலேசாகச் சாரல் தூறியது. பஸ்ஸிலிருந்து இறங்கிய செல்வி, ஓட்டமும் நடையுமாய் ஓடி வீட்டுக்குள் வந்து விழுந்தாள். பேயின் இறுகலான பிடியிலிருந்து விடுபட்டுத் தாயின் மடியில் வந்து விழுந்த ஆறுதல். மனசுக்குள் சுகமான ஆசுவாசம்.

என்னமோ விசாரித்த அம்மாவுக்குக்கூடப் பதில் சொல்லாமல், மூலையில் சரிந்து உட்கார்ந்துகொண்டு விரலைச் சூப்பினாள். அதட்ட ஆளில்லாத இடம். 'நாய்களா, குச்சியடுக்காம என்ன செய்றீக?', என்று கடித்துக் குதறுகிற நாய்கள் இல்லை. வீடு. தாய்மடி போன்ற வீடு. சுதந்திரமாக, சுகமாக விரலைச் சூப்பினாள்.

அம்மாவைத் தேடிக்கொண்டு ஏஜெண்ட் வந்தார்.

''யக்கா...''

''என்னய்யா, தம்பி'' தள்ளாடித் தவித்து எழுந்தாள், அம்மா.

''செல்லி ஏதாச்சும் சொன்னாளா?''

''இல்லியே... என்னமும் நடந்து போச்சா?'' பதறிப் பதைக்கிற அம்மா. ஆறுதல்படுத்துகிற ஏஜெண்ட். விரலைச் சூப்புகிற இன்ப மயக்கத்தோடு பேச்சைக் கேட்டுக் கொண்டிருந்தாள், செல்லி. மன்சுக்குள் பூரான் ஊர்கிற மாதிரி... மெல்லிய திகில்.

''யக்கா, இப்போ... குளோரைடு கிடைக்கமாட்டேங்குது. ஏகத் தட்டுப்பாடு. நிறையத் தீப்பெட்டியாபீஸ்க மூடிக்கிடக்கு. ஒண்ணு ரெண்டு ஆபீஸ்கள்லேதான் வேலை நடக்குது. வேலைக்கு வர்ற புள்ளைகளைக் குறைக்கச் சொல்லி எங்க மொதலாளி நச்சரிக்காரு.''

வேலாயி, திகிலோடு பார்த்தாள். இருமல் வரப் போவதை உணர்கிறபோது மனசில் ஏற்படுமே, அதே படபடப்பும், பீதியும்!

''ஆனா... நம்ம கிராமங்கள்லே மழை தண்ணியில்லே, வறட்சி. வெள்ளாமை வெளைச்சல் இல்லே. கூலிச் சனங்களுக்குக் காட்டு வேலை ஒண்ணுகூடக் கிடைக்கல்லே. ஆபிஸ் வேலைக்கு 'நா வாரேன், நீ வாரேன்'னு இவுக அலை மோதுறாக.''

''நிலைமை அப்படித்தானே இருக்கு, தம்பி''

''இதுலே இன்னொரு சிக்கல். 'சின்னப் புள்ளைகளை வைச்சு' வேலை வாங்கக்கூடாதுன்னு ஏதோ சட்டம் இருக்காம். அப்பப்ப அதிகாரிமார்க வந்து, புள்ளைக வேலை செய்றதைப் பாத்துட்டு, ஆயிரக் கணக்குலே அவராதம் போட்டுடுறாங்க.''

''அடக் கொடுமையே! பெத்தவுகளைக் காப்பாத்தாத சட்டம், புள்ளைக மேலே இரக்கப்பட்டு, திங்குற சோத்துலே மண்ணைப் போடுதாக்கும்? புள்ளைகளைக் கொடுமைப்படுத்த பெத்த தாய்க்கு ஆசையாகவா இருக்கும்? வவுத்துக் கொடுமை... வறுமைப் பொழைப்பு... வேற புகல் இல்லியே! இதையும் மறிக்கிறாகளாக்கும், பாவிப் பயக?''

''ஆமாக்கா. மொதலாளி கண்டிசனாச் சொல்லிட்டாரு. இந்த வாரத்தோட, நம்ம செல்லி மாதிரியான சின்னப் புள்ளைகளையெல்லாம் நிறுத்தியாகணுமாம்.''

எதிர்பார்த்த இடி,' வேலாயிக்குள் இறங்கியே விட்டது. உள் மனசின் ஆழம்வரை பரவிப் பாய்கிற நடுக்கம். வயிற்றுக்குள் தீக்கோலைச் சொருகுவது போலிருந்தது.

மாடு வைத்து விவசாயம் பார்த்த புருஷன். மாட்டுக்கும் மேலாக ராவும் பகலுமாக உழைத்த புருஷன். எத்தனை விளைய வைத்தாலும், வருஷா வருஷம் மிஞ்சி நின்ற கடன். நிலத்தை விற்று விட்டுக் கூலி வேலைக்குப் போன புருஷன். கிணறு வெட்டிக் கொண்டிருந்தபோது வெடித்த வேட்டில், கருங்கல்லை ரத்தமாக்கி விட்டுப் போய்ச் சேர்ந்த புருஷன்.

நாதியற்றுப் போன குடும்பம். ஓடி வந்து பற்றிக்கொண்ட நோய். உடம்பை ஒடித்துக் கட்டிலில் துடிக்கப் போட்டுவிட்ட நோய்.

செல்வியும் வேலை பார்க்கப் போக முடியாமல் போனால்... வீட்டில் எப்படி அடுப்புப் புகையும்?

நெஞ்சை முட்டிப் பிளக்கிற சோகம். தாட்சண்யம் பாராமல் சப்பென்று அறைகிற அவலம். கண்ணுக்குள் குத்தலெடுக்க, மாலை மாலையாகக் கண்ணீர். உதடுகள் நடுங்கித் துடித்தன.

"தம்பி, வாரத்துக்குத் தொண்ணூறு ரூவா இந்தப் புள்ளை கொண்டு வருது. இதுலேதா ரெண்டு ஜீவனோட ஜீவனம் நடக்குது. இதுக்கு ஒரு மாத்து யோசனை இல்லியா...ய்யா?"

"இருக்கு...ஆனா, நீங்க செய்யணுமே?"

"சொல்லுய்யா..."

"நம்ம செல்லி சின்னப் புள்ளைதா. இருந்தாலும் சும்மாவாச்சும் தாவணியைச் சுத்தி அனுப்புங்க, மத்ததை நா பாத்துக்கிடுதேன். யக்கா, மனசிலே ஞாபகம் வச்சுக்கங்க. தாவணி போட்டா, திங்கட்கிழமை வரலாம். இல்லேன்னா... நின்னுக்கிட வேண்டியதுதான்."

ஏஜெண்ட் போய்விட்டார். வேலாயி, வேரறுந்தவளாக அப்படியே சுவரில் சாய்ந்தாள். குத்துக்கால் வைத்துச் சரிந்து உட்கார்ந்துவிட்டாள். குமுறிக் குமுறிச் சத்தமில்லாமல் அழுதாள். உடம்பெல்லாம் நடுங்கிக் குலுங்குகிற கோரம்.

'இப்படியும் ஒரு வங்கொடுமையா? அததுக்குரிய வயசு வராமெ, விரலைச் சூப்புற புள்ளைக்கு எப்படித் தாவணி போடுறது? ஊரையழைச்சு, உறவைக் கூப்பிட்டு, விருந்து வைச்சு, தாய்மாமன் சீர் வரிசையோட, கூடுன கூட்டத்துலே போட வேண்டிய தாவணியை... சட்டத்தை எமாத்துறதுக்காக எப்படிப்போட? ஐயோ... எம்புள்ளைக்குமா, இந்தக் கதி? அடக் கடவுளே, எளியவங்க பொழைப்பை எதுக்கு விதி, இப்படி பிய்ச்சுப் பிடுங்கிப் போடணும்?'

உள் மனசைச் சுட்டுப் பொசுக்குகிற அக்கினிக் கொழுந்துகளாக நினைவுகள். நினைக்க நினைக்க உள்ளுக்குள் ஏதோ ஒன்று உடைந்து நொறுங்குகிறது... கோவென்று வெடித்து அழத் துவங்கியபோது, இருமலும் ஆரம்பித்துவிட்டது. வாடிப்போன மரத்தை ஆட்டிப் பிடுங்குகிற புயலாக, இருமல், இருமல்... இருமல்கள்...

அம்மாவின் அழுகையையும் இருமலையும் பார்க்கப் பார்க்கச் செல்லிக்குள் அழுகை விம்மிக்கொண்டு பீறிடுகிறது. நாசி நுனி துடிக்கிறது. காந்தலெடுக்கிறது. கண்களில் ததும்பித் திரை போடுகிற கண்ணீர்...

அந்தப் பிஞ்சை, தாவணி அச்சுறுத்தியது. உள் மனசின் மெல்லிய ஜவ்வுகளைப் பற்றி இழுத்தது. நினைத்தாலே திகிலில் மனசு துடிக்கிறது.

பூப்பெய்தாத பெண்ணைக் கல்யாணத்திற்கும் உடலுறவுக்கும் நிர்ப்பந்தப்படுத்துகிறபோது ஏற்படுவதைப்போல... விநோதமான அவமான உணர்ச்சி, செல்லியைக் கசக்கியது.

இயல்பாக நிகழ வேண்டிய மலர்ச்சியை... ஊர் வேஷத்திற்காகக் கசக்கிப் பிழிந்து, மலர வைக்கிற வேதனை. தாயிடம் கூடச் சொல்லியழ முடியாத ரகசிய உணர்ச்சியவஸ்தை. அவளைத் திக்குமுக்காட வைக்கிற கொடிய அவஸ்தை.

'ஊஹூஂம்...ம்...செத்தாலும் சரி...இப்ப நா தாவணி போடவே மாட்டேன். சம்மதிக்கவே மாட்டேன். என்னாலே முடியாது... முடியவே முடியாது...அதைவிட உசுரை வுட்டுருவேன்...'

ஞாயிற்றுக்கிழமை கனமாய் நகர்கிறது. அந்த இரண்டு ஜீவன்களையும் மௌனச் சோகத்தில் அரைத்துக்கொண்டு நத்தையாக ஊர்கிறது.

திகிலும் பீதியுமாய்...வேதனையும் விசும்பலுமாய் வீடு. மூன்றாவது ஆளாய் வந்து உட்கார்ந்துகொண்டு பேயாட்டம் போடுகிறது, அவலம்.

முகம் செத்துக் கிடக்கிற மகளைப் பார்த்தாள், வேலாயி. சிறிய கண்களில் பீதி. வெட்டுண்ட பல்லி வாலாகத் துடிக்கிற இமைகள். பார்க்கவே பாவமாக இருந்தது. 'இந்த அரும்பை அடகு வைச்சா... நான் உசுர் வாழணும்?'

செல்லியும், அம்மாவையே பார்த்தாள். அம்மா, தாவணி போடச்செல்லி வற்புறுத்தினால்... மறுத்துவிடத் தயாராக இருந்தாள். பணிந்துவிடக்கூடாது என்ற வீராப்பு. மனசுக்குள் ஒரு விறைப்பு.

''செல்வி...''

''என்னம்மா?''

''நாளை நீ வேலைக்குப் போகவேண்டாம்மா...''

''.....?''

''ஒன்னைக் கேவலப்படுத்தி அடகு வைச்சு, மூளியலங்காரம் பண்ணி... நா கஞ்சி குடிக்க வேண்டாம். நாம உசுரு வைச்சு இருக்கவும் வேண்டாம்மா...''

''ஏம்மா?''

''பூக்க வேண்டிய அரும்பைப் புடிச்சு, நசுக்கி, மோந்து பாக்குற பாவத்தைச் செய்றதுக்கு, இந்தத் தாய் மனசுலே தைரியமில்லேம்மா.''

''......''

''விதி நம்மளை எப்படி விட்டிருக்கோ... அப்படியே நடக்கட்டும், கண்ணு. நீ நாளையிலேருந்து வேலைக்குப் போகவேண்டாம்.''

தாயின் முகம் முன்னைவிடப் பிரகாசிப்பது போலிருந்தது செல்விக்கு. அந்தக் கண்களில் பொங்கித் ததும்பிய பரிவு...வறுமையில் நீர்த்துப் போகாத தன்மானம்... வாழ்க்கைக்குப் பணிந்து போய்விடாத பாச வைராக்கியம்..

செல்வி துவண்டு விட்டாள். மனசுக்குள்ளிருந்த விடைப்பு...விறைப்பு... வீராப்பு எல்லாம்...தாயின் பாசக் கண்ணீரில் நனைந்து...மனசே தளர்ந்துபோய்...

அடிபட்டவளைப்போல கோவென்று அழுதாள். புறங்கையால் கண்ணைக் கசக்கிக்கொண்டு விம்மி விம்மியழுத அந்தக் கண்ணு முழியாத பச்சை மண்ணை, மடியில் இழுத்துப் போட்டுக்கொண்டு கதறியழுதாள் வேலாயி.

முத்துலட்சுமி, இருட்டில் வந்துகொண்டிருந்தாள். வாசலில் திகைத்துப்போய் செல்வி.

''என்ன செல்வி, வேலைக்கு வரல்லியா?''

''வாரேன்'' உயிரில்லாமல் முனங்கினாள்.

''தாவணி?''

''மடிச்சு கையிலே வைச்சிருக்கேன். பஸ்கிட்டே போய் போட்டுக்கணும்.'' சத்தமில்லாத தெருவில், சத்தமில்லாமல் நடந்தனர்.

இழவு வீட்டுச் சங்காக அலறுகிறது தீப்பெட்டியாபீஸ் பஸ்ஸின் ஹாரன்.

ஒரு பிரேதத்தைப்போல... அடங்கிப்போன சலனங்களுடன் நடந்தது, அந்த அரும்பு.

அமரர் கல்கி நினைவுச் சிறுகதைப் போட்டியில்

முதல் பரிசு. 1989



# 4. நாணயன்

கிட்டக்கிட்ட நெருங்கிவந்து பயம் காட்டுற தைப் பொங்கல்.

மரங்களை விலை பேசி, விறகாக்கி, செங்கற் சூளையில் எடை போட்டுத் துட்டாக்கித்தான் வயித்து ஜீவனம். விறகுக்குப் பணம் வருவதில் இந்தத் தடவைதான் இந்த இடைஞ்சல்.

ராவும் பகலுமா யோசனை, மனசைப் போட்டுப் புரட்டிப் புண்ணாக்குகிற யோசனை, கண்ணுலே ஒறக்கத்தை ஒண்டவிடாம நச்சரிக்கிற யோசனைகள்...

எம்புட்டுக் கொறைச்சு எடுத்தாலும் நானூறு ரூவா ஆகுமே! யாருகிட்ட கேக்க? எப்படிக் கேக்க? கேட்டா என்ன நெனைப்பாக...

மனசுக்குள்ளேயே மருகி மருகி யோசித்தபிறகு-

கடைசியிலே பக்கத்தூர்லே ஜவுளிக்கடை வைச்சிருக்கிற ராமச்சந்திரன்கிட்டே போனான். தனிப்பட்ட அந்தரங்கமா பேசினான். நிலைமையைச் சொன்னான்.

"அண்ணாச்சி, நம்ம கடை ரொம்பச் சின்னக்கடை. அம்புட்டுத் தொகைக்கெல்லாம் கடன் குடுக்க முடியாதே."

"இல்லே தம்பி, இந்த ஒரு தடவை நீங்க கட்டாயமா குடுத்து உதவணும். வேற பெரிய கடைகள்லே போய்க் கேக்க கூச்சமா இருக்கு. நீங்க குடுங்க தம்பி; தை பத்தாந் தேதிக்குள்ளே எப்படியும் கணக்கை முடிச்சிருவேன் தம்பி."

"நீங்க முடிச்சிருவீக. இம்புட்டு கடன் தர்ரளவுக்கு எங்கிட்டே சக்தி இல்லியேன்னு யோசிக்கேன் அண்ணாச்சி."

"நீங்க என்னை நம்பினா....உதவணும்."

"ஐயய்யோ, உங்களை நம்பாம வேற யாரை நம்பப் போறேன்? வாங்குன கடனை நெனைச்சுப் பாக்காம, வல்லங்கம் பேசற இந்தக் காலத்துலே... சொன்னா சொன்னபடி நடக்குற உங்களை நம்பாம இருப்பேனா?"

"நம்பிக்கை இருந்தா...குடுங்க. தை பத்தாந் தேதிக்குள்ளே தலையை அடகு வைச்சாச்சும் உங்க கையிலே ரூவாயைக் குடுத்துருவேன் தம்பி"

தலை மேலே சுமையாக வந்து ஏறிக்கிட்ட தைப் பொங்கலை நகர்த்தி விட்டாகணும்ங்கிற வெறியிலே - வேகத்துலே - வார்த்தைகள் அவசரமாய் ஓடிவந்தன.

'தை அஞ்சாந்தேதி வந்து ரூவாயை மொத்தமா வந்து வாங்கிட்டுப் போ' என்ற சூளைக்காரரின் வாக்குறுதி, இவனது வார்த்தைகளுக்கு வலுவான பக்கபலமாக நின்றது.

கடைக்காரன் ராமச்சந்திரன் தவித்தான். சித்தெறும்புக்குச் சோத்துப் பருக்கைகூட பெருஞ்சுமைதானே! சின்னச்சாமி கடன் கேட்கிற தொகையை நினைத்தால், மலைப்பாக இருந்தது. நாணயஸ்தன் சின்னச்சாமி வார்த்தையைத் தட்டவும் முடியவில்லை. அரிச்சந்திரன் வாக்கை சந்தேகிக்க முடியுமா? சந்தேகிக்கவே முடியாத ஒரு விஷயத்தை நிராகரிச்சிட முடியுமா?

அரை மனசோடு உள்ளுக்குள் திணறிக்கொண்டே துணிமணிகளை எடுத்துப் போட்டான்.

ரொம்பப் பயம் காட்டிய தைப் பொங்கல் சிரமமில்லாமல் நகர்ந்தது. புதுத்துணிகளை உடுத்திக்கிட்டு உல்லாசமா - சந்தோஷமா சிரிச்சு மகிழ்ந்த புள்ளைகளைப் பார்த்துப் பார்த்துப் பெருமைப்பட்டான். புதுச் சட்டையையும், புதுப் பாவாடையையும், புள்ளைக காட்டிக் காட்டி பெருமையிலே பூரிச்சு நின்னதுக. பார்வதி புதுச் சேலையில் அஞ்சு வயசு குறைஞ்சு, புது அழகுலே நின்றாள். சிறகு விரிச்சு வண்ணத்துப் பூச்சியாய் ஓடியாடித் திரிஞ்ச கடைக்குட்டி முருகேசன்.

இவனுள் ததும்பி வழிஞ்ச தைப்பொங்கல் சந்தோஷம்...

சைக்கிளைத் துடைத்து, எண்ணெய் போட்டு, ஹாண்டில் பாரில் 'கண்ணுப்பிள்ளை'ச் செடியைக் கட்டி, பெருமிதமாய் ஊரைச் சுத்தி கொண்டாடி முடிச்ச மறுநாளில்தான், அரிச்சந்திர சின்னச்சாமிக்குக் குரூர முகம் காட்டிச் சிரிச்சது சோதனை.

தைத்திருநாளன்னிக்கு, 'வலிக்குது'ன்னு நெஞ்சைப் பிடிச்ச சூளைக்காரர், மூடிமுழிக்கும்முன்னே கண்ணை மூடிட்டாராம். வாங்குன கடன், குடுத்த கடன் எதைப் பத்தியும் சொல்ல மதியில்லாம, போய்ச் சேர்ந்துட்டாராம்.

சேதி கேட்ட சின்னச்சாமி, கதிலங்கிப் போனான். நாணயஸ்தன்ங்கிற பேரே ரிப்பேராகி விடுமோன்னு பதறிப் பதைச்சான்.

கருமாதி முடியவே தை இருபதாகிப் போச்சு. கருமாதி முடிஞ்ச கையோடு, புள்ளைகளுக்குள்ளே சொத்துச்சண்டை தூள் பறக்க ஆரம்பிச்சிடுச்சு. விறகுப் பாக்கி பணம் கேட்டு போய் நின்ற இவனை, 'ஏனென்று' கேக்க ஒரு நாதியில்லை. இவனுக்கும் யாரிடம் கேக்கிறதுன்னு புரியலே. தொகை பெரியதாச்சே!

கை வந்து சேருமாங்கிற கேள்வி திகிலாய் எழுந்தது.

மரத்துக்காரனுக்குப் பணம் எப்படிக் கட்டறது? ராமச்சந்திரனுக்கு எப்படி நல்ல புள்ளையாகிறது? தை பத்துக்குள்ளே தலையை அடகு வைச்சாச்சும் தீர்ப்பதாகச் சொன்ன கணக்கு, இவனை உறங்கவிடாமல் தவிக்க வைத்தது.

தை முப்பது முடியப்போகுது. என்ன செய்றது?

'பெரிய யோக்கியன் மாதிரி பேசி கடன் வாங்கிக்கிட்டுப் போனாரய்யா...இன்னும் ஆளையே கண்ணுலே காணலே. தலையை யாரும் அடகு வாங்க மாட்டேங்குறாகளோ.' என்று ராமச்சந்திரன் ஊர்ஊரா கிண்டலாகச் சொல்லி அங்கலாய்ப்பதாக ஒரு பிரமை. மனசின் நிம்மதியை மென்று திங்கிற விதம்விதமான கற்பனைகள்...

ரவ்விலும் இமைகள் ஒட்ட மறுத்தன.

ஞுளையில் வரவேண்டிய ரெண்டாயிரத்துச் சொச்ச பணத்தை, வாங்காமல் விட்டுட முடியுமா? பெரிய பெரிய மனிதர்களிடம் வழக்கைச் சொல்லி, பஞ்சாயத்து வைச்சு, சாட்சிகளைக் கொண்ணாந்து நிறுத்தி, நாட்கணக்கில் விவகாரம் நடந்து, 'பங்குனி கடைசியில் பணம் தருவது' என்று ஒப்பந்தமாச்சு.

மரத்துக்காரனைப் பாத்து விபரத்தைச் சொல்லி, சித்திரை அஞ்சுலே பணம் தர்றதாகத் தவணை வாங்கியாச்சு, ராமச்சந்திரனை எப்படிப் போய்ப் பார்ப்பது? எந்த முஞ்சியோட போய்ப் பேசுறது?

நினைச்சாலே மனசு கூசிக் குறுகுது.

'நீயும் ஒரு மனுசந்தானா? சோத்தைத்தான் திங்கிறியா?'ன்னு கேட்டுட்டா... என்ன செய்றது? நாக்கைப் பிடுங்கிக்கிட்டுச் சாகவா முடியும்?

பாவம், அவனும் சின்னக் கடைக்காரன். அலமாரியிலே தனித்தனியா அடுக்கி வைச்சிருக்கிற துணிகளையெல்லாம் அள்ளிப் போட்டா... ஒரு பொட்டலத்துக்குள்ளே அடங்கிப்போகும்.

'அம்புட்டுத் தொகைக்குக் கடன்விட ஏங்கிட்டே சக்தியில்லியே'ன்னு அவனும் மருகித் தவிச்சானே. இவன்தானே வற்புறுத்தி வாங்கிக்கிட்டு வந்தான்...

சரி, சோதனை இத்தோட முடிஞ்சதுன்னு போச்சா? அதுதான் இல்லே. மாறி மாறிச் சோதனைகள். பட்டகாலிலேயே பட்டு, கெட்டகுடியே கெட்டு... தொட்ட காரியமெல்லாம் பித்தளையாகி..ச்சே!

பார்வதிகிட்டே கெஞ்சிக் கூத்தாடி, காதுலே கிடந்த கம்மலை வாங்கிக்கிட்டு அடகு வைக்கப் புறப்பட்டான். ராமச்சந்திரனுக்காச்சும் நல்ல புள்ளையாகணும்ங்கிற தவிப்பு; பதைப்பு; பரபரப்பு.

கல் பதிச்ச கம்மலை எந்தப் பேங்குலே அடகு வாங்கறான்? ஊர் ஊரா அலைஞ்சு ஒரு வட்டி கொடுக்கல் வாங்கல்காரனிடம் மூணு பைசா வட்டி பேசி, கம்மலுக்குப் பணம் வாங்கி ஊருக்குள்ளே நுழைஞ்சா...

விதியைப்போல வாயைப் பிளந்துக்கிட்டு நின்னது இழவுச் சேதி.

பார்வதியோட அய்யா போய்ட்டாராம்! தள்ளிவைக்கக்கூடிய சாதாரண துஷ்டியா...? பெரிய சாவு! அதிலும் பெண் குடுத்த மாமனார் சாவு!

கம்மல் பணம், காரு, பஸ்ஸு, டிக்கெட் என்று கரைஞ்சு முடிஞ்சது.

உள்ளுக்குள் இவன் உடைஞ்சு கலங்கிக் கரைஞ்சான்.

சின்னச்சாமி மனசுக்குள்ளே, நெருஞ்சிமுள்ளா ராமச்சந்திரன். எந்நேரமும் உறுத்துகிற நெருஞ்சிமுள்ளு. சுருக்சுருக்கென்று குத்தித் தன்மானத்தைக் கதற வைக்கிற நெருஞ்சிமுள்ளு.

பகலோட கையைப் பிடிச்சுக்கிட்டு ராவும், இருட்டின் வாலைப் பிடிச்சுக்கிட்டுப் பகலுமாய் நாட்கள் அரவமில்லாமல் நகர்கின்றன.

சும்மா இருந்தா முள்ளை எடுக்க முடியுமா?

வீட்லே கட்டிக் கிடந்த வெள்ளாட்டை விலை பேசி முடிச்சாச்சு. ஏவாரி ரூவாயைக் குடுத்துட்டு, ஆட்டைப் பிடிக்க வந்திருந்தான்.

''ரெண்டு ரோமத்தைப் பிடுங்கிக்கோ.''

சிரத்தை இல்லாமல் ரெண்டு விரலுக்குள் அகப்பட்ட ரோமங்களைப் பிடுங்கிக் கூரையில் சொருகிக் கொண்டான். சாஸ்திரம், ஆட்டை வித்தாலும், இந்த வீட்லே கால்நடை யோகம் தொடர்ந்து இருக்கணுமாம். அந்த யோக வித்துதான் இந்த ரோமங்கள்.

ஆடு போயிருச்சு. அது நின்ன இடம், சாண வீச்சமும் - மூத்திர நாற்றமுமாய் - சூன்யமாய் - மனசை உறுத்துகிற சூன்யமாய்.

பெருமூச்சோடு புறப்பட்டான். சைக்கிளை எடுத்தான். 'ராமச்சந்திரனைத் தேடி ரூபாயைக் குடுத்துரணும்!' சைக்கிளை நகர்த்தி, பெடலில் காலை வைச்சபோது...

வீட்டுக்குள் பார்வதி பயத்தோட கதறிக் கூப்பாடு போட்டாள்.

''ஐயய்யோ... இங்க வாங்களேன்... எம் புள்ளையைப் பாருங்க...ஐயய்யோ, எம் மவனுக்கு என்னமோ செய்யுதே.''

மனசின் உள் நரம்புகளை அதிரச் செய்கிற கதறல்!

சைக்கிளை நிறுத்திவிட்டு வீட்டுக்குள் ஓடினான். பார்வதியின் மடியில் முருகேசன். பறவையாடாமல் நிலைச்ச முழி. கோணிக்கொண்டு போகிற வாய். வெட்டி உதறுகிற கைகால்கள். கடைக்குட்டியாய், பூங்கொத்தாய் பொறந்த ஒரேயோர் ஆம்பளைப் புள்ளை. சாவோட மல்லுக்கட்ட முடியாமல், காலும் கையும் தனித்தனியா துடிச்சிக்கிட்டிருக்கான்.

கிராமமே அந்த வீட்டுக்கள்ளே. அலையக்குலைய ஓடித்திரிகிற பெண்கள். ஆளுக்கொரு கைப்பக்குவம் செய்கிற பரபரப்பான கிழவிகள்.

''வேப்பெண்ணை வாங்கிட்டு வா, வடபூடு கொண்டா.''

''குருதைலம் எடுத்துட்டு வாடி.''

''அரப்பு, நா எடுத்துட்டு வாரேன்.''

''கிண்ணத்துலே மூத்திரம் பிடிச்சிட்டு வாரேன்.''

''உள்ளங்கால்லே தேய்.''

''வெங்காயத்தை மென்னு காதுலே ஊது.''

ஆளுக்கொரு உத்தரவுகள். யாரையும் எதிர்பாராமல் புயலாய்ச் சீறுகிற மனிதர்கள். சிறகு கட்டிக்கொண்டு பறக்கிற வேலைகள். ஒரே மனிதமாய் உறைந்து, பதைத்துச் செயல்படுகிற மனிதர்கள்!

ம்ஹூம்! எதற்கும் மசியாத ஜன்னி. வீட்டின் மூலை முடுக்குகளில் நின்று மிரட்டுகிற சாவின் கொடிய நெடி. எட்டு வயசுச் சிறுவனிடம் மல்லுக்கு நிற்கிற மரணம்!

'புள்ளையை உசுரோட பாக்க முடியாதோ' என்கிற திகில்! ஒற்றைப் புள்ளை. மூன்று பெண் குழந்தைகளுக்குப் பிறகு பிறந்த ஆண்பிள்ளை. திருச்செந்தூர் முருகனுக்கு நேர்த்திக்கடன் போட்டு, தவம் இருந்து பெற்றெடுத்த முருகேசன்.

ராஜபாளையம் ஆஸ்பத்திரியில், வெள்ளாடு வித்த பணம், ஊசியும் மருந்தும், பீசுமாய் கரைஞ்சு முடியவும், முழுசாக முருகேசன் வீடு வரவும் சரியாப் போச்சு.

மாசி பொறந்து, தேதி பதினைஞ்சு ஆச்சு. சின்னச்சாமி மனசுக்குள்ளே திகில். ஒரு நிமிடம்கூட விடாமல் உறுத்திக் கிட்டேயிருக்கிற நெருஞ்சி முள்ளு; ராமச்சந்திர முள்ளு.

இதுலே ராமச்சந்திரன் போக்கே வேறு, இவனை ரொம்ப அவஸ்தைப்படுத்தது. உள் மனசுக்குள்ளே செருப்பால் அடிபடுகிற அவமானம்.

எதிர்ப்படுகிற நேரங்களில் ''என்னண்ணாச்சி 'தை பத்து'ன்னு தவணை சொன்னீகளே, நாளாச்சே. அந்த ரூவாயைத் தரக் கூடாதா''ன்னு வாயைத் திறந்து ஒரு வார்த்தையாச்சும் கேக்கக் கூடாது? பாவி!

அப்படிக் கேட்டால்... ஏதாச்சும் பதிலை - நடந்த சமாச்சாரங்களை-சொல்லிவிடலாமே! சொன்னால், இவன் மனசின் ஆற்றாமையாச்சும் குறையுமே! மனப்பாரம் கொஞ்சம் இறங்குமே!

பாவிப்பயல்... அதற்கும் ஒரு வாய்ப்பு தரமாட்டேங்குறானே.

அவனது ஊரில் பார்த்தால், ''வாங்கண்ணாச்சி'' என்பான். அத்தோட சரி. மறுவார்த்தை பேசமாட்டான். வேறு இடங்களில் எதிர்ப்பட்டால்... முகத்தில் ஒரு சிரிப்பு. பரிச்சயமானவர் என்பதற்கு அடையாளமான அந்த அறிமுகச் சிரிப்பு. அம்புட்டுதான்!

ஊமையாக மௌனம் சாதிச்சு, உசுரைக் குத்திப் பிடுங்குகிறானே!

சிரிக்கிற சிரிப்பிலே... 'ஒன்னோட யோக்கியதை இம்புட்டுத்தானா?' என்று மனசைக் கிழிக்கிறானே! 'நீதான் அரிச்சந்திரனாக்கும்' என்று ஊரதிர அவன் இளக்காரமாய்ச் சிரிக்கிற மாதிரி ஒரு பிரமை.

இவனுள் கலக்கம். அவனது மௌனத்தை நெனைக்க நெனைக்கச் சின்னச்சாமிக்குள் மயான காண்டம்!

தைப்பொங்கல் சந்தோஷத்துக்கு விலையாக இம்புட்டுப் பெரிய காயம் ஏற்படுமின்னு இவன் கனவுலேகூட நெனக்கலியே. இத்தனை காலமா சிரமப்பட்டு சம்பாதிச்ச 'விறகு வெட்டி அரிச்சந்திரங்'கிற பேரையே... தைப்பொங்கல் முழுங்கி முளியாக்கிடும்னு நெனைக்கலியே...

சின்னச்சாமிக்குள் வாட்டி வதைக்கிற பயம். கடனை அடைக்க எடுத்துக்கிட்ட முயற்சிகளெல்லாம் சறுக்கி, சறுக்கி... இவனையும், நாணயஸ்தன்கிற பேரையும் அதள பாதாளத்தில் அமுக்கப்பாக்குதே வாழ்க்கை.

சகல பாதைகளும் அடைபட்டுப் போனபிறகு, வேற வழியேயில்லைங்கிற விளிம்புலே... உசுருக்கு உசுரான சைக்கிளை வித்துட வேண்டியதுதான்னு முடிவுக்கு வந்துட்டான்.

சைக்கிள் எல்லாருக்கும் ஓர் இரும்புக் கழுதை. மிதிச்சா நகர்கிற வாகனம். இவனுக்கு அப்படியல்ல. அது இவனது உயிர். மானம். அதுக்கும் மேலே.

இவனைப் பொறுத்தவரை சைக்கிள்ங்கிறது, குடும்பத்துலே விளக்கேத்தி வைச்ச குலதெய்வம். இவனது உள் ஆற்றல்களையே இவனுக்கு அறிமுகப்படுத்தி வைச்ச அபூர்வ சமாச்சாரம்.

நாதியத்தவனா - வேரறுந்த கொடியா - அலைஞ்சு திரிஞ்சவன், டீக்கடைகளிலும் பலசரக்குக் கடைகளிலும் உடம்பு வளையாத வேலைகளாகப் பார்த்துப் பழகிவிட்டு, கிராமத்துக்கு வந்த இவனுக்குப் பார்வதியை 'மூய்த்து' வைத்தார்கள்.

இவனுக்கேத்த தொழில் எதுவும் இந்தப் பட்டிக்காட்டிலே அமையலே. காட்டுவேலை செய்றதுக்கு உடம்பு வளைய மறுத்தது. நாளும் பொழுதும், அவலமும் கேவலமுமாய் நகர்ந்தது. பார்வதி உழைப்பிலே இவனது வயிறும் நிறைய ... மனசு குமைந்தது. நமைச்சலெடுத்தது.

கொய்யாப் பழம் ஏவாரமாச்சும் செய்யலாம்னு ஒரு சைக்கிள் வாங்குறதுக்கு அலைஞ்சான். சைக்கிள் விலைக்குக் குடுத்த புண்ணியாளனே தொழிலுக்கும் ஒரு வழியைக் காட்டினாரு.

"நம்ம கருசக்காடு ஏழு குறுக்கம். பூராவும் வேலிக் கருவேலிதான். அதை வெட்டிக் காலி பண்ணித் தாரீயா?"

"அம்புட்டுக்கு ரூவாயில்லியே."

"விறகைக் காசாக்கிட்டு வந்து பணத்தைக் குடு."

"அப்பச் சரி."

இந்த சைக்கிளைத் தொட்ட பிறகுதான் கைக்கு வந்து சேர்ந்தது தொழில். தொட்டதெல்லாம் பொன்னாகத் துலங்கிச்சு. அட்ரஸ் இல்லாமல் கிடந்த இவனுக்கு ஒரு பேர். மரியாதை.கையில் நாலு காசு. விறகு வெட்டி அரிச்சந்திரன்கிற பேரு எல்லாம் வந்துச்சு.

இவனுக்குள் கிடந்த இன்னொரு சின்னச்சாமி, வீர்யமா வெளிப்பட... இவனே அசந்துபோய்ட்டான்.

சைக்கிள் சீட் மேலே எவரையும் முழங்கை போட விட மாட்டான். சண்டைக்கே போய்விடுவான். ஒரு துளி மழைகூட அதன் மேல் விழச் சம்மதிக்க மாட்டான். மேலும் புதுசு புதுசா சாமான்கள் வாங்கிப் போட்டு, அழகு பார்ப்பான்; அழகுபடுத்துவான்.

சைக்கிளாலே, இவனுக்கும் பார்வதிக்கும் இடையிலே வந்த சண்டைகள் கொஞ்சமில்லே.

''கட்டின பொண்டாட்டியைவிட இந்த இரும்புக் கழுதை ஒமக்கு ஒசத்தியாப்போச்சா?''ன்னு ஆங்காரமாய்ப் பார்வதி கேட்டால்... அலட்சியமாய்ப் பதில் சொல்வான்.

''அதுலே என்ன சந்தேகம்? ஒன்னைவிட, என்னைவிட, என் சைக்கிள்தான் எனக்கு ஒசத்தி.''

அவனுக்கு, சைக்கிள் துருப் பிடிக்கிற இரும்பல்ல. குல தெய்வம். அவனது உயிர், மானம். அதுக்கும் மேலே...!

ராமச்சந்திரனுக்கு நல்ல பிள்ளையாகணுமேங்கிற நிர்ப்பந்தத்துலே...அதையே விலை பேசத் துணிஞ்சிட்டான். மனசுக்குள்ளே அவஸ்தை, உயிரைப் பிரிகிற அவஸ்தை.

நானூறுக்கும் நானூற்றைம்பதுக்குமாய் ரொம்ப நேரமாய் இழுத்துக்கிட்டுக் கிடந்தது பேரம். தீருகிறதாய்த் தெரியலே. கடைசியில் ஒரு தரகர் தலையிட்டு, தென்காசி வழக்காகப் பேசி, 425ன்னு முடிச்சு வைச்சாரு. 25 ரூபாய் அட்வான்ஸ் கைமாறியது. நாளை மறுநாள் முழுப்பணத்தையும் தந்துவிட்டு, சைக்கிளை எடுத்துக்கொள்ளப் பேச்சு.

இவனுக்குள் வந்து உட்கார்ந்துகொண்ட சூன்யம், ஆற்றல், பண்பு, தன்னம்பிக்கை சகலமும் பறிபோகப் போவதாக மனசுக்குள் திகில்...பீதி..

அவனையும் மீறிக்கிட்டுக் கண்ணுக்குள் உறுத்தல். இமை ரோமங்களில் ஈரச்சுமை. மட்டியைக் கடிச்சு, தன்னைக் கட்டுப்படுத்திக்கிட்டான்.

முழுத்த ஆம்பளை அழக்கூடாது...அது கேவலம்!

ரூவா வந்தவுடனே, ராமச்சந்திரனைத் தேடிப்போய்... கணக்கை முடிச்சுட்டு வரணும்.

மானம், மரியாதையைக் காப்பாத்துன அவனோட நல்ல மனசுக்கு, வாய் மணக்க, நெஞ்சு இனிக்க நல்ல வார்த்தை சொல்லிட்டு வரணும்.

நாக்கைப் பிடுங்கிக்கிடுற மாதிரி, நாலு வார்த்தை பேசிடாம, பார்த்தும் பாராம, மௌனமா, கண்ணியமா இருந்தீயே... ராமச்சந்திரா! நீ நல்லா இருக்கணும். ஒம்புள்ளை குட்டிக நல்லா இருக்கணும். ஒன்னோட வம்சமே தழைச்சு துலங்கணும்!

மறுநாள்.

மதியமிருக்கும். வேப்பமர நிழலில் ஒத்தையாளா உட்கார்ந்திருந்தான் சின்னச்சாமி. வெத்தலை போட்டுக்கிட்டுருந்தான். சைக்கிள் 'ஸ்டாண்ட்' போட்டு கம்பீரமாய் நின்றது.

'நாளையிலேயிருந்து இந்தக் குலதெய்வம் இன்னொருத்தன் கையிலே.'

நெனைச்சா... மனசுக்குள் 'பகீர், பகீர்' என்கிறது. பலதுகளையும் நெனைச்சு மனசுக்குள்ளேயே மருகிக்கிட்டு இருக்கிற போது-

ராமச்சந்திரன் சைக்கிள்லே வந்து இறங்கினான். நேராக வந்தான்.

"வாங்க தம்பி..."

மரியாதைக்குக்கூட "ஆமண்ணாச்சி"ன்னு சொல்லலை. தலையைக்கூட ஆட்டலை. எங்கோ அடிபட்டுத் திரும்பிய பந்தாக ராமச்சந்திரன் முகத்தில் ஒரு விறைப்பு; கடுப்பு. கால்படி கடுகைப் பொறிச்சிடலாம். அம்புட்டு கடுகடுப்பு.

சின்னச்சாமிக்கு முகம் கறுத்துப்போச்சு. மதிச்சு மாலை போடப் போனவன், மூஞ்சியிலே காறித்துப்புன மாதிரி இருந்துச்சு.

இத்தனை நாளா பார்த்தும் பாராம... மௌனமா இருந்த இவனுக்கு, இன்னைக்கு என்ன நேந்துச்சு? ஏனிப்படி எடுத்தெறிஞ்சு பார்க்கிறான்? எங்க அடிபட்டுட்டு, இந்தப் பந்து இம்புட்டு வேகமா வருது?

ரொம்பக் காலம் ஊமையாயிருந்த ராஜா மகன், 'ஏம்மா, நீ எப்போ அத்தையைப்போல தாலியறுப்பே?'ன்னு அபசகுனமா வாயைத் துறந்த கதைதான் மனசுக்குள்ளே ஞாபகத்துலே உரசுச்சு.

ராமச்சந்திரன் பார்வையில் வெறுப்பு, இகழ்ச்சி. வெடுக்குன்னு வெட்டியெறிஞ்ச மாதிரி கேட்டான்:

"என்ன, வாங்குன கடனை குடுக்குறதாக நெனைப்பிருக்கா? இல்லே, அமுக்கிக்கிட்டு நாமம் போடத் திட்டமா?"

வசமிழக்காமல் சின்னச்சாமி உள்ளுக்குள் ஒடுங்கினான்.

''என்ன தம்பி, இப்படிப் பேசுறீக? உங்களைப் பத்தி எம்புட்டுப் பெருமையா நெனைச்சுக்கிட்டிருக்கேன், தெரியுமா? உங்க முதலை ஒத்தடியிலே நாளைக் கொணாந்து தாரேன் தம்பி. உங்க முதலுக்கு நா பொறக்கலே.''

இவனது குழைவை நடிப்பாகப் புரிந்து கொண்டு, எரிச்சலாகப் பார்த்தான் ராமச்சந்திரன். ஏளனமாய்ச் சீறினான்.

''யாரு முதலுக்கு யாரு பொறந்ததுன்னு, யாருக்குத் தெரியும்?''

சின்னச்சாமிக்குள்ளே சுரீரென்று சுட்டது. இவனது பிறப்பையே - முகம் தெரியாத அம்மாவின் கற்பையே - சந்தேகிக்கிற நெருப்பு வார்த்தைகள். இவன் உள் மனசைச் சுற்றி வளைத்து சுளீரிடுகிற அக்கினிச் சாட்டையடிகள்.

''வார்த்தையெ அளந்து பேசுப்பா. சிந்துனா அள்ள முடியாது. சின்ன வயசுக்காரங்கிட்டே கடன்பட்டேன் பாரு. எம்புத்தியைச் செருப்பால அடிக்கணும்.''

''பெரிய சத்தியவான் போலப் பேசிக் கடனை வாங்கிட்டு ஏமாத்துனதுமில்லாம... என்னையா சின்னப் பையன்னு சொல்லணும்? சுத்த அயோக்கியத்தனம்! த்தூ!''

தரையில் காறித் துப்பினான் ராமச்சந்திரன்.

இது அத்துமீறல், அக்ரமமான எல்லைமீறல். மனுசனை மனுசனாக இருக்கவிடாத - மிருகமா மாத்துகிற - விபரீதமான அத்துமீறல் - குரூரமான உசுப்பல்.

சின்னச்சாமியும் வெகுண்டுவிட்டான்.

''மரியாதையாய் வீடு போய்ச் சேரு. வார்த்தையாலே சீரழிஞ்சு போகாதே. நாளை ஒந்துட்டு வீடு வந்து சேரும்.''

''மரியாதையாப் போகலேன்னா... அடிச்சிருவீயோ? எங்கே அதையும்தான் பாத்துருவோம்..ஒங்கிட்டேயெல்லாம் வாலைச் சுருட்டிக்கிட்டுப் போனா என்னாலே ஏவாரம் பண்ண முடியுமா? இப்பவே ரூவா வேணும், ஒத்தடியிலே ரூவாயை வைச்சுட்டு நகரு.''

''நாளை ரூவா வரும்.''

''இப்ப வேணும். வாங்காம இந்த எடத்தைவிட்டு நா நகரப் போறதுல்லே.''

''இப்ப கொடுக்கலேன்னா...''

''சீரு கெட்டுப் போகும். நாறிப் போகும். ஊரு சிரிக்க வைச்சிருவேன்.''

வார்த்தைகளின் உரசல்களில் அனலாய்ப் பறந்த தீப்பொறிகள். வாய்ச் சண்டைச் சத்தம் கேட்டுக் கூடிய ஜனங்கள், செய்வதறியாமல் திகைத்தனர். கசாகசாவென்று முணுமுணுத்தனர். ஓரிரண்டு பெரியவர்கள் துணிஞ்சி, தலையிட்டு, குறுக்கே விழுந்து, மல்லுக்கு நின்ற இருவரையும் விலக்கிவிட்டு, சமனப்படுத்தி...சத்தம் போட்டுச் சத்தத்தைக் குறைத்தனர்.

ராமச்சந்திரன் சண்டைச் சேவலாய் தலையைச் சிலுப்பி விட்டுப் போய்விட்டான். சுத்தியிருந்தவர்கள் எதை எதையோ பேசிக்கிட்டு, இளக்காரமா சிரிச்சிட்டு நழுவிக் கலைந்தனர்.

''ரெண்டு பேர் மேலேயும் தப்பு இல்லே. ஆனா சண்டை நடக்குது. நல்ல கூத்தாயிருக்கு நம்ம பொழைப்பு, நாய்ப் பொழைப்பு'' என்று சலிப்போடு முணுமுணுத்துவிட்டு, பெரியவர்களும் தாமதமாகக் கலைந்தனர்.

மீண்டும் தனிமையாய் - ஒத்தையாளாய் சின்னச்சாமி. உடைஞ்சு சிதைஞ்சுபோன சின்னச்சாமி. மூளிப்பட்டு இழிவாகிப்போன அரிச்சந்திரன்.

நாணயத்தைக் காப்பாத்துற யோக்கியனாக நடந்துக் கிடறதுக்காக எடுத்துக்கிட்ட முயற்சிகள்... நிமிடந்தோறும் துடிச்ச துடிப்புகள்... இழக்கக்கூடாததையெல்லாம் இழக்கத் துணிஞ்ச தீவிரம்...ராமச்சந்திரன் வம்சமே தழைக்க வாழ்த்துன மனசு....

எல்லா உண்மைகளும் பொய்யாகிப் போச்சே. வீணாகிப் போச்சே... ஊர் சிரிக்கற மையப் பொருளா நிக்க வேண்டியதாகிடுச்சே....

ஏமாத்துற அயோக்கியன்னு ஊரு நெனைக்க ஆரம்பிச் சிருச்சே...

கட்டுப்படுத்தலையும் மீறி விம்முகிற மனசு. விடைத்து நடுங்குகிற உதடுகள். உறுத்தலெடுக்கிற கண்கள். அழக்கூடாது. முழுத்த ஆம்பளை வாய்விட்டு ஊமையழுகையாய் அழுவதைப் பார்ப்பதற்கு-

அங்கே யாருமில்லை.

வாழ்க்கை மட்டுமே மிச்சமாக இருந்துச்சு.

-செம்மலர் 1988



# 5. விசாரணை

ரெக்கைகளை அடித்துக் கூவிய சேவலின் சத்தத்தில் முழிப்பு தட்டிவிட்டது. முற்றத்தில் லட்சுமி சாணிப்பால் தெளிக்கிற சளப், சளப்!

கனியப்பனுக்கு எந்திரிக்க மனசில்லை. மனசுக்குள் ஓடுகிற எண்ணத்தின் கையைப் பிடித்துக்கொண்டு, அதன் போக்கிலேயே மிதக்க வேண்டுமென்ற ஆசை. மனசுக்குள்ளேயே கதை தேடி அலைகிற எண்ணம்.

உள்ளுக்குள் நிறைய கதைப் பிண்டங்கள். இன்னும் வடிவம் கொள்ளாத அரைகுறையான பிண்டங்கள். ஏதாச்சும் ஒரு பிண்டத்தை எடுத்து, முழுசாக வார்த்து, வர்ணம் தீட்டி, இன்னிக்கே தபால்ல அனுப்பியாகணும். பொங்கல் மலருக்குக் கதை தர்றதாக ஒப்புக்கொண்டாச்சு. தேதி நெருங்கி வந்து நின்னு மிரட்டுது.

எந்தப் பிண்டத்தை எடுக்கலாம்! உள் உலகத்திற்குள் நிறைய கதைகள். அரையும் குறையுமாய் - சிதிலமாய் கதைகள். மூடிய கண்ணுக்குள் ஏதேதோ காட்சிகள்.

தகரக் கதவு தடதடக்கிற சத்தம். உள் உலகத்திலிருந்து கனியப்பனை வெளியே இழுத்துப்போட்ட சத்தம்.

''யாரது?'' முகச் சுளிப்போடு கண்ணைத் திறந்தான்.

அழுக்கான இருட்டில் ராமசாமி தெரிந்தான். அவனைக் கண்டவுடன் புரிந்துகொண்ட மனசுக்குள், சண்டாளமாக எரிச்சல். இவன் நிஜ உலகத்தின் நிதர்சனம்.

''என்னப்பா?''

''இன்னிக்குக் காலைக் கரண்டு, எனக்கு நேத்தே பாய்ஞ்சு போச்சு. நீங்க இப்ப தண்ணி பாய்ச்சப் போறீகளா? இல்லே, உங்க தம்பிகிட்டே சாவியைக் குடுத்து தண்ணிப் பாய்ச்சச் சொல்லவா?''

மனசுக்குள் அழுத்துகிற ஒரு பாரம்.

நாலைந்து நாட்களுக்கு முன்பே பாய்ந்திருக்க வேண்டும். வாடித் துவண்டு கிடக்கிற பருத்திச் செடிகள். உச்சிப் பொழுதில் பார்த்தால்...குலை பதறுகிறது. இலைகள் எல்லாம் முகம் செத்துச்

சாம்பலாய்த் தொங்குகிற கோரம், சாகக் கிடக்கிற குழந்தைகளைப் போல மனசைத் துடிக்கச் செய்கிற சோகம்.

''என்ன சொல்றீக?'' நெருக்குகிற நிஜ உலகம்.

''ஐயய்யோ, நா பாய்ச்சணுமய்யா. வாடிப் பொசுங்குது''.

''காலைக் கரண்டு, சீக்கிரம் போங்க. இந்தாங்க கரண்டு ரூம் சாவி.''

வழக்கமாய் உட்கார்ந்து கதை எழுதுகிற சாய்வு பெஞ்சையும், பேடையும் பார்த்தான். அவை, இவனைப் பரிதாபமாய்ப் பார்ப்பது போலிருக்கிறது. நெருங்கமாட்டாயா, தொடமாட்டாயா என்று கெஞ்சுவதுபோல் இருக்கிறது.

வெள்ளாமையைப் பொசுங்கவிட்டுட்டு, உட்கார்ந்து கதை எழுதவா முடியும்? கூலியாளைவிட்டுத் தண்ணி பாய்ச்சறாப்புலே பொழப்பு ஞாயமும் இல்லியே...

அவனுக்குள் சண்டாளமாய்ப் பொங்கிப் பொருமிய கோபம். யார் மீது மோதுவது என்று தெரியாமல் சீறுகிற குருட்டுக் கோபம். 'ச்சீய், நாய்ப்பய பொழப்பு!'

எதையோ எதற்கோ திட்டிவிட்டு, மம்பட்டியை எடுத்தான்.

'ஆசையிருக்கு பேனா எடுக்க...யோகமிருக்கு மம்பட்டி பிடிக்க!'

நீச்சுத் தண்ணியைக் குடித்துவிட்டு வெளியே வந்தால், முகம் தெரிகிற வெளிச்சம். மட்டு மரியாதையற்ற மேல் காற்று. கோடையிலும் கோடையான வறண்ட கோடை. நிஜ உலகத்தின் அக்கினிக் கோடை.

கனியப்பன் அவசரமாய்ப் புஞ்சைக்குள் நுழைந்தான். பெரு வாய்க்காலை மண் வெட்டியால் செதுக்கி ஒழுங்குபடுத்தினான். வாய்மடைகளை விலகி வைத்தான். தொட்டியில் கிடந்த தண்ணீரை அள்ளி அள்ளிக் குழாய்க்குள் ஊற்றினான். எல்லாம் துரிதகதி.

பரபரப்பாய் ஓடி பம்ப்ஷெட்டைத் திறந்தான். குப்பென்று மூஞ்சியில் மோதுகிற புழுக்க நெடி. நாசி கமறலெடுக்கிறது. உள்ளுக்குள் இறங்கி, 'அடிபெட்டுக்குள்' வந்து, 'ஏர்வாசை' பிடுங்கிவிட்டான்.

தவ்வி, மேலேறி, பச்சை பட்டனை அழுத்தினான். சவமாய் படுத்துக்கிடந்த மோட்டார், வேதாளப் பேரிரைச்சலாய் உயிர் பெற்றது. அள்ளி இறைத்த நீர், வெள்ளிக்கற்றையாய்ப் பாய்கிறது.

தொட்டியில் நுரை பொங்கிப் பெருகி, வாய்க்காலில் ஓடத் துவங்கியது. பாம்புகள் போட்டி போட்டுக்கொண்டு ஊர்ந்து ஓடுவது போலிருந்தது.

வேலைப் பரபரப்பில் தெரியாமலிருந்த களைப்பு, இப்போது முழுசாக உணர வைக்கிறது.

டிராயர் பாக்கட்டில் நெளிந்து கிடந்த சிகரெட்டை எடுத்தான். ஆசையோடு பற்றவைத்துக்கொண்டான்.

தோட்டத்திற்குள் தலைவைத்த தண்ணீர், கழுத்தடி பாத்திக்குள் முதலில் பாய்ந்து பரவியது. இலைச் சருகுகளை இழுத்துச் செல்கிற சரசர சத்தம்; வெடிப்புகளுக்குள் பாய்ந்து, டிப் டிப் டிப்பென்று நுரை விடுகிற சத்தம்.

கயலியை அவிழ்த்துச் சுருட்டினான். டிராயர் பனியனுடன் வாய்க்காலுக்குள் ஓடினான். வாய்மடையை கொத்தி விலக்க, அடுத்த பாத்திக்குள் தலை நுழைக்கிற பாம்புத் தண்ணீர்.

மஞ்சணத்தி மரத்தில் வந்து நின்று கரைகிற பணங்காடை, குஞ்சைப் பறிகொடுத்த தாயின் பரிதவிப்பாக அதன் கதறல். இவன் மனசைக் கலங்க அடிக்கிற கதறல். வேலிப் புதருக்குள் செம்போத்துப் பறவையின் இனிய கூவல். கூக்கு, குக்கூ.... கூக்கூ, குக்கு...குயிலை ஞாபகபடுத்துகிற இனிய குரல். காதலியைத் தேடி ஏங்கிக் கூவுகிற, தாபக் கூவல்.

கதை எழுதிக்கொண்டிருக்கவேண்டி''யவன், இங்கே சகதியை வகிர்ந்து கொண்டிருக்கிறான். தூரத்து மலையையும், சூரியனையும் பறவைகளையும், அதன் உள் உலகங்களையும் ரசித்துக் கொண்டிருக்கிறான். நல்ல கூத்துதான்.

டீக்கடையில் டேப்-ரிகார்டு பாடுகிற சத்தம், டீ குடித்தால் நன்றாக இருக்கும் என்று ஆசைப்படுகிற மனசு. ஊரைப் பார்த்தான். காலை வெயிலின் தங்கப் பிரகாசத்தில் துல்லிய அழகுடன் தெரிகிற கிராமம். காரை வீடுகள், ஓட்டு வீடுகள், ஏராளமாய்க் கூரை வீடுகள்.

ஊரிலிருந்து வருகிற ஒற்றையடிப்பாதை. ஏமாற்றத்தைத் தருகிறது. லட்சுமி வரவில்லை. வந்தால்...டீ வரும். கொஞ்சம் தெம்புவரும்.

நிறை நிறையாய்ப் பாய்ந்து, அடுத்த வாய்க்காலுக்கு வாய் மடையைக் கொத்தினான். சொத சொதப்பான ஈர மண். பதிந்த மம்பட்டியை இழுக்க முடியவில்லை. ஈரத்தில் கனமேறிப்போன மண், இவன் பலத்தைச் சோதிக்கிறது. மூச்சுப்பிடித்துக் கொத்தி இழுத்தான். புஜமெல்லாம் வலி. நெஞ்சுக்கூடு உலர்ந்துபோய் காந்துகிறது. தொண்டையில் கமறலான எரிச்சல்.

சிரமப்பட்டு வாய் மடை கொத்தி வைப்பதற்குள், ஏற்கனவே பாய்ந்த பாத்தியில் உடைப்பு. ஓடுகிறான் அடைக்க. சேற்றுத் தண்ணீர் சளப்பென்று முகத்தில் மோதுகிறது. கடைக் கண்ணில் காந்தல். அதைக் கழுவிக்கொண்டு வியர்வை.

அலுத்துப் போச்சு. ச்சீய்யென்றாகிவிட்டது. உசுரை வதைக்கிற ரணகளமாய்ப் புஞ்சை. பருத்திச் செடிகளைக் கண்டாலே எரிச்சலாக வருகிறது.

பேனா பிடிச்சு எழுத்துக்களை ஆட்டுவிக்க வேண்டியவன், மம்பட்டியைப் பிடிச்சு ஓடுற தண்ணியோட போட்டி போட முடியுமா? கனியப்பனுக்கு உள்ளங்கையெல்லாம் தீப்பிடித்த மாதிரி காந்துகிறது. குனிந்து குனிந்து நிமிர்வதில் இடுப்பெல்லாம் கடுக்கிறது. தொடைச் சதையெல்லாம் முறுக்கிப் பிழிகிற வேதனை.

எரிச்சலில் கண்மூடித்தனமாய் மனசு அலறுகிறது. மோட்டாரை ஆஃப் செய்துவிட்டு ஓடி விடலாமா, என்று கசந்து போய் நினைத்தபோது-

ஒற்றையடிப் பாதையில் உயிர் வந்தது. கையில் காபித் தூக்குச்சட்டியுடன் லட்சுமி வந்தாள். பாலூற்றிய நல்ல காபி. வெல்லமும், தேயிலையும் போட்டு கொதிக்க வைத்த காபி. மனசுக்குள் ஆறுதலாய் ஒரு தென்றல்.

"என்ன இம்புட்டு நேரம்?"

"வீட்லே வேலையை முடிச்சுட்டுத்தானே வரனும்! என்ன இது, இப்படி வேர்த்துக்கிடக்கு? 'கேஸு, பூஸு'ன்னு இளைக்குது?"

"அதை ஏன் கேக்கே? மனுசனுக்கு உயிர் போகுது."

"காட்டு வேலைகள்லேயே லேசான வேலை தண்ணி பாய்ச்சுறதுதான். இதுக்கே இப்படி ஒடித்தவிச்சா...மத்த வேலைகளையெல்லாம் எப்படிச் செய்வீக?"

"கதை எழுதுறவனை, தண்ணி பாய்ச்சச் சொன்னா முடியவா செய்யுது?"

"கதை எழுதுனா ஆயிரம் ரெண்டாயிரமா வருது? வருசத்துக்கொருதடவை எப்பவாச்சும் ஒரு எழுபத்தைஞ்சு ரூவா. அதை வைச்சு புள்ளை குட்டிகளைக் காப்பாத்த முடியுமா? காடுகரையைக் கவனிச்சாத்தான் நடக்கும்"

"சக மனுசங்களுக்கு நல்லது சொல்றதுக்கெல்லாம் கூலி எதிர்பார்க்கக்கூடாதும்மா..."

''கதை எழுதறேன்னு சொல்லிக்கிட்டு, இரவும் பகலுமா உறக்கமில்லாம உக்காந்து, சீரட்டை ஊதி ஊதி ஒடம்பைக் கெடுத்துக்கிடுதீக. அப்புடி ஒழைக்கிற ஒழைப்புக்கு ஒரு வருமானம் வரவேண்டாமா? ஒரு கூலி வரவேண்டாமா? வரலேன்னா, எதுக்காக ஒழைக்கணும்? எதுக்காக எழுதணும்? நாலு பேரைப்போல, காடு கரையிலே பாடுபட்டுட்டு இருக்க வேண்டியதுதானே?''

''ஐயோ...ஒனக்கு இதை எப்புடிப் புரிய வைக்கப் போறேன்?''

''எனக்குப் புரியவும் வேண்டாம். நீங்களும் உருப்பட மாட்டீக. சரி, சரி... காபியைக் குடிங்க.''

அவள் இரண்டு பாத்திகளுக்குக் கொத்திவிட்டாள். காபியைக் குடித்தபின், கனியப்பன் சிகரெட்டைப் பற்றவைத்துப் புகையை ஊதினான். நெஞ்சுக்குள் மயிலிறகால் உரசுகிற சுகம். உடம்புக்குள் கொஞ்சம் தெம்பு வந்திருந்தது.

லட்சுமி போய்விட்டாள். மறுபடியும் தனியனானான். அவன், அவனுக்குள் உலவினான்.

காலுக்கடியில் ஓடுகிற வாய்க்கால் தண்ணீரின் பாஷைக்கு அர்த்தம் கற்பித்துப் பார்த்தான். பாத்தி நீரில், கோர ஜ்வலிப்பாக பிரதிபலிக்கிற சூரிய கிரணத்தை வார்த்தைப்படுத்திப் பார்த்தான்.

நீருக்கடியில் ஓடுகிற மண் துகள்களையும், கரைகிற மண்கட்டிகளையும், அசையாமல் நிற்கிற கற்களையும் பார்த்து...இவற்றையெல்லாம் எதற்கு உவமைப்படுத்தலாம் என்று மண்டைக்குள் குடைந்துகொண்டிருந்தான்.

பொங்கல் மலருக்குக் கதை தருவதாக ஒப்புக்கொண்டு கடிதம் எழுதி, ஒரு மாதம் ஓடிவிட்டது. ஒன்று மாற்றி ஒன்றாக ஒவ்வொரு நாளும் இடைஞ்சல். உர உப்பு வாங்க பணம் வாங்கணும். சிம்புஷ் மருந்தடிக்க ஆள் பார்க்கணும். களைவெட்ட ஆள் கூப்பிடணும். கடன் கேட்டு எவனெவன் முகங்களையோ பார்த்து அலையணும். குழந்தைக்குக் காய்ச்சல், தலைவலின்னா ஆஸ்பத்திரிக்குக் கொண்டு போகணும். வந்திருக்கிற பாராட்டு விமர்சனக் கடிதங்களுக்குப் பதில் போடணும்.

இப்படி நித்தம் ஒரு நச்சுப் பிடுங்கல். ஒரு இச்சிலாத்தி. நாளைதான் கடைசித் தேதி. இன்றைக்கு எழுதி முடித்துவிட நினைத்தால்...வந்து சேர்ந்தது, தண்ணீர் பாய்ச்சுகிற உத்யோகம். கொடுமை! நிஜ உலகத்தின் நிர்த்தாட்சண்யமான கொடுமைகள்... சராசரி சம்சாரிக்குரிய சகல சங்கடங்களும், பிக்கல் பிடுங்கல்

கடமைகளும், இவனையும் போட்டு அமுக்கிக்கொள்கிறது. ஏறிக் கொண்டு 'தங்கு, தங்கு' என்று குதியாட்டம் போடுகிறது.

இதையெல்லாம் பொருட்படுத்தாமல் புறம் தள்ளி, 'எழுத்தே லட்சியம்' என்று இருக்க முடிகிறதா என்ன?

லட்சுமி சொல்றதும் ஞாயம்தானே! கதை எழுதறதைவிட, தண்ணி பாய்ச்சுறது எம்புட்டோ மேல். பொங்கல் மலர் வந்தா வந்துட்டுப் போகட்டும். அதுக்காகப் பதறிப் பதைச்சு எழுதி ஆகப் போறது என்ன? கிடைக்கப்போறது என்ன? ஒன்றுமில்லே.

புகழையும் பெருமையையும் வைச்சுக்கிட்டு மாரடிக்கவா? அரைப்படி அரிசிக்குக்கூட ஆகாது. உப்புக்கல்லுக்குப் பெறாத ஒரு விஷயத்துக்காக...எதுக்காக பதறிப் பதைச்சு, வீணா மனசை அலட்டிக்கணும்?

திடுக்கிட்டுக் காலடியைப் பார்த்தான் கனியப்பன். வாய்க்காலில் தண்ணீரைக் காணோம். என்ன ஆயிற்று? விருட்டென்று கிணற்றுப் பக்கம் பார்த்தான்.

மோட்டார் ஓடுகிற இரைச்சல். வெள்ளிக் கற்றையாய்த் தொட்டியில் பாய்கிற நீர். அப்போ... தண்ணீர் எங்க போகிறது?

அலையக் குலையப் பெரு வாய்க்காலுக்குள் ஓடினான். உடைப்பு. பெரிய உடைப்பு. அசந்த ஆட்டுக்காரனை ஏமாற்றிவிட்டுப் பயிரில் மேய்கிற கள்ள ஆடுகளைப் போல, தண்ணீர் ஆத்திர அவசரமாய் ஓடிக்கொண்டிருந்தது.

திரும்பவும் பாத்திக்கு ஓடி, மம்பட்டியை எடுத்து வந்து, பக்கத்து மண்ணை வெட்டி வெட்டி அள்ளி, கரடுகளை எடுத்துப்போட்டு அடைத்து முடிப்பதற்குள், 'ஆத்தாடி அம்மாடி, என்றாகிவிட்டது. கையெல்லாம் உளைச்சல். ஓய்ந்துபோன மாதிரி அயற்சி. தொடையெல்லாம் பிசைகிற வலி.

மறுபடியும் பாத்திக்கு ஓட்டம். சகதிக்குள் சளபுளத்து ஓடி, வழுக்கி, சாயாமல் பாலன்ஸ் பண்ணி, அங்கும் ஈர மண்ணைக் கொத்தி, வாய்மடையை விலக்கி...

ச்சே! வாழ்க்கையே வெறுத்துப்போன மாதிரி இருந்தது. இயலாமையின் எரிச்சலில் யார் யாரையோ திட்டினான்.

நடுமுருசலுக்கு வந்தாயிற்று. அப்பாடி...கொஞ்சம் நிம்மதி. இந்த முருசலில் சிரமமில்லாமல் நீர்ப் பாய்ச்சலாம். வாய் மடையைக் கொத்தி விட்டுவிட்டு, கொஞ்ச நேரம் இடுப்பு ஆற்றலாம். தேங்காது.

உடைக்காது. ஒழுங்காகப் பாயும். தார் ரோட்டில் மாட்டு வண்டி பற்றுவது மாதிரி... சுலபமாக இருக்கும்.

கதை எழுத வேண்டியதில்லை என்று முடிவு செய்து கொண்டதால்...மனசுக்குள் ஒரு விடுதலை பெற்ற சிலாக்கியம். மூச்சுத்திணறல் குறைந்திருந்தது. பிக்கல் பிடுங்கல் இல்லை. தவிப்பு-குமைச்சல் தணிந்திருந்தது.

தீக் கோலமாய் எழுந்த சூரியன், உலகைக் கண்டு பயந்து முகம் வெளுத்து மேலேறுகிறது. பால் கேனும், காலைப் பஸ்ஸும் வந்துவிட்டுப் போய்விட்டன. மணி எட்டுக்கு மேலிருக்கும்.

வடக்கே ஆறு. ஆற்றங்கரையில் பனந்தோப்பு. தோப்புக்குக் கிழக்கே மயானக்கரை.

தற்செயலாக மயானக்கரையைப் பார்த்தான். பார்வையைப் பிடுங்கமுடியவில்லை. அங்கே...

மஞ்சனத்தி மரத்தை அடையாளமாகக் கொண்டிருந்த சமாதியின் முன்னால் ஒரு சிறுவன். நீல நிற டவுஷர். மேலே வெற்று உடம்பு. செம்பட்டை ரோமம். சமாதி முன்னால் நின்று, நெஞ்சில் அடித்துக் கொள்கிறான். கண்களைத் துடைத்துக் கொள்கிறான். ஏதோ சொல்லிப் புலம்புகிறான். அழுகிறான். யாரிது? யார் இந்தப் பையன்? கனியப்பன் மனசுக்குள், கூடு கட்டுகிற சோகம்.

சூரியப் பிரகாசம் கண்களை அம்பாகக் குத்துகிறது. பார்க்கவிடவில்லை. இடது கையைக் கண்ணுக்குக் குடையாக்கி, பார்வையைத் தீட்சண்யப்படுத்திக்கொண்டு-

அட, நம்ம மணிமுத்து!

போன வருஷம்தான், முல்லைக் கொத்துப்போல மூன்று பிள்ளைகளை விட்டுவிட்டு ராசாத்தி, போய்ச் சேர்ந்தாள். மூன்றில் கடைக்குட்டி மணிமுத்து.

இன்பத்தின் - துன்பத்தின் - வாழ்க்கையின் பங்காளியாக இருந்த ராசாத்தியைப் பறிகொடுத்துவிட்டுத் தவித்து நின்ற முருகையா, சொந்த இழப்புச் சோகத்தை விழுங்கிக் கொண்டார். தாயற்ற பிஞ்சுகளின் ஏங்கிய கண்களைப் பார்த்துப் பார்த்து மனம் கலங்கினார். நெருப்புக்குள் இருந்த மெழுகாக உருகிக் கரைந்தார். உள்ளுக்குள் உடைந்து நொறுங்கிக் கலகலத்துப் போனார்.

ஏழ்மையோடு, இந்தக் கொடுமையும் சேர்ந்து, அவரது கழுத்தைப் பிடித்து நெரித்தது. அவரது ஒரே குறி, பிள்ளைகளின் பூ

மனசு வாடிவிடக்கூடாது, ஏங்கிச் சாம்பிவிடக்கூடாது, தாயில்லாக் குறை அதுகளுக்குத் தெரிந்துவிடக்கூடாது என்பதுதான்.

ராசாத்தி இருந்து காட்ட வேண்டிய பரிவு, பாசம், அன்பு முழுவதையும் சேர்த்துப் பிள்ளைகளின் மீது கொட்டினார். வாழ்வின் வெக்கை பிள்ளைகள் மீது பட்டுவிடாமல், தன் அன்பு ரெக்கைக்குள் அந்தக் குஞ்சுகளை அரவணைத்துப் பொத்திக்கொண்டார்.

பிள்ளைகள் கண்கலங்கச் சம்மதிக்கவேமாட்டார். அப்பேர்ப்பட்டவரின் அருமைப் பையன், தாயின் சமாதியில் வந்து அழுது புலம்புவது என்றால்...

அந்தப் பூ மனசில் எவ்வளவு கொடிய நிராதரவு உணர்ச்சி!

கனியப்பன் பார்வை, அந்தச் சிறுவன் மீதே நங்கூர மிட்டிருந்தது. இடையில் சில பத்து மீட்டர் தூரம். மனசளவில் இடைவெளியில்லை. மனசுக்குள் மணிமுத்து இருந்தான். சிறுவனின் கண்ணீர், உள்ளே இறங்கிச் சுட்டது. மனசை அறுத்தது.

இதயமில்லாத உலகில், இந்தச் சிறுவனுக்குத் தாயின் சமாதியே இதயமாகியிருக்கிறது.

இப்படி நிராதரவுணர்ச்சிக்காளாகி, மயானக் கரையில் வந்து புலம்பி அழுகிற அளவுக்கு இந்தப் பூவை எந்தப் பாவி கிள்ளியது? வேறு யார் கிள்ளியிருந்தாலும், மணிமுத்து தகப்பனிடம் முறையிட்டிருப்பான். முருகையாவும் சண்டாளமாகிச் சண்டைக்குக் கிளம்பி இருப்பார்.

முருகையாவே கிள்ளியிருப்பாரோ...! அதனால்தான் இந்தப் பூ, அம்மாவை நினைத்துப் புலம்பியழுக இங்கு வந்திருக்கிறதோ...?

பிள்ளைகள் கண்கலங்கக்கூடச் சம்மதிக்காத முருகையாவா கை நீட்டி அடித்திருப்பார்? அவரால் அடிக்கமுடியுமா? அடிக்க மனம் வருமா? அவர் அவராக இல்லாத நிலையில்...முறுக்கேறிய மனநிலையில் அடித்திருப்பாரோ?...வேறு யாரையோ அடிக்க வேண்டிய அடியை அடிக்க முடியாமல்... இவனிடம் வந்து ஆத்திரத்தைக் காட்டியிருப்பாரோ?...

கடையிலோ... தெருவிலோ... தோட்டத்திற்குப் போகும் வழியிலோ... எவனோ ஒருவன் மூலமாகச் சமுதாயம் இவரது மடியைப் பிடித்து இழுத்துச் செவிட்டில் அறைந்து, அவமதித்து மகிழ்ந்திருக்கும். அவரது ஆன்மாவைக் கடித்துக் குதறியிருக்குமோ...?

கொதிப்பேறிப்போன - குழம்பிப்போன - மனநிலையோடு வீட்டுக்கு வந்திருப்பார். வழக்கம்போலே மணிமுத்து கெஞ்சியிருக்கலாம். அண்ணனைப்பற்றி அபத்தமாய்ப் புகார் செய்திருக்கலாம். அடம்பிடித்திருக்கலாம்.

சகித்துக்கொள்கிற வழக்கத்திற்கு மாறாக... அவர் அவராக இல்லாமல் - இன்று அவனை ஆத்திரத்தில் அடித்திருப்பாரோ?...

வெலவெலத்துப்போய் - வெம்பிப்போய் - அன்பான ஆதரவுக்காக ஏங்கி, இந்தச் சிறுவன் இங்கு வந்து நிற்கிறானோ...

அடப் பாதரவே... இந்தச் சின்ன மலர் என்ன பாவம் செய்தது? இதற்கு இந்த வயசில் இந்த நிராதரவுணர்ச்சியா? நாதியற்றுப்போன உணர்வா? அடக் கொடுமையே!

சம்பந்தமில்லாத தூரத்தில் - ஒதுக்கத்தில் - இருககிற இந்தச் சிறுவனைக்கூட, தனது நீசக் கரத்தினால் தீண்டியிருக்கிறதே, கோர நகங்களால் இந்தப் பிஞ்சின் இளநெஞ்சைக் கீறியிருக்கிறதே... இந்தப் பிணம் தின்னும் சாஸ்திர சமுதாயம், எழுத்தாளனுக்கு மட்டும் இரக்கம் காட்டவா செய்யும்? இரக்கம் காட்டுறதுக்கு இதனிடம் ஈரம் ஏது? ரத்தப்பசியைத் தவிர வேறு எந்த நாகரிகமுமில்லாத இதனிடம், அரவணைப்பை எதிர்பார்ப்பதே எவ்வளவு அசட்டுத்தனம்? அப்பாவித்தனம்?

மனுசத்தன்மைக்காக ஏங்குகிற மனிதர்களை, மனுசத் தன்மையோடு வாழவிடாத இந்த ராட்சசனோட, எனக்கு எதுக்கு விசனம்? விசனப்பட்டு எதுக்காக ஒதுங்கணும்? எதுக்காக எழுதாம ஒடுங்கிக்கணும்?

ஓங்கியடிச்சு நொறுக்கித் தீரவேண்டிய பகைவனோட, என்ன ஊடல் வேண்டிக்கிடக்கு?

தோட்டம் தண்ணீர் பாய்ந்து முடிந்து...குளித்துவிட்டு வீடு திரும்புகிறவரை, மனசுக்குள் மணிமுத்து. துவண்டு கிடந்த உணர்வுகளைத் துடிக்க வைக்கிற மணிமுத்து. ஓய்வறியா போராவேசத் தீயை ஊதி ஊதிப் பெருக்குகிற மணிமுத்துக்கள்...

இரவு பத்து மணிக்கு மேல்-

ஓர் உறக்கம் உறங்கிவிட்டு விழித்த லட்சுமி, எரிச்சலுடன் முகத்தைச் சுளித்தாள். கண்களைச் சுளித்தாள். கனியப்பன் பிரம்மக்கலை நிகழ்த்திக்கொண்டிருந்தான்.

''லைட்டைப் போட்டுக்கிட்டு இதென்ன - சாமக்கூத்து? இப்படி ஒடம்பைக் கெடுத்துக்கிட்டு எழுதுறதாலே... என்ன லாபம்?''

''லாப நஷ்டக் கணக்குப் பாக்குற யாவாரமில்லே லட்சுமி, எழுத்துங்கிறது ஞாயத்துக்கான கலகம்.''

''இப்படி எழுதி எழுதி என்னத்தைக் கிழிச்சீக?''

'கிழிக்கலே. கிழிஞ்சு கிடக்கிறதையெல்லாம் சுட்டுப் பொசுக்கிட்டுப் புதுசாத் தைக்கணும். தைச்சுக்கிட்டிருக்கேன்.''

அவளுக்குப் புரியவில்லை. இச்சிலாத்தியோடு முணுமுணுத்துவிட்டு, உறக்கத்தில் உறைந்தாள். கனியப்பன், மணிமுத்துக்களின் கண்ணீரை விசாரணை செய்துகொண்டிருந்தான்.

–மூட்டா மாநாட்டு மலர், 1990



# 6. வாழும் பேய்கள்

மேற்குத் தொடர்ச்சி மலையின் நெற்றிக்குத் திலகமிட்டது போல... சூரியன் ஜொலித்துக் கொண்டிருந்தது. மேல்திசை அடிவானம், தனது நீல நிறத்தையிழந்து, செஞ்சாயம் பூசிக்கொண்டு மொடாக்குடியனின் கண்போலச் சிவந்து கிடந்தது. பறவையினங்கள் ஓய்வு தேடி, வாழ்வின் சுவையான ஆனந்தக் கீதம்பாடி, தத்தம் கூடுகளை நோக்கி வந்துகொண்டிருந்தன.

அந்த மாலை மயங்கிய நேரத்தில்தான், பழனிச்சாமி சைக்கிளில் மனமின்றி புறப்பட முயற்சித்துக்கொண்டிருந்தான். பலசரக்குக்கடை முதலாளி பரமசிவம் எச்சரிப்பதுபோல உத்தரவிட்டான். போக மறுத்துத் தயங்கிய பழனிச்சாமியை மிரட்டி, அன்பு காட்டி மயக்கிவிட்டவராயிற்றே!

''அடேய் பழனி, சீக்கிரமாப் போய்... ஒரு நொடியிலே வந்து சேரு... விடிஞ்சா நல்ல நாளு ஏவாரம். மூணாங்கிழமை ஏவாரம். நீயில்லாமெ ஒண்ணும் நடக்காது. போன உடனே... ரெண்டு கடலெண்ணை டின்னை வாங்கி சைக்கிள்லே கட்டிக்கிட்டு காத்தா பறந்து வந்துரணும்.''

'சரி...' என்பது போல் தலையாட்டினான். அவன் மனதுக்குள் பயந்தவாறும், திட்டியவாறும் முணுமுணுத்தான். வெறுப்பின் அலை பாயும் கண்கள், பரமசிவத்தின் முகத்தில் நிலைத்திருந்தன - அவர் கண்களும் முகமும் அன்பில் மழையின் மேகமாகக் கனிந்திருந்தன. கெஞ்சுவது போலச் சொன்னார்.

''அப்பா பழனி... சினிமா பாத்தேன்- இல்லே- இருட்டுலே பயமாயிருந்துச்சு, அப்படி இப்படின்னு ஏதாச்சும் சொல்லிக்கிட்டு ராத்தங்கியிராதேப்பா... காலை ஏவாரத்துக்கு எண்ணையும் வந்தாகணும், நீயும் இருந்தாகணும். நீயில்லீன்னா எனக்குக் கையும் ஓடாது, காலும் ஓடாது.''

'ஐஸ் வைக்கிறான், ஐஸ் வைக்கிறான்' என எரிச்சலுடன் பழனி நினைத்துக்கொண்டான். பரமசிவம், இன்னும் ஏதேதோ அக்கறையும், கரிசனமுமாகச் சொல்கிறார். பணத்தை எண்ணித் தருகிறார். பழனி அதை வாங்கி டவுசரின் வலது பைக்குள் வைத்து, அது எம்பிக் கீழே விழுந்துவிடாமலிருக்க ஒரு 'பின்'னையும் குத்திக் கொண்டான்.

"கேர்யல்லே ரெண்டு டின்களையும் நல்லாக் கட்டிக்கோ... போனோம் வந்தோம்னு 'பொட்'டுன்னு வந்து சேரணும்ப்பா. ராச்சாப்பாட்டுக்கு இங்கே வந்துரணும் என்ன... நா சொல்றது வெளங்குதா?" என்று பரிவுடன் கூறிய பரமசிவம், வெறுப்பும் மிரட்சியுமாக மருண்டு நின்ற பழனியிடம், கரகரத்த குரலினை மாற்றி இறுக்கிக் கொண்டு மிரட்டினார்.

"நா இம்புட்டுச் சொல்லியும் நீ வராமெயிருந்தே- காலையிலே மூணாங்கிழமை ஏவாரத்தைக் கெடுத்தே- அம்புட்டுத்தான்- ஒன்னை நாலு 'இழுப்பு' இழுத்து, 'போடா நாயே'ன்னு கடையெவுட்டே வெரட்டியடிச்சுப்போடுவேன்... பாத்துக்கோ."

பரமசிவத்தின் சிவந்து இடுங்கிய கண்கள், ஆத்திரத்தில் மேலும் இடுங்கிப் போய், நாகப்பாம்பின் கண்போலப் பயமுறுத்தின.

பழனி, உண்மையில் கிடுகிடுத்துப் போனான்.

கொஞ்சம் அசந்தா... வேலையும் போயிடும்... சோறும் போயிடும். ஜாக்கிரதை உணர்வும், அவசரமாகத் திரும்பிவிட வேண்டும் என்ற துடிப்பும் உருவான அதே சமயத்தில்... மனதில் அடித்தளத்தில் அச்ச உணர்வு மெள்ளத் தலைகாட்டி... அவனை நடுங்கவைத்தது. பரமசிவம் இன்னும் கத்திக்கொண்டேயிருக்கிறார். சைக்கிள் பெடலை மிதித்து, உடலின் பாரத்தை அதில் இறக்கிச்சீட்டில் ஏறி உட்கார்ந்து சற்று தூரம் வந்த பின்னும்- "சீக்கிரம்... சட்டுன்னு வந்துடு... கீழே போட்டுடாதே... நாளை ஏவாரம்... நல்ல நாள் ஏவாரம்... மறந்துடாதே" என்ற துண்டு துக்காணியான எச்சரிக்கைக் குரல் துரத்தி வந்தன.

வெயிலுமில்லை, இருட்டவுமில்லை; ரெண்டுக்கும் இடைப்பட்ட இந்த நேரத்தில், சாம்பல் நிற வெளிச்சம் வானத்தில் ஒளிப்பிரதிபலிப்பாகப் பரவி நின்றது. ஆனால் அந்த 'அற்பாயுசு' வெளிச்சத்தையும் விழுங்க, இரவின் இருள் கரங்கள் பேராசையுடன் நீண்டு வந்தது. பழனி, வேக வேகமாக சைக்கிளை மிதித்தான். இளமை கொஞ்சும் முகத்தில் வேர்வை அரும்பி பிசுபிசுத்தது. உதட்டின்மேல் 'பொசு பொசு'வென வளர்ந்திருந்த பூனை ரோமங்களில், வேர்வை துளிர்த்து நின்றன. புரட்டாசி மாதத்துக்கே உரிய வடமேற்குப் பருவக்காற்று ஓங்காரமாக வீசியடித்து, மேற்கு நோக்கி வந்து கொண்டிருந்த பழனிக்கு எதிர்ப்பு தெரிவித்து... சவால்விட்டது.

'சே... எதுர் காத்தாயிருக்கே' என்ற முணுமுணுப்புடன் சீட்டைவிட்டு எழுந்து நின்றவாறே- வானுக்கும் பெடலுக்குமாய் ஊஞ்சலாடுவதுபோல மிதித்தான். ஸிலாக் ஸர்ட்டு காற்றுக்குப்

புடைத்தது. பலசரக்குக் கடைக்கேயுரிய விதத்தில் பலவிதமான கறையும் அழுக்குமாகச் சேர்ந்த டவுசர், கனத்து நசநசத்தது. அவனது பக்குவமற்ற மனதில்... முதலாளியின் நாகப்பாம்பின் கூர்மையான கண்கள் தோன்றி அச்சுறுத்திக்கொண்டேயிருந்தன. வேகமாக இருட்டியது. இருள் பரவப் பரவ, பழனியின் நெஞ்சில் இனம் விளங்காத அச்சம் தலைதூக்கி நடுக்கியது. 'ஹே...நா எதுக்குப் பயப்படணும்' என்று குழந்தைத்தனமான வீறாப்பும் மனதில் எழுந்தது. ஆனால், அது குளத்து நீரின் நிச்சலனம்போல நிச்சயமற்றதுதான். சிறு அசைவு வந்தாலும் போதும், சலனம் வந்துவிடும்.

கறுப்புத்துணிபோல இருள் பூமியைப் போர்த்தி மூடி விகாரப்படுத்திவிட்டது. பழனி வேக வேகமாகப் பெடலை அழுத்தினான். இருட்டின் அடர்த்தியால் எதிரில் வரும் சைக்கிள்கள், மனிதர்கள்கூட தெரிய மறுக்கின்றனர். அந்த இருட்டில், தூரத்தில் தெரியும் கிராமங்களின் தெரு விளக்கின் 'மினுக்'கொளி, ஏதோ கொடிய மிருகங்களின் பசிமிக்க கண்கள் போல அச்சுறுத்தியது. 'பயந்துவிடக்கூடாது' என்ற தன்னுணர்வின் காரணமாக, மன ஓட்டத்தின் திசையை வேறு பக்கமாக செயற்கையாகத் திருப்பினான். ஆனாலும் பாழாய்ப்போகிற இந்த நினைப்பு... சுற்றிச்சுற்றி பழைய இடத்திலேயே வந்து நின்றது. 'இருட்டு...பேய்... பூதம்னா என்ன...? பிசாசுங்கிறது எப்படி இருக்கும்...? சுடுகாடு...' பழனியின் மனம் வலையில் பட்ட புறாவின் சிறகுபோல, படபடத்தது.

'ஐயோ... இந்த நினைப்பு தொலைஞ்சு போகாதா' என்று சள்ளைப்பட்டுக்கொண்டான். எண்ணங்களைப் ப வந்தமாக வேறு திசையில் திருப்பினான்... இருபதுக்கும், பதினைந்துக்கும் இடைப்பட்ட வயது கொண்ட அவன், வயதுக்கு மீறிய உடல் வளர்ச்சியும், உடலுக்கு எதிரான மன வளர்ச்சி இன்மையுமாக, முரண்பட்ட பக்குவ நிலையில்தான் இருந்தான்.

இந்தச் சின்னஞ்சிறு வயதிலேயே, வாழ்க்கையின் இராட்சஸக் கரங்களினால், வேண்டுமென்கிற அளவுக்குக் கசக்கிப் பிழியப்பட்டு விட்டான். சாதாரண விவசாயக் குடும்பத்தின் முதல் வாரிசு. தகப்பனார் உலக வாழ்க்கையிலிருந்து விடைபெற்று மண்ணாகிப்போனார். பெற்றவளுடன், தம்பிமார்கள் மூவர். அதுவும் நண்டும் நசுக்குமாக. உண்ணத் தெரியும் அதுகளுக்கு; உழைக்க முடியாது. பெற்றவள், வாழ்வின் பிறவிப்பயனே இதுதான் என்பதுபோல. அன்றாடம் கொத்து வேலைக்குப் போவாள். கூலியோ ஒருபடி கம்பு. அது சோத்துக்கே பத்தாது. மத்ததுக்கு?

குழம்புக்கு, புள்ளைத் தின்பண்டத்துக்கு, தலைக்கு எண்ணைக்கு- துணிமணிக்கு... மற்றதுக்கெல்லாம் என்ன செய்றது?

இந்தக் கேள்விக்குறிகளின் வளைவுகளை நிமிர்த்தக்கூடிய வலிமை, அந்த ஏழைத் தாயிடம் இருக்க முடியாதே! பலநாள் அவள் பட்டினியின் 'சொர்க்கத்தில்' எரிந்தது மிகச் சாதாரணம். கசப்பே வாழ்க்கை என்று, சகிப்பே உருவாக அந்த விதவைத் தாய். துன்பங்களைத் தின்று துயரங்களை, பருகியே ஜீவிக்கும் கொடுமை, மூத்த மகனாகப் பிறந்த 'பாவி' பழனியின் மனதை உறுத்தத்தான் செய்தது. தானாவது கூலி வேலைக்குப் போகலாம் என்று துடித்தாலும், இவ்வளவு 'சின்னப் பையனை' யார் வேலைக்கு அனுமதிப்பார்கள்! சின்னப் பையன்கள் நெஞ்சில் பெரும்பிரச்னைகள்- கவலைகள்- பாறாங்கல்லாய் அழுத்துவதை யாராவது கண்டார்களா, கவனித்தார்களா?

கடைசியில் ஒரு முடிவுக்கு வந்தான். தாயின் துன்பப் பாரங்களைத் தனது தலைக்கு மாற்றிக்கொள்ள முடியாவிட்டாலும், தானே பாரமாய் உட்கார்ந்திருப்பதையாவது தவிர்க்கலாமே என்று நினைத்தான். தாயைப் பிரிவது கஷ்டமாக இருந்தது.

எங்கெங்கோ சுற்றியலைந்தான். வெற்று வயிறு பற்றிய நெருப்பாக எரிய, நட்டநடு வீதியின் வெட்ட வெளியில் தூங்கிக் கிடந்த இரவுகள், பல. தாயின் நினைவில்... தம்பிகளின் பிரிவில் மனம் கசிந்து அழுதது. வயிறும், வாழ்க்கையும் துரத்தியது. ஈவு இரக்கமற்ற இந்த வாழ்க்கையின் ராட்சஸக் கால்களின் உதைபட்ட பந்தாக ஓடித்திரிந்து, கடைசியில் பரமசிவம் கடையில் தஞ்சமடைந்தான்.

"ஒனக்கும் ஆதரவில்லே... எனக்கும் ஒரு ஆள் கடைக்கு வேணும். நம்ம வூட்டிலே சோத்தைத் துன்னுக்கோ... துணிமணி ஏதோ என்னாலே ஏண்டதெ(இயன்றதை) எடுத்துத் தாரேன். மாசம் பானைஞ்சு ரூவாயும் தர்ரேன். என்ன சொல்றே?" என்று பரமசிவம் கண்ணை உருட்டி, மிரட்டுவது போன்ற தொனியில் சம்மதம் கேட்டபோது, பழனிக்கு சொர்க்கமே தனது மூறுகிய கதவுகளை அகலத் திறந்து, முகம் மலர வரவேற்பதுபோல இருந்தது. அப்படியொரு புளகாங்கிதம்.

இதோ... அதே கடையில் இரண்டு வருடத்துக்கு மேலே காலத்தை ஓட்டியாகிவிட்டது. அம்மாவுக்குப் போன மாதம்கூட, ஒரு அறுபது ரூபாய் அனுப்பி வைத்தான்.

ஆ... அந்த அறுபது ரூபாய் அம்மாவை எப்படி ஆனந்தமடைய வைத்திருக்கும்! பாலைவனத்து எண்ணத்தின்

உக்கிரத்திலே காய்ந்து கிடந்தவனுக்கு, ஒரு கிளாஸ் குளிர்ந்த நீர் கிடைத்ததுபோல அம்மா களித்திருப்பாள்.

நான் 'கோவிச்சுக்கிட்டு' ஓடிப்போனபோது, கண்ணீர் விட்டுப் புலம்பியிருப்பாள். 'எனக்கு வந்த துன்பம் போதாதுன்னு இவன் வேறெ நெஞ்சுலே நெருப்பள்ளிக் கொட்டிட்டுப் போய்ட்டானே' என்று அழுதிருப்பாள். ஆனால் இன்று, இந்த அறுபது ரூபாயைக் கண்டு பெருமையில் பூரித்திருப்பாள்.

'எம் மகன்... தங்க மகன்... இம்புட்டுச் சின்ன வயசுலே, எம்புட்டு அக்கறை' என்று என்னைப்பற்றிப் புகழ்ந்திருப்பாள்...

இந்தக் கற்பனையே பழனியின் மனசுக்கு எத்தனை இதமாக இருக்கிறது!

சைக்கிள், இருளையும் காற்றையும் ஊடுருவிப் பாய்ந்து முன்னேறிக்கொண்டிருந்தது. கேரியரில் கட்டியிருந்த வெற்று டின் இரண்டும் 'கடகட.... கடகட....' என்று ஒலி எழுப்பி, 'இதோ விழுந்து விடுவேன்... விழப்போகிறேன்' என மிரட்டியது. அந்த ஒலியே ஏதோ பயமுறுத்தல் போன்ற ஓர் உணர்ச்சியாய் அலைமோதியது.

ஏதோ ஓர் ஊரைக் கடந்து சென்றது சைக்கிள். சைக்கிள்களும், மனிதர்களும், ஏகதேசமாக ஒருசில லாரிகளும் எதிரில் தென்பட்டுக்கொண்டேயிருந்ததால், பயம் தெரியவில்லை. இருந்தாலும்... பன்னிரண்டு மைல் பயணம்... இருட்டு... திரும்ப வரவேண்டும்... இதையெல்லாம் நினைக்கும்போது, நெஞ்சில் ஒரு மர்மமான அச்சுறுத்தல் ஏற்படவே செய்தது.

இதே பாதையில் பல தடவை போய் வந்திருக்கிறான். ஆனால் பகலில்தான். இந்தத் தடவைதான் இரவில் வரவேண்டியதாற்று. போன வாரச் சந்தையில் கடலெண்ணை டின் தூக்கிவரவில்லை. ஆனால், நாளை நல்ல நாள் வியாபாரம். புரட்டாசி மாதத்து மூணாவது சனிக்கிழமை. விசேஷமான நாள். ஆகவே வியாபாரம் வழக்கத்திற்கு விரோதமாக 'ஓகோ'வென்றிருக்கும். கொழுத்த லாபம் கிடைக்கும். அதனால்தான் பரமசிவம் அத்தனை ஆவல் கொண்டு, பரபரப்புடன், பழனியை மிரட்டியும் அனுப்பிருக்கிறார்.

பழனி இதையெல்லாம் நினைக்கும்போது, மனம் கொதித்தது. 'சே! பேராசைக்காரப் பயல்! பேய் மாதிரி கொழுத்திருக்கான். நல்ல நாள் ஏவாரம்னா, அவன் லாபம் அள்ளிக் கொட்டுவான். எனக்கென்ன இருக்கு? எப்பவும் உள்ள சம்பளம்தானே! ஆத்து நிறைய தண்ணி போனாலும் நாய் நக்கித்தானே குடிக்கும்? இவன் பேயா கொழுக்குறதுக்காக நா... நாயா மிதிக்க வேண்டியிருக்க.

ராவுநேரம். ஒத்தையிலே போறோம். பேயடிச்சுச் செத்தாலும் பெரட்டிப் பாக்க நாதியில்லே.'

இன்னும் ஏழு மைல். இருட்டு, கறுப்பு மையாக அப்பிக் கொண்டிருந்தது. இன்னும் ரெண்டு மைலில் ஓர் ஆலமரம் இருக்கிறது. பின்னிப் பின்னிக் கிளைகள் அடர்ந்து இருண்டு கிடக்கும். பகலில் பார்த்தாலே, ஏதோ மர்மத்தை-பயங்கரத்தை- உட்கொண்டிருப்பது போல அவ்வளவு அடர்த்தியாக சடைவிரித்து பூதாகாரமாகத் தோன்றும். அந்த ஆலமரத்தடியில்தான் சுடுகாடு. அதில் பிணங்கள் எரிப்பதையும், புதைப்பதையும், பல தடவை இவனே கண்ணாரப் பார்த்திருக்கிறான்.

'பறவைகள்கூட தூங்குற நேரத்துலே... நா... பறப்பெடுத்துப் போய் திரியுறேன்... ஆந்தை மாதிரி! அந்த பறவைகள் செஞ்ச புண்ணியம்கூட நாஞ் செய்யலே போலும்! அதான் அவைகளுக்கிருக்கிற சுதந்திரமும், ஓய்வும் நமக்குக் கிடைக்கலே...'

சோகமான எண்ணங்கள் மூளையைச் சுற்றி, நெஞ்சில் ஒருவித துன்பமான வேதனையை ஏற்படுத்தியது.

ஆயிற்று. அந்தப் பெரிய நகரத்தின் ட்யூப் லைட்களின் வரிசையை அடைந்தாயிற்று. எண்ணை டின்னும் வாங்கியாயிற்று. சைக்கிளில் இறுக்கிக் கட்டி, ஸ்டாண்டை எடுக்கும்போது, சைக்கிள் பாரமாக இருந்தது. ஏதோ செக்கிழுப்பதுபோலக் கடினமாக இருந்தது. சைக்கிளின் பாரத்தைத் தனது வலது தோளில் சாய்த்துக் கொண்டு உருட்டினான். மணி என்ன இருக்கும்?

ஒரு கடையில் பார்த்தான். ஒன்பதரை. இந்நேரம் கிராமங்கள் அடங்கியிருக்கும். சாலைகளில் போக்குவாத்தும், மனித நடமாட்டமும் குறைந்துவிட்டது. ஓர் ஓட்டலில் தண்ணீரைக் குடித்தான். ஒரு சாயா வாங்கிப் பருகினான். லேசாக வாடைக்காற்று வீச ஆரம்பித்து விட்டது. சைக்கிளை எடுத்தான். டைனமோவின் ஒளி, 'டியூப் லைட்' வெளிச்சத்தில் அமிழ்ந்தது. வரும்போதிருந்ததைவிட மிதிக்க சிக்கலாக இருந்தது. லோடு வண்டி என்பதால், ரொம்பச் சிரமப்பட்டு மூச்சுப் பிடித்து மிதித்தான்.

இன்னும் பன்னிரண்டு மைல். ஊரடங்கிய நேரம். பயமுறுத்தும் கும்மிருட்டு... ரோட்டில் ஆளரவமும் வடிந்துவிட்டது. நகரத்தைக் கடந்தவுடன், மூளையில் சிந்தனைகள் மொய்த்தன. இருட்டைப் பற்றி... பூதத்தைப்பற்றி... பேயைப்பற்றி...

அவன் மனம் நடுங்கியது. அந்த நினைப்புகளை விரட்டிவிட முயற்சித்தான். ஆனாலும் முடியவில்லை. சுற்றிச் சுற்றி அதே நினைவுகள் வட்டமிட்டன.

சின்ன வயதில்... தெருவில் குழந்தைகளுடன் விளையாடிய சமயத்தில் கேட்ட பேய்க் கதைகள்... பெரியவர்கள் பேச்சில், பேயடித்து மனிதர்கள் இறந்த கதைகள்... அப்படி இறந்த மனிதர்கள் ரத்தம் ரத்தமாகக் கக்கி, முதுகில் ராட்சஸக் கரத்தின் தடம் பதிந்த கதைகள்... எல்லாம் பழனியின் மூளையைச் சுற்றி...நெஞ்சைத் திடுக்கிட வைத்தது.

சைக்கிளை மிதித்தான். பெடலைத் தன் வசமின்றியே உதைத்தான். சக்கரங்கள் உருண்டன. சாலையின் இருமருங்கிலும் உள்ள குட்டி மரங்கள்... குட்டிப் பிசாசுகள்போலப் பின்னோக்கி ஓடிற்று. முன்னால் விரித்த கறுப்புத் துணியாக நீண்டு பெருகும் தார் ரோட்டைக் கூர்மையாகப் பார்த்தபடியிருந்தாலும்... சிந்தனை, கட்டறுந்த கன்றுக்குட்டிபோல எங்கெங்கோ திரிந்தன. பேய்கள்... பேயடிச்சு செத்த மனுஷங்க... ரத்தம் கக்கி, 'முதுகிலே கையோட அஞ்சு விரலும் அப்படியே பதிஞ்சிருந்ததை எங்கண்ணாலே பார்த்தேன்' போன்ற உரையாடல்கள்...

பழனியின் உள்நரம்புகள் பூராவும் சிலிர்த்தன. அச்சத்தில், அந்த நினைவுகளின் விசித்திர அதிர்ச்சியில், நிலைகுலைந்தான். உள்ளங்கை வேர்த்து... ஆண்டில் பாரிலிருந்து வழுக்குவது போன்ற பிரமை! சிறுசிறு அரவமும், அவனைப் பெரிதாகப் பயமுறுத்தியது.

ஏனோ அம்மாவையும், தம்பிகளையும் நினைத்துக் கொண்டான்- ஏதோ மரண வாசலில் நிற்பவனைப்போல!

யாரோ தன்னை ரகசியமாகத் தொடர்ந்து வருவதுபோன்ற ஒரு பிரமை! பிரமையை உண்மையென நம்பி, 'விசுக்'கெனத் திரும்பினான். எங்கும் இருட்டு; சூழ்ந்த வெறுமை; மனித வாடையேயில்லாத மாய லோகத்தில், தான்மட்டும் சிக்கிக்கொண்டது போன்ற மனப்பிராந்தி! அந்த அகாலவேளையில், எங்கோ ஒரு கொடூரமான அலறல்! அந்த ஆந்தையின் அலறல், அவன் இதயத்தை ஊடுருவி, உணர்வில் கலந்து... ஒவ்வொரு ரோமக் கண்ணும் சிலிர்த்து அடங்கின. மனசில் ஐஸ்கட்டி வைத்ததுபோன்ற புல்லரிப்பு! தனது கடை முதலாளி பரமசிவத்தை நினைத்துப்பார்த்தான்.

'பேராசைப் பேய்!' என்று திட்டினான். தனது திட்டே தன்னைப் பயமுறுத்தும் வார்த்தையாக இருப்பதை உணர்ந்து திடுக்கிட்டான்.

'ஐயோ... நா எப்படித்தான் போய்ச் சேர்ரது! பேசாமெ இந்த ரோட்லேயே படுத்துட்டா என்ன! யாராவது சைக்கிளையும், எண்ணெய் டின்னையும் தூக்கிட்டுப் போய்ட்டா என்ன செய்றது? முதலாளி... நம்பளைக் கொன்னு ரத்தத்தைக் குடிச்சிடுவானே.'

அவனது மனம், முன்னும் பின்னும் ஊசலாடியது. பயத்தில் ரத்தமே உறைந்து, இறுகிப் போய்விடும்போல இருந்தது.

இன்னும் சற்று தூரத்தில்... அதோ... ஆலமரம்... வானுக்கும் பூமிக்குமாய் உயர்ந்து, பேயாய் தலைவிரித்துக் கிடக்கும் இருட்டு மரம்... அருகாமையில்தான் சுடுகாடு... சின்ன வயதில் சொந்த ஊரில் வாளிக் கயிறைக் கூரை முகட்டில் கட்டி, அதில் தொங்கிய ஒரு பிணத்தை- பிதுங்கிய விழிகளும், இளித்த செத்த பற்களும்... விறைத்த உடலுமாகப் பார்த்த கோரமான கிழவனின் சவத்தை, அறிவின் அனுமதியின்றியே மனம் நினைத்தது. உடல் அச்சத்தால் வெடவெடத்தது. தனது முன் ஒவ்வொன்றும் புரண்டு ஓடுவது போலவும்... எதிரில் உள்ள குட்டி மரங்கள் யாவும் வானுக்கும் பூமிக்குமாகக் குதித்தவாறே, தன்னைச் சுற்றி வளைக்க நெருங்குவது போன்ற ஒரு பிரமை. 'ஐயோ... நா உருப்படியா வூடுபோய்ச் சேர மாட்டேனோ...' உதடுகள் வறண்டு காய்ந்தன. மனம் நடுங்கியது.

'எதுக்காக சுடுகாட்டுக்கு மட்டும் விசேஷமாகப் பயப்படணும்? வேறே எத்தனையோ காடுகளைப்போல, சுடுகாடும் மண்ணுதானே! கழுதையோ நாயோ செத்தா பெதைக்கிறோம்... அதுகளுக்கெல்லாம் பயப்படறதுல்லியே! ஏன், இந்த செத்த மனுஷனுக்கு மட்டும் பயப்படணும்? 'ஆவி...' 'பேய்...' அது இதுன்னு கதை பேசுகிற மனிதப் பேய்கள்தான் இதுக்குக் காரணமா? செத்த மனுஷங்களைப் பத்தி, உயிருள்ள மனுசங்க பேசுற கதைகள்தான் செத்தவங்களையும் பேயாக்குது. உயிருள்ளவன் மட்டும் மனுசத்தனத்துடனா இருக்கான்? இவனும் பேய்தானே!'

-இப்படியெல்லாம் பழனிக்கு சிந்தனை ஓடியது. மனதில் நிழலாடும் பீதிக்கு, இது ஒரு வடிகாலாயிருக்கட்டுமே! ஆனால், அதுவும் நிலைக்கவில்லை...

இதோ ஆலமரம்!... அருகாமையில் சுடுகாடு- அன்று எரிந்து கொண்டிருந்த ஒரு சவம்... 'நிராசையுடன் சாகிறவர்கள்தான் பிசாசாக மாறுகிறார்கள்.' எப்போதோ காதில் விழுந்த இந்த 'உண்மை' இப்போது நினைவுக்கு வருகின்றது. 'நான் செத்தாலும் பேயாகத்தான் மாறுவேனோ? சே, இதென்ன நினைப்பு! நா எதுக்கு சாவணும்?'

சைக்கிள் உருண்டது. கைப்பிடி... வியர்வை நசநசப்பில் நழுவப்போவது போன்ற பயம். கால்கள், மிதிக்க மறுக்க முயற்சிப்பது போன்ற ஒரு நினைவு... தனது பிடரிக்குப் பின்புறம் ஏதோ பிசாசின் வெண்ணிறக் கரம்... மரணக் கரம்- தலையைப் பிடிக்க முயற்சிப்பது போன்ற ஒரு கொடிய உணர்வு...

முதுகுத் தண்டில் ஒரு சிலிர்ப்பு மின்னலாக நெளிந்தோடுகிறது. இதயம் குளிர்ந்து விறைத்துப் போகுமோ...!

ஆலமரத்தின் அருகில் நெருங்கும் சமயம்-

தற்செயலாக தலையை உயர்த்தி, ஆலமரத்தின் அடர்ந்த இருளாகக் காட்சியளிக்கும் தலைமுடியைக் கவனித்தான். அங்கே-

இரண்டு கண்கள்- மின்சாரப் பல்புபோல ஒளி மின்னும் கண்கள்- வட்டமான நீலமும் பச்சையுமாக டாலடிக்கும் கண்கள்- ஆலமரத்து இலைகளின் அடர்ந்த இருட்டுக்குள்ளிருந்து, தன்னை நோக்குவது தெரிகிறது.

இதயமே அதிர்கிறது; ஸ்தம்பிப்பில் உறைந்தே போய்விட்டது. "ஹா... ஆ"வென்ற பழனியின் அலறல், இருளின் அமைதியைக் கலைத்துவிட்டு ஓய்ந்தது. அவனுடைய அலறலின் பிரதிபலிப்பாக- ஆலமரத்தின் உச்சியில்- அந்த இரண்டு கண்கள் சுழன்றன; ஏதோ சிறகடிப்பது போன்ற ஒரு சடசடப்பு; ஆல இலைகளின் 'பரபர'வென்ற சப்தம்.

அவ்வளவுதான்! ஸ்தம்பித்துவிட்டது சர்வமும். அவன் கைப்பிடி நழுவியது. கால் எங்கோ வழுக்கி சறுக்குவதுபோல...

சைக்கிளும், டின்னும் பெருத்த ஓசையுடன் கீழே விழ... பழனி... பயபீதியில் கிலிபிடித்து... "ஐயோ நாஞ் செத்தேன்" என்ற அலறலுடன் சாலையில் விழுந்தான்...

அந்த சப்தத்தில் கிலிகொண்டு- ஆலமரத்தின் உச்சியில் ஒளிமிக்க கண்களுடன் மிரட்சியுடன் சடசடத்த ஆந்தை, மிரண்டு போய்ப் பறந்தது. அதை... பழனி பார்க்கவில்லை.

சுடுகாட்டுக்கருகாமையில் செத்துக்கிடந்த பழனியைப்பற்றி சில நாட்கள் கழித்து, சிலபேர் பேசிக்கொள்கின்றனர்...

"அவன் எப்படிச் செத்திருப்பான்? ஒருவேளை... மாரடைப்புன்னு சொல்றாங்களே, அதனாலேயிருக்குமோ! ஒரே மர்மமாயிருக்கே..."

"அதெல்லாமில்லேப்பா... அவன் பேயடிச்சுத்தான் செத்தான்... நா...ங் கண்ணாலே பாத்தேன். அவனை எரிக்கிறப்போ... நா முதுகிலே பாத்தேன். அப்புடியே அஞ்சு விரலும் பதிஞ்சி, ரத்தம் கன்னிப் போயிருந்துச்சு. அதை இந்த ரெண்டு கண்ணாலே பாத்தேனய்யா..."

“பேயடிச்சா...? அடப்போயா... பேயாவது... ஒண்ணாவது? நீ வேற...”

“அட, நீயென்ன சுத்த ‘இது’வாயிருக்கே? நானென்ன பொய்யா சொல்றேன்! பொய் சொன்னா, எனக்கென்ன ஆயிரமா கெடைக்கப்போகுது? நா நெஜத்தைத்தான் சொல்றேன்... கண்ணாலே பாத்தேனப்பா... முதுகிலே, அஞ்சு விரலையும்...”

“என்னமோப்பா... நீ சொல்றே... என்னாலே நம்ப முடியலே...”

–செம்மலர். பிப்ரவரி. 1976



# 7. நீறுபூக்கும் நெருப்புத்துண்டு

அப்போதுதான் சுந்தரம் சாப்பிட உட்கார்ந்தான். மனதுக்குள் ஏனோ ஒருவித எரிச்சல். வாழ்க்கை மொத்தமும் தன்னை நரகத்தில் தள்ளிவிட்டதைப்போல கொடிய சலிப்பு, அந்த எரிச்சலுக்கு எண்ணை வார்த்தது. கொழுந்துவிட்டெரிந்த எரிச்சல்... சோற்றுப் பானையின் மூடியை தள்ளிய கோபத்திலும், தண்ணீர் அள்ளும் போது வெங்கலப் பானையை அலறச்செய்த வேகத்திலும், ஜ்வாலை விட்டது.

'ச்சே... இதுவும் ஒரு பொழைப்பா?' என்று உஷ்ணத்துடன் முணுமுணுத்துக் கொண்டான்.

சோற்றில் தயிரை ஊற்றினான். பிசைந்தான். சோறு கூழானது. பங்கஜத்தை நினைத்துக்கொண்டான். அவள் பக்கத்திலிருந்து, இவன் நோக்கம் புரிந்து பரிமாறி... இவனும் அவளும் பல பல கதைகள் பேசிச் சாப்பிட்டால்... அந்தச் சாப்பாட்டுக்கே தனி ருசி; அலாதியான திருப்தி!

ஆனால், அதற்குத்தான் கொடுத்து வைக்கவில்லையே! மெயின் ரோட்டில் ஒரு பெட்டிக்கடை வியாபாரம். ஜீவித ஆதாரமே அதுதான். சாப்பிட இவன் வீட்டுக்கு வரவேண்டுமென்றால்... அவள் கடையைக் கவனித்துக்கொள்ள வேண்டும். என்ன செய்வது! பிரம்மச்சாரிச் சாப்பாடுதான்...

சுந்தரத்தின் கணக்கில்... இந்தக் கடைவியாபாரம்... உலகத்திலேயே மோசமான தொழில். தனது சுதந்திரத்தையெல்லாம் பிடுங்கி, கடுகு டப்பாவுக்குள் போட்டுக்கொள்கிற தொழில். தனது உன்னதமான மனசாட்சியை, ஓசி பீடி கேட்பவனைப்போல இழிவாகப் பார்க்கும் ஓர் அவலத் தொழில்.

ஆனால், இதைத் தவிர வேறென்ன செய்வது? எப்படியாச்சும் வாழ்ந்தாகணுமே! வாழ்ந்த நாட்கள் போக, மீதமுள்ள நாட்களை நகற்றியாக வேண்டுமே! தன்னை நம்பி கழுத்தையும் வாழ்க்கையையும் நீட்டியுள்ள பங்கஜத்தைக் காப்பாற்றியாகணும்... சந்தோசமாக வாழணும்... சந்ததிகளை உருவாக்கணும்... அதுக்கெல்லாம் வருமானம் வேணும். அதுக்கொரு தொழில் வேணும்...

குழிக்குள் விழுந்துவிட்ட யானைக்குட்டிபோல, கையறு நிலையில் சுந்தரத்தின் மனம் கதறியது.

வீட்டுக்கு வெளியே ஒரு நிழல் தெரிந்தது. சாப்பிட்டுக் கொண்டே தலையைச் சற்று நீட்டி, எட்டிப்பார்த்தான். கடைக்குப் பக்கத்திலுள்ள வீட்டுப் பையன்.

"என்னப்பா... சிங்காரம்...?"

"கடைக்கு சீக்கிரம் வருவீகளாம். அக்கா சொல்லிச்சு."

"என்னவாம் அதுக்குள்ளே? எழவா விழுந்துடுச்சு..." என்று சுந்தரம் சொன்னது, அவனுக்குக் கேட்கவில்லை.

"என்ன மாமா?"

"ஒன்னுமில்லை போ... நா இதோ வர்ரேன்..."

விடுபட்ட குருவியைப்போல, சந்தோஷமாகப் பறந்தான். சலிப்பும் எரிச்சலும் மேலும் சில டிகிரிகள் ஏறிக்கொள்ள, அவசர அவசரமாக அள்ளிப்போட்டுக்கொண்டு கிளம்பினான்.

தன்னுடைய தொழிலை- பிழைப்பை- பங்கஜத்தை- சகலத்தையும் சகட்டுமேனிக்குத் திட்டினான். கெட்ட வார்த்தைகள் சிறகு முளைத்துப் பறந்தன. வாழ்க்கையில் அவன் சலிக்காமல் அடிக்கடி சொல்லிக்கொள்ளும் அந்த வாக்கியத்தையும் உதிர்த்துக் கொண்டான்.

'ச்சே... நாய்கூட பொழைக்குமா... இந்தப் பொழைப்பு, கேவலம்...'

சுந்தரம், அறிவு விழிப்புற்ற அந்தப் பன்னிரண்டு வயதுப் பருவத்திலிருந்து 'ஃபயர் ஒர்க்ஸி'ல் வேர்வை சிந்தி... மேலெல்லாம் கருமருந்துத் துகளைப் பூசியே வளர்ந்தவன். அந்தக் கருமருந்தின் நெடியை சகித்து... ருசித்து, லயித்து... அதையே ரசிக்கிற அளவுக்கு அந்தத் தொழிலுடன் ஒன்றிப்போனவன்.

வாரத்திற்கு மூன்றரை ரூபாய் சம்பளத்தில் ஆரம்பித்து... 'ரசிக்கிற' அளவுக்கு ஒன்றிப்போனபோது, 35 ரூபாய் வாங்கினான். அப்போதுதான் அவன் தொழிற்சங்கத்துடன் பரிச்சயம் கொண்டான்.

அற்புதமான பரிச்சயம்; தன் வாழ்க்கைப் பயணத்தின் திசையையே மாற்றியமைத்துவிட்ட வல்லமைமிக்க பரிச்சயம்; அறியாமைப் பேதைமைக்குள் அடைபட்டுக்கிடந்த அவனது சிந்தனையில், ஒரு பிரளயத்தை சிருஷ்டித்த பரிச்சயம்!

தங்கள் உதிரத்தை உறிஞ்சி உருவாகும் வெடிகள், வேட்டுகள் யாவும் அமெரிக்காவுக்குக்கூடப் பயணமாகிறது என்பதில்

பெருமிதப்பட்டுக்கிடந்த அவன்... அதன் லாபங்கள் மொத்தமும் தேசத்துக்கல்ல, சில நபர்களின் கைக்குள் முடங்கிக் கொள்கின்ற உண்மையைப் புதிதாக உணர்ந்தபோது குமுறினான். தங்களுக்கு நியாயமாகக் கிடைத்திருக்க வேண்டிய சர்வ சாதாரணமான, சட்டரீதியான சலுகைகளும்.. உரிமைகளும்கூட மறுக்கப்பட்டு வந்திருப்பதை அறிந்தபோது... ஆத்திரப்பட்டான்.

சுந்தரத்தின் வாலிப மனதில் தூங்கிக்கிடந்த போர்க்குணம், விசுவரூபமெடுத்தது.

'நாம இப்படியே கண்ணை மூடிக்கிட்டு ஒழைச்சோம்னா... எவனும் நம்ம தொடையிலே கயறு திரிச்சிட்டுப் போயிடுவான்...' என்று சக தொழிலாளர்களிடம் பேச ஆரம்பித்தான். 'சங்கம் சேரணும்' என்றான். சங்கத்தில் இவனுடன், இன்னும் சிலரும் உறுப்பினரானார்கள்.

முதலாளி காதுக்கு செய்தி எட்டியது. அழைத்தார். விசாரித்தார்.

''அப்படியெல்லாம் ஒன்னுமில்லே முதலாளி.. சங்கமாவது ஒன்னாவது... எவனோ உங்ககிட்டே 'வத்தி' வச்சிருக்கான்'' என்ற பின்வாங்கலை எதிர்பார்த்து, விசாரித்த முதலாளிக்கு திக்குமுக்காடி விட்டது.

''உங்க உல்லாசத்துக்கு லயன்ஸ் கிளப். உங்க தொழில் நலனுக்கு ஒரு உற்பத்தியாளர் சங்கம்... எங்களுக்கு மட்டும் சங்கம் இருக்கக்கூடாதோ? இதென்ன ஞாயம்?''

சுந்தரத்தின் கேள்வியில், நியாய ஆவேசம் அனல் வீசியது.

''நாளையிலேயிருந்து வேலைக்கு வரவேணாம். கணக்கை முடிச்சுக்கோ...'' என்பதாக அந்த விசாரிப்பு முடிந்தது.

தொழிற்சங்கத் தலைவர், இவனது புகாரைப் பெற்றுக்கொண்டு முதலாளியை நேரில் சந்தித்தார்.

அவனது சர்வீஸ் காலத்தை நினைவூட்டினார். வேலையிலிருந்து அவனை அகற்றமுடியாத சட்ட பலத்தைச் சுட்டிக்காட்டினார். வேலையை விட்டு நீக்குவதற்கு முன்பு நடந்தேற வேண்டிய... 'சோகாஸ்' நோட்டீஸ் வழங்குவது... விசாரிப்பது... இத்யாதியெல்லாம் நடக்காத சர்வாதிகாரப் போக்கை குறிப்பிட்டுக் காட்டினார். ஊஹூம்! முதலாளி 'தான் பிடித்த முயலுக்கு ஐந்தே கால்தான்' என்று அடம்பிடித்தார்.

கேஸ், லேபர் கோட்டுக்குப் போனது. வாய்தாக்கள் நீண்டன. காலம் இழுத்தடிக்கப்பட்டது. இடைவெளிக் காலத்தில், வேறு எங்காவது வேலை செய்யலாம் என்று அலைந்தான்.

இவன் போகிற இடத்துக்கெல்லாம், இவனுக்கும் முன்பாக முதலாளியின் டெலிபோன் தனது ஒலிபரப்பின் மூலம், உயர்ந்த மதில்சுவர்களை எழுப்பிவிடும். வேறு வழி, சாப்பாட்டுக்கு?

கேள்விக்குறி மேலும் மேலும் வளைந்தது; அவனை நெருக்கியது. தொழிற்சங்கம்தான் அந்தக் கேள்விக்குறியை தற்காலிமாக நிமிர்த்தியது. சங்க வேலைகளைச் செய்தான். சாப்பாட்டுக் கவலை தீர்ந்தது. கேஸ் தொடர்ந்தது. ''மீண்டும் வேலை, இல்லையேல் நஷ்டஈடு.''

கேஸ் நடந்துகொண்டிருக்கும் காலத்திலேயே, ஏழைப் பெண்ணான பங்கஜத்தை மணந்துகொண்டான். கேஸ் முடிந்தது. நஷ்ஈடு கிடைத்தது.

வாழ்விற்கான ஒரு தொழில் வேண்டும். முதலாளியின் இடையூறுகளை மீறிய தொழிலாக இருக்கவேண்டும். என்ன தொழில்?

பாதைகள் யாவும் அடைபட்டுபோன நிலையில், இந்தப் பெட்டிக்கடை பலசரக்கு வியாபாரத்தில் நுழைந்தான்; நுழைக்கப்பட்டான்.

...சந்து பொந்துகளையும் கடந்து, சாக்கடைகளைத் தாவி, எதிர்ப்பட்ட மனிதர்களை விலக்கி கடையை நெருங்கிய போது சிந்தனை அறுபட்டது.

கடையின் முன் இரண்டு பெண்கள் சரக்கு வாங்கிக் கொண்டிருந்தனர். அரிசி, பருப்பு... சீரகம்... மல்லி... வற்றல்...

இடையில் ஒருவன் புகுந்து... 'ரெண்டு கத்திரி' என்றான். இடித்துக்கொண்டு நுழையும் அவனை எரிச்சலுடன் பார்த்தவாறு பெண்கள் விலகுவதைக் கவனித்து, சுந்தரம் ஆத்திரப்பட்டான்.

''யாரைய்யா இது... கத்தரிக்கென்ன கொள்ளையா போகுது. மெல்ல விலகி நின்னு வாங்கேன்.''

''அவசரம் அண்ணாச்சி...''

''நல்ல அவசரம்...'' கோபத்துடன் கூறினான். அவன் பாவம், வெலவெலத்துப் போய் நகன்றான்.

பெண்கள் சரக்கு வாங்கிக்கொண்டு போனபின்... கடைக்குள்ளிருந்த பங்கஜத்திடம் கேட்டான்:

''என்ன கூப்டியாமே?''

''ம்ம்...'' ரெண்டு பிள்ளைகளை சுமந்து, பெற்று, பறிகொடுத்துவிட்டு, மூன்றாவதை சுமந்து சிரமப்பட்டுக் கொண்டிருக்கிற பங்கஜம், உபாதையுடன் உறுமினாள்.

''என்னவாம்?''

''முருகேசன் அண்ணாச்சி வந்திருந்தார்...''

ஐஸ் கட்டி விழுந்ததுபோல, சுந்தரத்தின் நெஞ்சில் ஒரு ஜில்லிடல் பரவியது. ''ம்ம்'' என்று திணறினான்.

''உங்களுக்காகக் காத்திருந்தார். இப்பத்தான் போறார்.''

''என்ன சொன்னான்?''

''என்னத்தைச் சொல்வாரு? வழக்கம்போலத்தான் 'காச்சு மூச்சு'ன்னு கத்தினார். ஏழாந்தேதிக்குள்ளே பணம் வரல்லேன்னா... சரிப்பட்டு வராதுன்னு மிரட்டிட்டுப் போறார்.''

காலண்டரைப் பார்த்தான். தேதி இரண்டு. இன்னும் ஐந்து நாட்கள். அதற்குள் அறுநூறு ரூபாயை எப்படிப் புரட்டுவது? ஜில்லிட்ட ஐஸ் கட்டி, இப்போது நெருப்பாக மாறியது. முருகேசன் காலண்டர்களுக்கு ஆர்டர் பிடிக்கப் போவதாக பெங்களூர், பூனா என்று வருஷத்தில் ஆறுமாதம் வெளி மாகாணத்தில் அலைவார். வேறு வேறு துணைத் தொழில் செய்வதுண்டு. கொழுத்த வருமானம். வட்டிக்குக் கொடுத்து வாங்குவார். வட்டியும், ராட்சஸ வட்டி. நூற்றுக்கு ஐந்து ரூபாய் வட்டி.

பங்கஜத்தின் முதல் பிரசவம் ரொம்பச் சிரமப்படுத்திவிட்டது. பெட்டிக்கடை, சரக்கு இல்லாமல் காலி பெட்டியாக- தாலியற்ற வெறுமையாக- தோற்றம் அளித்தது.

கடையைத் தொடர்ந்து நடத்துவதெப்படி? இந்தக் கேள்வி அவனையும், எதிர்காலத்தையும் அச்சுறுத்திக்கொண்டிருந்த வேளையில், முருகேசன் கை கொடுத்தார். ஆயிரம் ரூபாய் கடன் தந்தார்.

கடை புதுப்பிக்கப்பட்டது. பிறந்த பிள்ளை இறந்தது, இரண்டாவது பிள்ளையும் பிறந்து மடிந்தது. செலவுக்கு வழி வகுத்தது. அத்தனை செலவுகளுக்கு மத்தியிலும், முருகேசனுக்குக் கொஞ்சம் கொஞ்சமாகக் கடனைத் திருப்பினான். 1200 ரூபாய் அடைத்தாகிவிட்டது, அசல் ஆயிரம்தான். ஆனால், இன்னும்

அறுநூறு ரூபாய் பாக்கி நிற்கிறது. அதற்குத்தான் முருகேசனின் 'காச்சு மூச்சு' மிரட்டல்!

சுந்தரத்தின் மனதில் தர்மாவேசம், கொந்தளிப்பலையாக எழுந்தது.

"வட்டி, வட்டின்னு நம்ம குடும்பத்தையே நாசப்படுத்திப் போடுவான் போலிருக்கே. இந்த மாதிரியான மிருகங்களையெல்லாம் நடுத்தெருவிலே கட்டி வைச்சு...?"

தான் அதீதமாக சுரண்டப்படுவதை சகித்துக்கொள்ள முடியாமல், அவன் வார்த்தையில் அனல் பறந்தது. பங்கஜம் எதுவும் சொல்ல மனமில்லாமல், கர்ப்ப உபாதையில் 'உஸ்ஸ்…" என்று பெருமூச்சுவிட்டாள்.

"வரட்டும்… ஏழாந்தேதி… அவனை மூஞ்சியில் அடிச்சாப்பலே பேசி விரட்டுகிறேன்…" என்றான் சுந்தரம். ஒரு கலகத்துக்குத் தயாராகி விட்டான்.

அவனது ஆத்திரம்… அளவுக்கு மீறியதாகப் பட்டது பங்கஜத்துக்கு. எடுத்துச் சொல்லவும் சிரத்தையின்றி, சோர்வாக இருந்தாள்.

சண்டைக்குத் தயாராகி நின்ற புருஷனைப் பார்த்தாள். என்னவோ சொல்ல நினைத்தாள். சொல்லுக்குப் பலனிருக்குமோ. இராதோ என்ற சஞ்சலத்தில் மௌனமாக இருந்தாள்.

ஏழாந்தேதி, கடையில் இருந்தான் சுந்தரம். சரக்குகள் வாங்க வேண்டியதற்காக லிஸ்ட் தயாரித்தான். கல்லாப்பெட்டியில் கிடக்கும் பணத்தை எண்ணிப்பார்த்தான். லிஸ்ட்டுக்கும் பணத்துக்கும் தகராறாக இருந்தது.

பணத்துக்கு என்ன செய்வதென்று யோசித்துக் கொண்டிருந்தான். மனதுக்குள் உளைச்சல். பங்கஜம் வந்தாள்.

"என்ன, முருகேசன் அண்ணாச்சி வந்தாரா?"

இந்தக் கேள்வி… மறந்து போயிருந்த ஒரு பிரச்னையை நினைவுபடுத்தியது. மனதுக்குள் ஒரு கலவரம். கோபமும் அனல் வீசியது. வந்தால் சண்டை போட்டு விரட்டி விட வேண்டியதுதான். வருவது வரட்டும். ராஸ்கல்… அசலுக்கு மேலே வசூல் பண்ணியும், இன்னும் அறுநூறு ரூபாய் வசூல் பண்ண வருகிறானாம்!

"என்ன உம்மென்று இருக்கீக…? வந்தாரான்னு கேட்டேனே."

''இன்னும் வரல்லே...'' உணர்ச்சியற்றுக் கூறினாலும், அடியில் ஒரு குமுறல் பதுங்கியிருந்தது.

எதையோ யூகித்துக் கொண்டவளைப்போலப் பயந்தாள்.

''என்ன சொல்லப் போறீக...?''

''வரட்டும்... 'இன்னும் வட்டின்னு கேட்டு, இந்தப் பக்கம் வந்தால், உதைச்சிடுவேன்...'னு சொல்லப்போறேன்...''

''சொல்லுங்க... சண்டை போடுங்க... ஜெயிலுக்குப் போங்க... கடையை சாத்திட்டு வீட்டிலே பட்டினியா கெடக்கேன்- வாயும் வயிறுமா நாதியத்துப்போய்க் கிடக்கிறேன். ஊரெல்லாம் நம்மைப் பார்த்துக் கைகொட்டிச் சிரிக்கட்டும்...''

சுயவதைப்புடன் பேசுவதுபோலப் பேசினாலும், அது ஒரு கடுமையான விமர்சனமாக- கண்டிப்பானதாக இருந்தது. அதன் அடி நாதமாக ஒலித்த சோகமும், துக்கமும், சுந்தரத்தின் நெஞ்சில் கூர்மையான ஊசிகளைப் பாய்ச்சியது. மனதில் கோபம் வந்து... ஒரு நெகிழ்வு.

''நீ என்னத்துக்கு நாதியத்துப்போகணும்?'' உயிரற்ற கேள்வி, ரொம்ப பலஹீனப்பட்டு வந்தது.

''அதுதானே ஏந் தலையெழுத்து. உங்களுக்கு ஞாயம்தான் முக்கியம். பொண்டாட்டி முக்கியமில்லே. வீரம் காட்டத்தான் தெரியும். குடும்பம் தெரியாது. காலமெல்லாம் கடை நடத்தனும்ங்கிற அக்கறையில்லை. கவலையில்லை. கடை நடத்தனும்னா, மத்தவங்க தயவு வேணும். உதவுறவன் லாபமில்லாம உதவமாட்டான். உதவுறவன்கூட எல்லாம் சண்டை போட்டு ஞாயம் பேசினா... தயவு எப்படிக் கிடைக்கும்? கடை எப்படி நடத்துறது?''

''நிறுத்துடீ...'' உஷ்ணமான குரலின் சீற்றம். ஒரு சரணாகதிக்குத் தன்னை நிர்ப்பந்திக்கும் பெண். தனது ஆதரவுக்காக ஏங்கிக் கிடப்பவள். தனது முரட்டுத்தனத்தால் அந்த ஆதரவு எந்த நேரமும் நழுவிப் போய்விடுமோ எனப் பயந்து தவிக்கும் மனைவி. அவளைக் கோபிப்பதில் அர்த்தமில்லை. நான் யாரைக் கோபிப்பது?

இந்தத் திகைப்பே....... அவனுக்கு மகா எரிச்சலை ஏற்படுத்தியது. பங்கஜம் போய்விட்டாள். போகும்போது ஒன்று சொல்லிவிட்டுப் போனாள்.

''ஒத்தக் கட்டையாயிருந்தப்போ... வச்சிருந்த நெனைப்பு, வீரம் எல்லாம், குடும்பமாகிவிட்டப்புறமும் வைச்சிருந்தா... காலம் கழிக்க

முடியாது. அவ்வளவுதா நான் சொல்வேன். அதுக்கு மேலே உங்க இஷ்டம்...''

சுந்தரத்தின் சிந்தனை தள்ளாடியது. துன்பங்களில் அடிபட்ட காயவடுக்களுடன் அவள் சொல்லிச் சென்ற அனுபவ வார்த்தைகளும், சோகச்சித்திரமாகத் தோற்றமளிக்கும் அவள் முகமும் மனதை அலைக்கழித்தன.

பங்கஜம் பேச்சு, தனது தர்மாவேசத்தையே குற்றப்படுத்தி விட்ட விந்தையை, வியப்புடன் நினைத்துக்கொண்டான்.

உழைப்பை மட்டுமே நம்பி உயிர் வாழும் ஒரு தொழிலாளியைப்போல, அநீதியை எதிர்த்துப் போரிடுவதில் வளையாத வைராக்யத்தைக் காட்டுவது, பலதரப்பட்ட நபர்களை அனுசரித்து வாழவேண்டிய ஒரு வியாபாரியால் நிச்சயமாக முடியாது போலும்!

முருகேசன் வருவான். வரட்டும்... வந்தால் என்ன செய்வது... என்ன சொல்வது...?

இந்தக் கேள்வி விஸ்வரூபமெடுத்து அவனை மறித்தது. நெஞ்சு கனத்தது. கல் விழுந்த கூட்டின் தேனீக்களைப் போல... எண்ணங்கள் ஆர்ப்பரித்துச் சுழன்றன. ஒரு முடிவுக்கு வந்தாக வேண்டும்.

பங்கஜம் வார்த்தைகள்... துயர ராகமிட்டுச் செவியில் ரீங்கரித்தன. சோகத் தீயில் கறுத்து, அறுத்துப்போட்ட பூங்கொடியாக வாடித் தோன்றிய முகம் நினைவுக்கு வந்தது. எதிர்கால வாழ்க்கையின் இருட்டு, நெஞ்சைக் கவ்வியது.

''முருகேசன் வரட்டும்... வந்தா... அனுசரித்துப் பேசி, தவணை கேட்க வேண்டியதுதான்...''

இந்த நினைவே அவனுக்கு அவமானமாக- அவலமான வீழ்ச்சிக்கு உள்ளாகிவிட்டது போலிருந்தது. யார் மீதோ ஆத்திரம் ஆத்திரமாக வந்தது. இப்படியும் வாழணுமா... அநீதிக்கும், அக்கிரமக்காரர்களுக்கும் பணிந்து வாழ்றதும் வாழ்க்கையா...?

சே... இதுவும் ஒரு பொழைப்பா? ஆனா... வாழ்ந்தாகணுமே!

தனது சுதந்திரத்தையெல்லாம் கடுகு டப்பாவுக்குள் போட்டுக் கொள்ளும் தொழில். தனது உன்னதமான மனசாட்சியை, ஓசிப் பீடி கேட்பவனைப்போல இழிவாகக் கருதும் தொழில்.

ஆனால், வேறென்ன செய்யறது? தன்னை நம்பி கழுத்தையும், வாழ்க்கையையும் ஒப்படைத்துள்ள பங்கஜத்தைப் பாதுகாத்தாகணுமே! அதுக்கு ஏதாச்சும் ஒரு தொழில் வேணுமே!

குழிக்குள் விழுந்துவிட்ட யானைக்குட்டியின் கையறு நிலையில், சுந்தரத்தின் மனம் கதறியது.

முருகேசனின் வருகையை மிரட்சியுடன் எதிர்பார்க்கும் கணத்தில்- தான் வீழ்த்தப்பட்டுவிட்டதை நினைத்தபோது- அவனுள் ஏதோ ஒன்று அக்கினிப் பந்தாகத் திரண்டு எழுந்தது.

-செம்மலர். 1979. அக்டோபர்.



## 8. ஒரு பூவின் ஜாதகம்

ஊரில் அரவமடங்கிவிட்டது. தேய்பிறைக் காலமாதலால், பூமியை இருட்டு கறுப்பாக அப்பியிருந்தது. தெரு விளக்குகள், மரணப்படுக்கை நோயாளியைப்போல 'எரியட்டா, அணையட்டா' என்று பயமுறுத்திக்கொண்டிருந்தன.

நேரம் பத்து மணி இருக்கும். இல்லாட்டி கொஞ்சம் குறைவாயிருக்கும். பத்து மணியாகிவிட்டால்தான் சங்கு ஊதியிருப்பானே! இன்னும் ஊதவில்லை.

'விர்ர் விர்ர்'ரென்ற ஓசைப் பெருக்குடன், காற்று வீசுகிறது. இரவின் அமைதி லேசு லேசாக பங்கப்படுகின்றது.

எங்கோ ஒரு விவசாயி, கூளத்தின் மண்ணை உதறித் தட்டுகிற சப்தம்; அசைபோடும்போதே திடுமென்று தலையைக் குலுக்குவதால் அலையாக எழுகின்ற மாட்டு மணியோசை.

தன்னைச் சுற்றிப் பரவியிருக்கும் அழுக்கான சந்தனநிற ஒளியை, அலுப்புடன் பார்த்த அலமேலுப் பாட்டி, அப்படியே, தனது நார்க்கட்டிலுக்குப் கீழே துணியை விரித்துப் படுத்துக்கிடக்கும் பேத்தியைபார்க்கிறாள். அவள் மனத்தில் ஒரு கனம் அழுத்துகிறது.

பதினைந்து முடிந்து, வயது பதினாறில் ஏறிக்கொண்டிருக்கிறது. இடது கையை மடித்து தலையணையாக்கி, முகத்தை மலத்தி ஒருக்கழித்துப் படுத்துக்கிடக்கிறாள். தூங்குகின்ற அவள் முகம். உணர்ச்சிப் பெருக்குடன் மலர்ந்து புன்னகைக்கிறது. ஏதோ ஒரு கனவில் அமிழ்ந்து கிடக்கிறாள்போலும்!

சமீபத்தில் காலியானதால், வெறுமையான அவள் நாசியில் துக்கத்துடன் பார்வைவை நிறுத்தினாள். எல்லாமே ஓய்ந்துபோனது போன்ற மிரட்சி!

'மூக்குத்தியையும் வித்து மருந்தா தின்னாச்சு...' என்று விசாரத்துடன் நினைத்துக்கொண்டபோது, ஒருவித விரக்தி மனதில் விரிந்தது.

அலமேலுப் பாட்டிக்கு நெஞ்சுக்குள் ஒருவித குறு குறுப்பு; வண்டு ஊர்ந்து செல்வதுபோன்ற தொண்டையில் கூச்சம்; அவ்வளவுதான்! கொஞ்ச நேரமாக ஓய்ந்து கிடந்த இருமல், விசுவரூபமாகி, அவளை உலுக்கியது. அடிவயிற்றுக் குடலே மேலே

தொண்டைக்கு ஏறிவிடுமோ என்று பயப்படச் செய்யும் அளவுக்கு, இருமலின் அசுர உலுக்கல். கட்டில் சோகத்துடன் கிரீச்சிட்டுக்கொள்கிறது. அலமேலுப் பாட்டி, சாவே நெருங்கிவிட்டது போன்ற அபூர்வ நிம்மதியுடன் இருமினாள்.

'லொக்.....லொக்......லொக்க...'

இருமல் தொடர்கதையா? அப்படித்தான் தெரிந்தது. இருமலுடன் இளைப்பும் சேர்ந்துகொண்டது. பளிச்சென்று தெரிந்த நெஞ்செலும்பு வரிசை, 'கேது....கேது'வென்ற இளைப்பில், மேலும் கீழுமாய் ஏறி இறங்கியது.

கனவில் அமிழ்ந்த அந்த 'பூ' சலனமுற்றுச் சிலிர்த்தது. இருமலின் பூகம்பத்தில் அந்தப் பேத்தியும் விழிப்புற்று, திடுக்கிட்டவளாக எழுந்தாள்.

ஜன்னி கண்டு வெட்டி வெட்டி இழுப்பதுபோல உடம்பெல்லாம் ஒடுங்கி குலுங்கி இருமுகின்ற பரிதாபக் கோலம், அவள் மனதைப் பிசைந்தது. மனதில் கிலி!

முள்ளும் முடலுமாய் மூடிய புதர்களுக்கிடையில் ஊடுருவிச் செல்லும் தெளிவற்ற ஒற்றையடிப் பாதையில், குருடாகச் செல்லும் அவளுக்கு ஒரே வழித்துணை, இந்தக் கிழடுதானே! இதுவும் போய்விட்டால்...?

தன் எதிர்காலத்தில் எஞ்சி நிற்கும் இந்த அற்பமான, அழுக்கான ஒளியும் அணைந்து, இருள் அப்பிக்கொள்ளுமே!

அலையகுலைய எழுந்த பாப்பாத்தி, அலமேலுப் பாட்டியின் தொய்ந்த தொண்டையையும், முள்ளாக நெருடும் நெஞ்செலும்பையும் இதமாக நீவிவிட்டாள். தலைமாட்டில் காய்ச்சி வைத்திருந்த பனங்கற்கண்டு காபியை, வாயில் ஊற்றினாள்.

"ஆச்சி... ஆச்சி... ரொம்ப நெஞ்சை வலிக்குதா?" பாப்பாத்தியின் குரல், பயத்தால் குளிர்ந்து நடுங்கியது. அலமேலுப் பாட்டியின் நெற்றிக்கடியில், ஆழத்தில் புதைந்துகிடந்த மங்கலான விழிகள்... அலங்கமலங்க அலைபாய்ந்தன. அவள் முகத்தில் நிலைத்து நின்றது; ஆறுதலுடன் நோக்கியது. "ஒன்னுமில்லேம்மா... தைர்யமாயிரு" என்று தெம்பு சொன்னது. உலர்ந்து போன உதடுகள் மெல்ல மெல்லச் சலனமுற்றன.

"பாப்பட்ற்றி..." உச்சரிப்பு குளறியது.

"என்ன ஆச்சி... இளைப்பு ரொம்ப இருக்குதா? கொஞ்சம் தண்ணி வைக்கட்டா?"

மெதுவாகத் தலையசைத்தாள்.

''வேண்டாம்மா... நீ தூங்கும்மா...''

'இன்னும் ரெண்டு மாசத்துலே நா ஒரேயடியா தூங்கப் போறேன்' என்று நினைவுபடுத்திக்கொண்டபோது, அந்த ஒய்ந்த இதயம் திகிலுடன் ஸ்தம்பித்தது.

'அதுக்கப்புறம் பாப்பாத்தியை யார் பாத்துக்குவா?'

'இப்பத்தான் பூத்திருக்கிற இந்தப் பூ, செடியிலேயே நிலைச்சாத்தானே, காய்க்கும்; கனியும்; விதைகளைச் சிந்தும்; வாரீசு வரும்!... இப்ப செடியே ஒடிஞ்சு சாயப்போவுதே! அப்புறம், இந்தப் பூவின் கதி?'

பாட்டியின் நெஞ்சமும் குளிர்ந்து நடுங்கியது. எதிர்காலம் இருட்டாக மிரட்டியது. சமீபமாக நெருங்கிவரும் மரணக் காற்று... அலமேலு பாட்டியை அச்சுறுத்தியது.

வரப்போகும் மரணத்தை முன்னுணர்த்திய, ஜோஸ்யர் சுந்தரமாமணியின் சிவந்த பப்பாளிப் பழ முகம், நன்றாக நினைவுக்குள் விரிந்தது.

மேலே அகன்று, தாடை ஒடுங்கி, கன்னம் உள்ளே பதுங்கியிருந்த அந்த முகத்தில், கண்கள் மட்டும் கருப்பு வைரம்போலப் பிரகாசிக்கும். வெற்றிலைக் காவி ஏறிய பற்களில், முன்னிரண்டு பற்கள் மட்டும், உதட்டுக்கும் மேலே கொம்புபோல நீட்டிக் கொண்டிருக்கும்.

இருமி ஓய்ந்தவளாக தொய்ந்துபோன அலமேலுப் பாட்டி, சோர்வுடன் இமைகளை மூடினாள்.

...கொம்புகளைப் போன்ற பற்களைக் கொண்ட பப்பாளிப்பழ முகம், குரூரமாக இளித்துக்கொண்டு வருகின்றது. நெடிய அந்த உருவத்தின் நீண்ட கரங்களின் முகப்பில், பத்து அரக்க நகங்கள்! அந்தப் பத்துக் குறுவாள்களும், வெறி கொண்ட கண்களுமாகத் தன் கழுத்தை நெறிக்க வரும் குரூரம்!

நாலைந்து குரங்குகள், குரூரமான குதூகலத்துடன் ஒரு 'பூவை' இதழ் இதழாகப் பிய்த்து, அதையும் கசக்கி...

திடுக்கிட்டு விழித்த பாட்டி, அவசர அவசரமாகக் கழுத்தைத் திருப்பினாள். பாப்பாத்தி படுத்திருந்த துணிவிரிப்பு, அனாதையாகக் கிடந்தது. பாட்டியின் நெஞ்சில் ஒரு பாறாங்கல் திடுமென்று ஏறிக் கொண்டது. 'எங்கே போய்ட்டா...?'

நெஞ்சுக்குள் ஒரு சிறு குறுகுறுப்பாகத் தோன்றி, பெருந்தவிப்பாக விசுவருபமெடுத்து, ஒரு சூறாவளியைப்போல பாட்டியை உலுக்கியது, இருமல்.

அலமேலுப் பாட்டி இருமல் அடங்கி, சோர்வுடன் கண்களை மூடவும், வெளியே வந்தாள் பாப்பாத்தி. சுற்றும் முற்றும் பார்த்தாள்... அது ஒருவகையான பயந்த கள்ளப்பார்வை.

ஏதோ அரவம் கேட்டதால் விழிப்புற்ற மயில்கள், ஒன்றன்பின் ஒன்றாகக் கூவிய அலறல், ஒரு பர்லாங் தூரத்துக்கு அப்பால்தான் ஒலித்ததென்றாலும், பாப்பாத்தியின் பயந்த மனதைத் திடுக்கிட வைத்தது.

''கட்டாயம் வந்துரு... ஆமா... வந்துடணும்... நா காத்துக்கிட்டேயிருப்பேன்'' என்று கண்களும், உதடும் கெஞ்சி ஏங்கிய ராஜையாவின் வாலிபத் துடிப்புமிக்க பார்வை... அவள் நெஞ்சுக்குள் சிக்கிக்கொண்டது. அவள் மனதுக்குள் இன்ப இசை, அலையாகப் பொங்கியெழுகின்றது.

அந்த நாள்...! பம்ப்ஷெட் கிணற்றில் குளித்துவிட்டு, உடை மாற்ற அந்த பம்ப்ஷெட் ரூமுக்குள் நுழைந்தபோது... அங்கே உட்கார்ந்திருந்த ராஜையாவைக் கண்டு திகைத்து, ஒரேயடியாக குழப்பமுற்றவளாகத் தவித்து...

அப்படித்தான் தொடர்பு முளைவிட்டது. ஒரே காட்டில் தொடர்ந்த- இணைந்த - உழைப்பு, அவர்கள் உறவுப் பயிருக்கு நீராகியது.

திடமான உள்ளத்துடனும், உடலுடனும் உழைத்துக் கொண்டிருந்த பாட்டிக்கு அவள் பயந்தாலும், அந்த உறவு வளர்ந்தது. தத்தமது சோகங்களை- தாபங்களைப் பரிமாறிக் கொண்டனர். சலித்துக்கொண்டனர்; துயருற்றுக்கொண்டனர்; துயர்களைப் பங்கிடத் துணை இருக்கிற தெம்பில் வாழ்ந்தனர்... அவர்களிடையே கனவு மலர்கள், நட்சத்திரத் தோட்டங்களாக மின்னிச் சிரித்தன. அவர்கள் உலகமே வேறு! அதில் பிரஜைகளும், பிரபுக்களும் அவர்கள்தான்!

பாட்டி ஒரேயடியாக நாராகக் கிழிந்தபிறகு... தனது கவலைகளை- கண்ணீரைத் துடைக்க, ராஜையாவின் ஆதரவு அத்யாவசியமாகப்பட்டதாலோ என்னவோ, அவர்களது சந்திப்பு மேலும் அடர்ந்து தொடர்ந்தது.

அந்தத் தனிமை... இளமைக் கொந்தளிப்பு... ஆதரவுக் கழியைத் தேடியலையும் கொடிபோன்ற பாப்பாத்தியின்

அனாதைமை... எல்லாமாகச் சேர்ந்து அவர்கள் மனதை மட்டுமில்லை, உடலையும் இணைத்தது!... என்னதானிருந்தாலும், பாப்பாத்தியின் உணர்ச்சிக் கொந்தளிப்புக்கு வயசு காரணமாக இருந்தாலும், சமூக ஞானம் பற்றிய தெளிவையோ-உஷார்தனத்தையோ கற்றுத் தரவில்லையே!...

அலமேலுப் பாட்டியின் மனதில், பயமும் சந்தேகமும் பரவியது. 'இந்த அகால வேளையிலே வயசுக்கு வந்த புள்ளை எங்கே போய்ட்டாள்?'

'அப்படியிருக்குமோ.... நா நொண்டி மாடாக விழுந்தவுடனே, கன்னுக்குட்டி துள்ளி விளையாடிக் குதிக்க ஆரம்பிச்சிடுச்சோ... கன்னுக்குட்டி என்னத்துக்காகும்? இளங்கன்னு, பயமறியாதே! ஒன்னுருக்க ஒன்றைச் செய்து... ஏதாச்சும் பள்ளத்திலே மாட்டிக்கிடுமோ?'

நினைவுகள், குருட்டு ஈயைப்போல நோக்கமின்றிப் பறந்து திரிந்தது. மனதில் ஒரு வருத்தமும், அச்சமும் இருளாகக் கவிந்தது. பின்னும் மனதைத் தேற்றிக்கொண்டாள்.

'நம்ம 'கொடிவழி'யிலே வந்த புள்ளைக்கு அப்படியெல்லாம் புத்தி போகாது. கவரிமான் பரம்பரையாச்சே' என்று பெருமிதத்துடன் நினைத்துக்கொண்டாள். சில சமயம் இந்த மாதிரி பொய்யான பெருமிதங்களே, அலைபாய்ந்து திரியும் மனதுக்குத் தைரியமாக விளங்குகிறது.

'நம்ம பாப்பாத்தியை என்ன செய்யப் போறோம்? அவளை தவிக்க விட்டுட்டு, நா இன்னும் ரெண்டு மாசத்திலே கண்ணை மூடப் போறேனே... அதுக்கப்புறம் அவளை யார் காப்பத்துறது? யார் ஆதரிப்பாக?.... ம்ம்... அதது தலைவிதிப்படி நடக்கும்... நமக்கென்ன, மரம் வச்சவன் தண்ணி ஊத்துவான்...'

உள்ளத்து நினைவை உணர்ந்து- அதிலிருந்த விரக்திமிக்க தன்னம்பிக்கையின்மையை உணர்ந்து, அவளே த்டுக்கிட்டுப் போனாள்.

ஏனெனில், இதே மாதிரியான உணர்வு, சில வருஷங்களுக்கு முன்பு அவளை ஆக்ரமித்திருந்தது.

'நம்மாலே என்னத்தை இந்தப் புள்ளையை வளர்த்து, ஆளாக்கி, கரையேத்த முடியப் போகுது! ஊஹூம்! பனங்காயை குருவியாலே சுமக்க முடியுமா, என்ன! என்ன செய்றது? நம்ம என்ன செய்ய முடியும்?... அதது தலைவிதிப்படிதானே எல்லாம் நடக்கும்!

நம்ம கையிலே என்ன இருக்கு? உசுர் இருக்கிற வரைக்கும் உழைச்சுப் பாப்போம்... அதுக்கப்புறம் அதது விதிப்படி நடக்கட்டும்...'

இந்த மாதிரியான தன்னம்பிக்கையற்ற சிந்தனையுடன், அச்சமும் சோகமுமாய் இருந்த அலமேலுப் பாட்டிதான்... வாழ்க்கையை அரக்கனாக எண்ணிப் பயந்து கிடந்தவள்தான்!

பெருமாளம்மாளின் சாதனைதான் அலமேலுவை வேறோர் வார்ப்பில் வார்த்தது. ஆம்... அது அப்படித்தான்!

பெருமாளம்மாள், அலமேலுப் பாட்டியைவிட இருபது வயதுக்கு முந்தியவள். ரொம்பத் தளர்ந்து போனவள்- வெடித்துப் போன வெள்ளரிப் பழம்போல.

இட்லி அவித்து விற்றே, கூட்டுக்கு கூளம் சேர்க்கும் குருவியை மாதிரி சிறுகச் சிறுக சேகரித்து, பேத்தியோட மகன் கல்யாணத்தையே நடத்தி முடித்தாள். அந்தக் கல்யாணத்தன்று- அந்தக் கிராமமே அமளிதுமளிப்பட்டது.

பெருமாளம்மாளின் விடாப்பிடியான உறுதியையும்- அதனால் விளைந்த சாதனையையும்- ஆணும், பெண்ணும் சொல்லிச் சொல்லி வியந்தனர்.

அது என்ன, லேசுப்பட்ட சாதனையா? நடத்தி வைக்கிறவளுக்கும்- தாலியை ஏந்தியவனுக்குமிடையே உள்ள இடைவெளி கொஞ்சமா? மூன்று தலைமுறைகளல்லவா, இடைவெளித் தூரம்!

அந்தப் படுகிழடு- கனிந்து முற்றிக் காய்ந்துவிட்ட நெற்று. அதன் சாதனையின் மகத்துவம் எல்லோரையும் பிரமிக்கவைத்தது, புகழவைத்தது. ஆனால், அலமேலுப் பாட்டியிடம் வேறுவிதமான பிரதிபலிப்புகளை சிருஷ்டித்தது.

அப்போதுதான், தன் மகளைப் பறிகொடுத்துவிட்டு... அவள் விட்டுச்சென்ற ஒரே சொத்தான பாப்பாத்தியை வளர்த்துக் கொண்டிருந்தாள். தன்னம்பிக்கையற்ற வெறுமையுடன், பய பீதியை நெஞ்சில் தாங்கி உழன்று கொண்டிருந்தாள்.

தகப்பனுக்காக உழைச்சோம்... புருஷனுக்காக உடம்பைத் தேய்ச்சோம்... புள்ளைகளுக்காக உருக்கிக்கிட்டோம். அதெல்லாம் போதாதுன்னு, பேத்திக்காகவும் பாடுபட வேண்டியதிருக்கே... இதை நம்மாலே செய்ய முடியுமா? கடைசிவரை காப்பாத்தி கரையேத்த முடியுமா? அதுவரைக்கும் ஆயுசு சக்தியும் இருக்குமா? என்ற மாதிரியான சம்சயங்களும், சஞ்சலங்களும் மனதை அலைக்கழித்து,

அவளது உறுதியையும், போர்க்குணத்தையும் மழுங்கடித்துக் கொண்டிருந்தன......

இந்தச் சமயத்தில்தான், பெருமாளம்மாளின் வியத்தகு சாதனை!

தம்மைவிட இருபது வயது மூத்த அவளே அப்படிச் செய்யும்போது, இளையவளான தன்னால், தன் பேத்தியைக் கரையேத்த முடியாதா? அதுவரை உழைக்க முடியாதா? முடியும்... என்னாலும் முடியும்! நானும் சாதித்த பெருமையை- பேத்தியின் மண வாழ்வின் மகிழ்வை- சந்திக்கத்தான் போகிறேன். என்னையும் இந்த ஊர், மூக்கில் விரல் வைத்து அதிசயமாகப் பார்க்கத்தான் போகிறது... இதுமட்டும் சத்தியம்...

அலமேலுவின் மனதில் நினைவுகள் இறுகியது; அடர்ந்தது; வைரம் பாய்ந்தது; வாழ்க்கையை அரக்கனாக நினைத்துப் பயந்து கிடந்த அவள், அப்புறம் வாழ்க்கையோடு மோத ஆரம்பித்தாள். வெற்றியின் நம்பிக்கையுடன் சமர்புரிந்தாள்.

இயல்பான போர்க்குணம்... தனது சுபாவமான அக்கினி உஷ்ணத்துடன், ஜ்வாலைவிட்டு எரிந்தது.

அவ்வளவுதான்...! அலமேலு ஒரு வீராங்கனையைப்போலக் சுழன்றாள். மாடாக - ராட்சஸ எந்திரமாக- உழைத்தாள். சீட்டுக் கட்டி பணத்தைச் சேமித்தாள்; 'சீட்டு' பிடித்துச் சம்பாதித்தாள். ஆட்டுக் குட்டி வளர்த்தாள்; எருமை மாடு வளர்த்து... பாலை விற்று, காசைச் சேர்த்தாள்.

குடித்தும் குடியாமல் - அல்லும் பகலும் பாராமல்- அலுப்பையறியாமல் - வெறிகொண்டவளைப்போல... அப்படியோர் அசுர உழைப்பு! ஊரையே அசந்து போகவைத்த உழைப்பு; பிரமிப்பில் மூழ்கடித்த அதீத முயற்சி!

அப்படி வயது மீறிய வேகத்தில், தேனீயைப்போலப் பறந்து திரிந்த அவள், இப்போது சோகமாய்- வியப்புக்குரிய சோர்வுடன் நினைத்துக்கொண்டாள். 'நார் நாராய் கிழிஞ்சு போய்ட்டேனே... நா மட்டுமா? என் நம்பிக்கைகளும்தான்.'

'இந்தக் கிழிஞ்சு கிடக்கிற நார், இன்னும் ரெண்டு மாசத்திலே ஒரேயடியாகக் காய்ஞ்சு உலர்ந்து போகும்... ஜோஸ்யர் சுந்தரமாமணி அப்படித்தானே சொன்னார்...

அவர் சொன்ன ஜோஸ்யம் அப்படியே பலிக்குமாமே! கதை கதையா சொல்கிறாங்களே... 'இன்னின்னார்க்கு இப்படி இப்படி

சொன்னார்... இதது இப்படி இப்படி முடிஞ்சது' என்றெல்லாம் கற்பனாலங்காரத்துடன் விளக்கிவிட்டுச் சொல்வார்கள்: "அம்புட்டுக் கரெக்டா சொல்லுவார்... ஜோஸ்யத்தைக் கரைச்சுக் குடிச்சிருக்கார்... எல்லா நுணுக்கமும் தெரிஞ்ச மனுஷர்!"

அப்பேற்பட்ட ஜோஸ்யப்புலி, பாப்பாத்தியின் ஜாதகத்தை மட்டுமா, தப்பும் தவறுமா சொல்லப்போறார்? சொல்லவே மாட்டார்... அவர் சொன்னதும் சரிதானே... அவர் சொன்ன மாதிரியே இதோ, நா நார்நாரா கிழிஞ்சு கெடக்கேன். இன்னும் ரெண்டு மாசம் நான் வாழ்றதுங்கிறது, அதிகபட்சம்தானே...'

அலமேலுப் பாட்டி, சாவைப்பற்றி ஒரு இனம் புரியாக மகிழ்வுடன் சிந்தித்தாள். பேத்தியை நினைக்கும்போது மட்டுமே, பீதி நெஞ்சைக் கவ்வியது. கண்முன்பாக இருள் அடர்ந்தது.

ஆமா... இந்தப் புள்ளை... இந்த அகால நேரத்திலே எங்கே போச்சு?

பாப்பாத்தி ஜாக்கிரதை உணர்வுடன் நடந்தாள். முன் பாதங்களை ஊன்றி, ஓசை வராமல் நடந்தாள். அந்த மயில்களின் அலறல் இன்னும் ஓயவில்லை. மிரட்சியான அலறல்! பாப்பாத்தியின் மனதும் பயத்தால் சிலிர்க்கிறது. ஆயினும் ராஜையாவின் அழைப்பு சாகக்கிடக்கும் பாட்டிக்குப் பிறகு... தனக்கென இருக்கும் ஒரே நம்பிக்கை அவன்தான்... அவனைத் தட்டிக்கழிக்க முடியாது. அது மட்டுமல்ல... அவளுக்கே அவன் மீது ஒருவித மையல்! ஆழ்ந்த விருப்பம்!

அதனால்தான்... அன்று தனிமையில் மனதைத் திறந்து, பரஸ்பரம் விஷயங்களைப் பரிமாறிக் கொண்டிருக்கையிலேயே..... உடலை அணைத்து, ஆசையுடன் அவன் இறுக்கியபோது... உணர்வலைகளில் துரும்புகளாக இருவரும் மிதந்தபோது... மறுக்க முடியாத மயக்க நிலையில்... இன்பலாகிரியில் இணங்கினாளே... அந்தச் சம்பவங்களும் இருமுனை விருப்புடனும், மறுப்புடனும் தொடர்ந்தனவே... அந்த இணக்கமே... இன்று ஒரு பிரச்னையாக பரிணாமமாகி நிற்கிறது.

இதோ... வயிற்றில் ஏதோ ஒரு பிசைவு... அங்கே என்னவோ நடக்கிறது. நாக்கு மசமசாவென்றிருக்கிறது. இதெல்லாம் சேர்ந்து அவளுக்கு 'எதையோ' உணர்த்திப் பயமுறுத்தியது.

தன்னைப் பூத்து தாங்கி நின்ற செடி சாய்ந்து விட்டதே! இந்தப் பூவையெடுத்து அன்புடன் சூடிக்கொள்வானா? அதில் இவனுக்கு முழு உறுதி இருக்குமா?

கோடைகாலத்து மின்னலாக, இப்படிச் சில சந்தேகங்கள் மனதில் ஔிர்ந்து இருண்டன.

மூக்குத்திகூட இல்லாத தன்னை விட்டுவிட்டு, வரதட்சணையுடன் வரும் ஏதோ ஒன்றை ஏற்றுக்கொள்ள சபலம் கொள்வானோ என்ற சலனம், அவள் மனக்குளத்தை சில சமயங்களில் கலக்கியது.

தேய்பிறைக்கால வெளிறிப்போயிருக்கும் இருளில் நீந்தி... புஞ்சையைக் கடந்து... ஓடையை ஒட்டியுள்ள சோளப் புஞ்சையை நெருங்கினாள்.

''வந்துட்டேயா?'' என்ற ஆவலும், திருப்தியுமான குரல் அவளை அன்புடன் வரவேற்றது...

''ம்... நல்லவேளை. ஆச்சி இருமினாள். இல்லேன்னா நல்லா உறங்கியிருப்பேன்...''

அவள் சொல்லில் தொக்கி நின்ற சிறுபிள்ளைத்தனத்தைக் கண்டு, முகம் சுளித்தான் ராஜையா.

''பாட்டி இருமுனா... ஒனக்கு சந்தோஷமா?'' என்று கண்டனக் குரலில் கேட்டவன், தொடர்ந்தான்:

''சரி, உங்க ஆச்சிக்கு எப்புடி இருக்கு?''

அவன் விசாரிப்பில் ததும்பிய கரிசனமும், பரிவும், அவளது நம்பிக்கைகளை வளர்த்தது.

''இருக்கு...! சாவுக்கு நாளை எண்ணிக்கிட்டிருக்காள். பயமாயிருக்கு.''

''பயந்து ஆகப்போறதென்ன? ஒழுங்கா மருந்து குடிக்காகளா?''

''மருந்தே வேண்டாங்கிறாள். என்ன மாத்திரை குடுத்தாலும் சரி... 'ஆமாம் இந்த மாத்திரைதான் விதியைப் பிடிச்சு நிறுத்துமாக்கும்? எனக்குத்தான் ரெண்டு மாசம்னு ஆணிபிடிச்சு எழுதியாச்சே'ன்னு சலிச்சாப்புலே சொல்லி, வேண்டாமென்னு விடுகிறாள்.''

''ஏன் அப்படி? ரெண்டு மாசம்னு நிச்சயமா எப்படிக் கண்டுபிடிச்சாக?''

''போன மாசம் ஜோஸ்யம் பாத்தாளாம்...''

''முந்தியெல்லாம் பேயா உழைப்பாளே. ரவ்வும் பகலுமாக பரப்பெடுத்துப்போய் அலைவாளே... எந்த நோய் வந்தாலும் கஷாயத்தைப் போட்டுக் குடிச்சு, ஒடம்பைத் தேத்திக்கொள்வாளே... இப்பமட்டும் என்னவாம்...?''

''அதான் சொன்னேனே, ஜோஸ்யம் பாத்தாள்னு. நா 'சமைஞ்ச' நேரத்தை குறிச்சு அதை வைச்சும், என்னோட பெறப்பு ஜாதகத்தையும் வைச்சு ஜோஸ்யம் கேட்டிருக்காள்... அந்த ஜோஸ்யக்காரப் பாவி சொல்லியிருக்கான், 'ஓம் பேத்தி சமைஞ்ச நேரத்துலே தோசமிருக்குது...'ன்னு. என்னோட தோஷம், எங்க ஆச்சியை கொன்னுடும்ங்கிற மாதிரி, ஆணியடிச்சாப்பலே சொல்லிட்டான் போலிருக்கு.

அந்த ஜோஸ்யன் சொன்ன ஜோஸ்யம், அவள் சுழல்றதுக்கும், வாழ்க்கையை எதுத்துப் போராடுறதுக்கும் ஆதாரமாயிருந்த நம்பிக்கையையே சுக்கு நூறா நொறுக்கிடுச்சு.''

இந்தப் புதிய 'நிஜம்', அவர்களிடையே கனத்த மௌனத்தை சிருஷ்டித்திருந்தது. அவர்களது சிந்தனைப்புழு, கவலையுடனும் எதிர்காலம் பற்றிய பீதியுடனும் ஊர்ந்துகொண்டிருந்தது.

'இந்த அளவுக்கு அன்பையும், அக்கறையும் காட்டி தனது கவலைகளின் சுமைகளைப் பங்கிட்டுக்கொள்ளும் இவன், நம்மைக் கைகழுவிவிடவா செய்வான்...' என்ற நம்பிக்கையான சிந்தனையும், பாப்பாத்தி நெஞ்சில் நிழலாடியது.

'எல்லாம் நிறைஞ்ச இன்னொருத்தியோட, ஏதுமில்லாத தன்னை ஈடுபாத்து... மனசு மாறிட்டா...? ஆம்பளைகளை நம்ப முடியாது.'

இப்படியோர் அச்சமும், அவளது அடிவயிற்றைக் கலக்கியது. எதிர்காலம் அவளிடம் கண்ணாமூச்சு காட்டியது.

ஒரு புதிய ஜீவன் தன் வயிற்றுள்- தனது ரத்தத்தில்- வடிவம் கொள்ள ஆரம்பித்திருப்பதை நினைத்தபோது, திகிலும் கலக்கமும் நெஞ்சை நிரப்பியது; உலுக்கியது.

சிந்தனைச் சரட்டைக் கத்தரித்து விட்டு, பிரக்ஞையுற்ற ராஜையா, அவளது மென்கரத்தைப் பற்றினாள்.

''சரி, போய் ஆச்சியைக் கவனி... நேரமாச்சு.''

''ஒரு விஷயம்...'' என்று ஆரம்பித்தவள், நாணம் கலந்த தயக்கத்தோடு உதட்டைக் கடித்தாள்.

''என்ன பாப்பு... சொல்லுடி'' ஆசைப்பெருக்கில் வார்த்தையில் அன்பு ஆர்ப்பரித்தது; விஷயத்தை, தயங்கி... மென்று விழுங்கி... முணுமுணுப்பாக வெளிவிட்டாள். அவன் மனதில் அதிர்ச்சி மின்சாரம்!

தன்னை அழுத்தி அணைத்திருந்த ஆண்மைத் திமிரான இறுக்கம், தளர்வது போன்ற பிரமை அவளுக்கு! பீதியும் திகிலும் நெஞ்சைக் கலக்கின. 'பிஞ்சாக பரிணமிக்க முயன்றுவிட்ட இந்தப் பூவைப் போற்றிப் பாதுகாப்பானா...?'

ஏராளமான சம்பவங்களையும், நிகழ்ச்சிகளையும் சுவடுகளாக- காய வடுக்களாக- விட்டுவிட்டு மாதம் மூன்று கரைந்தோடிவிட்டன.

அலமேலுப் பாட்டி இன்னும் மரண தேவதையை சந்திக்கவில்லை. ஆனால் ரொம்பவும் கிழிந்து நைந்து போனாள். இருமல் கொடுமையில், இரவுகளெல்லாம் ஏகாதசிகளாக நகன்றன. சோப்புப் போட்ட துணியைக் கசக்குவதைப்போல இருமல், அலமேலுவின் நலிந்த உடலை உலுக்கிப் பிழிந்தது.

பாப்பாத்திவேறு அவளைப் பயமுறுத்தினாள். ஒரு பூசணிப் பூவைப்போல அகன்று மலர்ந்து பிரகாசிக்கும் பாப்பாத்தி, இப்போதெல்லாம் இருண்டு கறுத்துக் கிடக்கிறாள்.

இப்போதெல்லாம் அவள் குளிப்பதில்லை; அலங்கரித்துக் கொள்வதுமில்லை. சரியாகச் சாப்பிடுவதுமில்லை.

'சாகக் கிடக்கும் ஆச்சியை எண்ணித்தான் இப்படி மருகித் தவிக்கிறாளோ...' என்று நினைத்துக் கொண்டபோது, பேத்தியின் பாசத் தவிப்பில் அலமேலுப் பாட்டி உருகிப் போனாள்.

'இப்பேர்பட்ட பாசமான தங்கக் கட்டியை, இந்த நீசப்பய உலகத்துலே தவிக்கவிட்டுட்டு... ஈசன் என்னை இழுக்கப் போறானே...' என்று நினைத்தபோது, அளவில்லா வருத்தத்துடன் சூள்கொட்டினாள்.

ஜோஸ்யரின் பப்பாளிப்பழ மூஞ்சியை, முதன் முதலில் வெறுப்புடன் எண்ணினாள். 'விதியின் வலிமையால் நாள் நிச்சயிக்கப்பட்டுவிட்ட தனது சாவை முன்னுணர்த்திய' அவரை... ஏனோ காரணம் புரியாமல் 'நாசமாய்ப் போக' என்று அக்கினி மனத்துள் சபித்தாள்.

'அவரைச் சொல்லி என்ன செய்ய, பாவம்? நம்ம தலையிலே பிரமன் எழுதியிருக்கிற எழுத்துக்கும், பாப்பாத்தியின்

விதியமைப்புக்கும், அவரைக் குத்தம் சொல்லி என்ன செய்ய...' இப்படியும் ஒரு சுய விமர்சன சிந்தனையில் மிதந்தாள்.

கொல்லையில் "ஒவ்... ஹஒவ்..." யாரோ வாந்தி எடுக்கும் சப்தம் கேட்டது. அலமேலுவின் சிந்தனை கத்தரிக்கப்பட்டது. மனதில் ஒரு திடுக்கிடல். கொஞ்ச நேரத்தில்-

பாப்பாத்தி கழுவிய முகத்தைத் துடைத்துக்கொண்டு வந்தாள். அவள் முகத்திலும், உடலிலும் அளவில்லா தளர்ச்சியும், வாட்டமும் நிழலாகக் கவிந்திருந்தது.

"என்னடி வாந்தி எடுக்கிறே?" பதற்றத்தில், அவள் குரலில் கண்டிப்பு தொனித்தது.

"ஒன்னுமில்லே... நேத்துக் குடிச்ச சோளக்கஞ்சி ஒவ்வலே. குடலைப் புரட்டிக்கிட்டே வருது."

பாப்பாத்தியின் பதில், பாட்டியின் பதற்றத்தைத் தணிக்கவில்லை. ஆயினும் சொன்னாள்: "அஞ்சாறு அரிசியை வாயிலே ஒதுக்கு... குமட்டாது."

பாப்பாத்தியின் மனதில், சலிப்பும் விரக்தியும் நிறைந்து நின்றது. யாரையோ திட்டுவதைப்போல ஆத்திரத்துடன் முணுமுணுத்தாள். "நாசமாய்ப் போக!", "ஒருநாள், பேதியிலே பாடையேற!", "கையிலே கண்ணுலே புத்து (புற்று) புறப்பட!" என்றெல்லாம் ஆங்காரமாய் சபித்துக்கொண்டாள்.

சிலசமயம் தன்னையே திட்டிக்கொண்டாள். தனக்கு 'இதுவும் வேணும், இன்னமும் வேணும்' என்றும் சலித்துக்கொண்டாள்.

இதையெல்லாம் அரசல் புரசலாகக் கவனித்த பாட்டியின் மனதில் ஒரு புதிய கலக்கம் பிறந்தது. அரூபமான ஆபத்து தன்னைச் சுற்றி வளைப்பது போன்ற பிரமையில் அஞ்சி நடுங்கினாள்... யாருக்கு அஞ்சுகிறாள்? தன்னை நோக்கி வரும் மரணத்துக்கா? அனாதையாகத் தவிக்க இருக்கும் பேத்திக்கா?... அவளுக்குப் புரியவில்லை.

நினைவின் அயற்சியில், கண்ணை மூடினாள்... பத்து அசுர நகங்களுடன் நீண்ட கரங்களை நீட்டிக்கொண்டே பிசாசுத்தனமான 'பப்பாளிப்பழ முகம்' ஒன்று, தன்னை நோக்கி வருவது போலிருந்தது. பீதியில் மனம் குளிர்ந்து மரத்தது.

மசகு போடாத சக்கரத்தைப்போல, பெருத்த கூச்சல் குழப்பத்துடன் ஆறு மாதங்கள் நகன்று ஓடிற்று.

அலமேலு பாட்டியின் வீட்டில் ஏசல்... சாடல்... வசவு... சாபம்... அழுகை... எல்லாம் நிகழ்ந்தன. வாழ்க்கை, அதற்கேயுரிய பாட்டையில் ஊர்ந்தது. கொந்தளிக்கும் பிரச்னைகள் மூழ்கடிக்க முயன்றன; மூழ்கடிக்கப்பட்டன.

ஊர் மெச்சியதோ இல்லையோ, அலமேலு பாட்டியின் மனம் குளிர, அந்தப் 'பூ', இப்போது ராஜையாவின் கழுத்தில் சூட்டப்பட்டிருக்கிறது!

இப்படி எல்லாமே நிகழ்ந்தன. ஆனால் எந்த 'இழவும்' நடக்கவில்லை. ஆம், 'பப்பாளிப் பழம்' அழுகிவிட்டது!

–செம்மலர், டிசம்பர், 1977



# 9. சில நூற்றாண்டுகள்...

இனி இந்த ஊருக்கே வரக்கூடாது. ஸ்டிரைக் முடியுற வரைக்கும், இந்த ஊர்ப்பக்கமே தலைவைத்துப் படுக்கக்கூடாது.

தொலைச்சுப் போடுவாங்க. நம்மளை நம்மை மாதிரி வாழவிட மாட்டாங்க. அவங்களை மாதிரி இருக்கச் சொல்லுவாங்க. நெருக்குவாங்க. சுத்த விவரங்கெட்டவங்க. கூறுகெட்ட முரட்டு ஜனங்க.

ஊரெல்லாம் ஒரே ஜாதிக்காரங்க. ஊர்க்கட்டு இருக்கு. ஏகக் கெடுபிடி. எந்த ஒரு காரியம்னாலும் சரி... நாட்டாமை சொல்றதுதான் வேதம். அவர் சொல்லிட்டா... சொன்னதுதான். அதுக்கு மறுபேச்சே இருக்காது.

மறுத்துப் பேசுறவனை மனுசனாகக்கூட மதிக்கமாட்டாங்க. ஆள் ஆளுக்கு எகிறிக்கிட்டு வருவாங்க.

'அடிடா...', 'புடிடா...', 'மரத்துலே கட்டி வைடா' என்று ஆளுக்கு ஆள் ஆரவாரம் பண்ணுவாக. 'குத்து வெட்டு ஆகிப்போயிடுமோ'ன்னு பொம்பளைப் புள்ளைக பதறிப் போறமாதிரி... ஊரையே திரட்டி வைச்சு கத்துவாங்க.

போனஸ் வேணும்... பூட்ஸ் வேணும்... வருஷத்துக்கு ரெண்டு ஜோடி யூனிபார்ம் வேணும்... மழைக்கு கோட்டு வேணும்... தூசி அலவன்ஸ் வேணும்... சீனியாரிட்டி அடிப்படையில் க்ரேடு வேணும்...

இன்னும் எத்தனையோ 'வேணும்களுக்காக' ஸ்ட்ரைக் வரப் போகுது. நிர்வாகத்துக்கு ரொம்பத் திமிரு. ரொம்ப அலட்சியம். பேச்சுவார்த்தைகள்லே பிரச்னையை முடிக்கமாட்டேங்குது.

நாலு மைல் தள்ளியிருக்கிற சிமிண்டாலையிலேயும், கல்குவாரியிலேயும் ஸ்டிரைக் வர்ரதைத் தவிர...வேறு வழியில்லைன்னு ஆகிப்போச்சு.

நா அந்த ஸ்டிரைக்லே கலந்துக்கக்கூடாதாம். கருங்காலியாகணுமாம! பாதாளத்துக்குள்ளே- கல்லை ஒடைச்சு... லோடு பண்ணுகிற நான் கலந்துக்காம... அந்தப் போராட்டத்தை யாரு நடத்துறதாம்!

இந்த 'வேணும்'கள் ஞாயமான 'வேணும்'கள்தானே. இதுகளுக்காக நான் போராடப் போகக்கூடாதுன்னா... அந்த 'வேணும்'களை இந்த ஊர்க்காரவுக குடுப்பாங்களா...?

இவங்களுக்கு ஒரே குருட்டுப் புத்தி. வெளிச்சத்தைப் பார்க்க நினைக்காத அப்பாவி ஜனங்க. நாட்டாமை சொன்னதையே செய்துக்கிட்டு- சொல்லிக்கிட்டு- கிளிப்பிள்ளைக மாதிரி.

குளத்துத் தவளைக. ஒரே தண்ணி. ஊறாத பழைய தண்ணி. ஒரே சகதி. ஒரே மாதிரியான வாழ்க்கை. பாவம், அதுகளுக்குத் தெரிஞ்சது அம்புட்டுதான்!

பிறந்த ஊரு, சொந்த ஜனங்கன்னு நெனைச்சு, இங்க வீடு கட்டுனது தப்பாப் போச்சு. யோசனையில்லாம கட்டியாச்சு. இப்ப, திடுதிப்புன்னு வீட்டை மடிச்சு, கக்கத்துல இடுக்கிக்கிட்டு ஓடிடவா முடியும்?

இப்ப... ஆத்துத் தவளையைப் பாத்து, ஒரே பொந்துக்குள்ளே கட்டுப்பட்டுக்கிடன்னு, கிணத்துத் தவளைக கத்துது.

இதுகளுக்கு விவரம் சொன்னாலும் புரியமாட்டேங்குது. மண்டையிலே ஏறமாட்டேங்குது. ஏறுகிறமாதிரி, நமக்கும் சொல்லத் தெரியமாட்டேங்குது.

மனசுக்குத் தெரியும் ஞாயத்தை, 'போராடாம ஒன்னும் நடக்காது'ங்கிற நெசத்தை, இதுகளுக்குச் சொல்றாப்புலே நம்ம நாக்கிலேயும் வக்கு இல்லே, நல்லவார்த்தை சொல்ல...

வாயைத் தெறந்தா... திண்டுக்கு முண்டா வார்த்தை வருது. ஒன்னு இருக்க ஒன்னு சொல்லிட்டா... அதுதான் சாக்குன்னு ஊரே திரண்டு மொறைக்குது. கூச்சல் போடுது.

எந்த ஞாயத்தைச் சொன்னாலும் காதுலே போட்டுக்காம, ஒத்தை வரியிலே கேக்குறாரு நாட்டாமை.

''ஜி.எம்'மா இருக்குற நம்ம சாதிக்காரரை துரத்துறதுக்கு, போராட்டம் நடத்துற மத்த சாதிக்காரப் பயலுகளோட நீயும் சேர்ந்துக்கிட்டு, இனத் துரோகம் பண்ணலாமா?''

''ஐயய்யோ... நாங்க 'ஜி.எம்.மெ' விரட்டுறதுக்காகப் போராடலியே. எங்க கோரிக்கைகளுக்காகத்தானே.''

''போனஸும், பூட்ஸும் இல்லாம வேலை செய்ய மாட்டீகளோ? துரைக! முந்தியெல்லாம் அஞ்சு ரூவா கூலிக்கு வேலி முள்ளு வெட்டுனப்போ... க்ரேடும், அலவன்ஸும் யார்கிட்டே வாங்குனே?''

''அதுக்காக, கிடைக்க வேண்டிய ஞாயமான சலுகைகளை எப்படி வுட்டுத்தர முடியும்?''

''ஏலேய்... திமிர்பிடிச்சுப் பேசாதேடா... அவனவன், வானம் பார்த்த பூமியிலே எட்டு ரூவா கூலிக்குக்கூட வேலையத்துப்போய் அலையுறான். எந்தச் சாமி புண்ணியமோ... ஒனக்கு கல்குவாரியிலே வேலை கெடைச்சிருக்கு.. கைநெறைய சம்பளம் வாங்குற. அத்தோட வாயை மூடிக்கிட்டு கிட... பெரீ...ய துரை கணக்கா... சட்டம் பேசாதேடா... தாங்கமாட்டே.''

''ஏண்டா... ஊர் நாட்டாமை, நா சொல்றேண்டா... நீ ஸ்ட்ரைக்குலே சேரக்கூடாது. நம்ம சாதிக்காரப் பய எவனும் சேரக் கூடாதுடா. ஜி. எம். நம்ம சாதிக்காரரு. இனத்துக்காரரு. அவரை குறைச்சுப் பேசுனா... அவன் எந்தச் சங்கத்துக்காரனாயிருந்தாலும்... அவன தலையை வகுராம வுடக்கூடாதுடா... என்னடா, பெரீய சங்கம்? மயிர்ச் சங்கம்! ஏலேய்... சங்கம்ங்கிறது நேத்து முளைச்சதுடா. சாதிங்கிறது நம்ம பாட்டனுக்கு பாட்டன் காலத்து விஷயம்டா. பாத்து நடந்துக்க.''

மிரட்டல்... கொடூரமான வெறித்தனமான மிரட்டல்... நியாயம், உண்மை பற்றிய அறிவேயில்லாத மிரட்டல்; தலைக்கேறிப் போய்விட்ட சாதி வெறியின் அதிகாரத்துவ மிரட்டல்.

இதற்கெல்லாம் பணிவதே இழிவு; அசிங்கம்; மானக்கேடு.

என்ன செய்றது?

''சோத்தை பாத்துக்கிட்டே எம்புட்டு நேரம்தான் யோசிக்கிறது? சாப்பிடுங்க. ஆறிப்போகுது...''

வட்டிலும் சோறும் கண்ணுக்குத் தெரிந்தது. ஆறி அலர்ந்து போன சோறு. உள்ளுக்குள் ஓடிய உஷ்ணமான நினைவுகள். பட்டென்று நிமிர்ந்தான்.

மாடத்தி!

இப்போதுதான் மஞ்சள் தேய்த்து குளித்திருக்கிறாள். பளிச்சிடுகிற முகத்தில், திட்டு திட்டாகப் பச்சைகள். ஈரக்குளிர்வோடு முதுகில் தளர்ந்து, தவழ்ந்த கரிய கூந்தல். கூந்தலின் கருப்புக்கு வேற்றுக் கருப்பாக முகம்.

மேல்வரிசைப் பற்கள் மின்னச் சிரிக்கிறாள். காதுகளின் நுனியில் பளிச்சிடுகிற ரோசாப்பூ தோடுகள், முகக்கருமையில் டாலடிக்கின்றன.

ஏதோ கேள்வி கேட்டாள் என்ற நினைப்பில், உயிரில்லாமல் 'ஒன்னுமில்லே' என்றான்.

இவள்தான் எம்புட்டு நேர்த்தியானவள். அருமையான குணம், வைரம் பாய்ந்த குணம். சதா எந்நேரமும் என்னைக் குறையடிச்சே நேரில் பேசினாலும்... உள்ளுக்குள் என்மீது எம்புட்டு நம்பிக்கை!

பூமி மீது சம்சாரி வைச்சிருக்கிற மாதிரி, எந்தப் புயலுக்கும் அசைஞ்சு குடுக்காத நம்பிக்கை!

கட்டிக் கொடுத்திருந்த அக்கா ஊருக்குப் போயிருந்தவன், மாடத்தியைப் பார்த்தான். பார்வைகளில் மனசு பிடிபட்டுப் போய்விட்டது. மனசைக் கவ்விக்கொண்ட பார்வை; பரஸ்பரம் வாழ்வையே கவ்விக்கொண்ட பார்வை.

அப்புறம், அக்கா மீது பாசம் பொங்கி வழிய ஆரம்பித்து, அடிக்கடி அக்காவைப் பார்க்கவரத் துவங்கினான்.

பழக்கவழக்கமாயிற்று, மாடத்தி.

எந்தச் சொத்துமில்லாமல்... கூலி வேலையில் வயிறு வளர்த்து வந்த இவனுக்குப் பெண் தர மறுத்துவிட்டார்கள்.

'வக்கத்த பயலுக்கெல்லாம் கல்யாணம் ஒரு கேடா?' அடியோடு மறுத்துவிட்டனர். வக்கு, வசதி பார்த்து கவ்விய பார்வைகளா?

பழக்கவழக்கம் நிற்கவில்லை. நிறுத்தியே ஆக வேண்டிய கெடுபிடி வந்து சேர்ந்தது. என்ன செய்றது என்று கவலையோடு அவன் கேட்டபோது, என்ன துணிச்சலாய்ச் சொன்னாள்... எம்புட்டு நம்பிக்கையோடு சொன்னாள்... வேறு எந்தப் பெண்ணால் அப்படிச் சொல்ல முடியும், மாடத்தியைத் தவிர!

''எனக்கு எவரும் பெரிசில்ல. எந்தச் சிறுக்கியும் தேவையில்லே. நீங்கதான் எனக்கு ராசா. நீங்க என்ன செய்ஞ்சாலும், எனக்குச் சரிதான்.''

அந்த-வைர நம்பிக்கைதானே, அவளது அந்தத் துணிச்சல்தானே... இவனுக்குத் தெம்பைத் தந்தது.

தைர்யத்தை வழங்கியது; சூழலின் இருட்டுப் பின்னலை அறுத்தது...

கூட்டி வந்துவிட்டான்.

அவளுடைய சொந்தக்காரர்கள், அரிவாள், கம்புகளோடு ஊருக்குள் படையெடுத்தபோது- இவன் பயந்தான். திருடிவிட்டு

மாட்டிக் கொண்டவனைப்போல மருகித் தவித்தான். தப்பிக்க முடியாத வலைக்குள் சிக்கிக்கொண்டு, வியர்த்தான். நடுங்கினான். அடி வயிற்றில் பகீர் என்றது.

அப்போது-

குறுக்கே மறித்து வந்து நின்றாள் மாடத்தி. புலியாய்ப் பாய்ந்து, இவனுக்குக் கவசமாக நின்றாள். கண்களில் தகதகத்த வைராக்யம். சம்மட்டி அடிவிழுந்தவுடன் தெறிக்கிற நெருப்புப் பொறிகளைப் போல... வார்த்தைகள் சீறிச் சினந்தன.

''நீங்க நகையும் போடவேண்டாம். நா செத்தா... இழவுக்கும் வரவேண்டாம். நல்லா வாழ்றேனோ... நாசமாய்ப் போறேனோ... எல்லாம் இவரோடதான். இதைத் தடுக்க, நீங்க என்ன... நம்ம குலதெய்வமே வந்தாலும் முடியாது, போங்க.''

துண்டை உதறி, மீசையைத் திருகிவிட்டு ''பொட்டைக் கழுதைக்கு தலையை முழுகியாச்சு'' என்று அன்றைக்குப் போனவர்கள்தான்...

கல்குவாரியில் வேலைக்குச் சேர்ந்து, பெர்மனெண்ட் ஆகி, 800க்கும் மேலே சம்பளம் என்று ஆன பிறகு... பிறந்த பேத்தியைப் பார்க்கிற சாக்கில் வந்து உறவு கொண்டாடினர்.

அப்பேற்பட்ட வைராக்கியக்காரி இவள்! வாழ்க்கைப் போராட்டங்களை வரிந்து கட்டிக்கொண்டு ஏற்றுக்கொண்டவள். சவடால்தனம் எதுவுமில்லாமல், இயல்பாகக் கிளர்ந்து, விசுவரூபம் எடுத்தவள்.

ஒற்றைப் புள்ளையாகப் பிறந்த பொட்டைப் புள்ளைக்கு, ஆவணி வந்தா ஒன்பது வயசாகுது. இத்தனை வருஷமா வெறும் வயிறாகவே இருந்தவள்... நீண்ட இடைவெளிக்குப் பிறகு இதோ... அடிவயிறு கனக்க, காயும் பூவுமாய் பசேரென்று, தளதளவென்று...

இந்த வவுத்துப் புள்ளைக்காரியை, இந்தக் குருட்டு ஜனங்கள் மத்தியில் விட்டுவிட்டு, நாம் மட்டும் ஊருக்கே வராமலிருந்தால்... ஸ்ட்ரைக்கில் இருந்தால்... அது நல்லா இருக்குமா? மாடத்தி, அனாதையாகிப் போயிட்டோமேன்னு திகைக்கமாட்டாளா?

நாட்டாமை பேச்சைக் கேட்டு, இந்த ஊர் ஜனங்களும் அவளுக்கு ஏதேனும் அக்ரமம் செய்துவிட்டால்?...

ஐயோ... நெனைச்சாலே நெஞ்சு பதறுதே...! ஈரக்குலை வேகுதே...

அதுக்காக... நாட்டாமை மிரட்டலுக்குப் பயப்படவா? ஞாயத்துக்காக நின்னு போராடுற சங்கத்து மூஞ்சியிலே கரியைப் பூசவா? காலத்துக்கும் கரையாத களங்கமா- கருங்காலிங்கிற பேர் வாங்கி- அசிங்கப்பட்டு நிக்கவா? ச்சே!

அதைவிடச் செத்துத் தொலைஞ்சிடலாமே!

''என்னங்க இது!'' மாடத்தியின் பரிகாசம், அவனை, அவனுக்குக் காட்டியது.

''இன்னிக்கு உங்களுக்கு என்ன ஆச்சு? எதுக்கு இப்புடி, என் மூஞ்சியையே பாக்குறீக?''

அட... ஆமாம், ரொம்ப நேரம்தான் பார்த்துவிட்டான். லஜ்ஜையுடன் பார்வையை விலக்கினான். சுவரில் மோதிய குருட்டு ஈயைப்போல, அங்கும் இங்கும் அலைந்தது பார்வை.

மனசு கிடந்து அடித்துக்கொண்டது.

நான் ஊருக்கே வராமல் தப்பித்துக் கொண்டு, ஸ்டிரைக்கில் இருந்துவிட்டால்... என்னைக் கட்டுப்படுத்தமுடியவில்லை என்ற ஆத்திரத்தில்... நாட்டாமை என்ன செய்வார்?

மாடத்திக்கு தொல்லைகள் கொடுப்பார்களோ...

ஊர்க்கிணற்றில் குடிதண்ணீர் எடுக்கவிடாமல் தடுத்து விடுவார்களோ... கடைகளில் சரக்கு தரவேண்டாம் என்பார்களோ... ஏகாலியை துணி துவைக்கவேண்டாம் என்பார்களோ...

ஒத்தையில் இருக்கிற அவளிடம், 'குடிவெறியில் வந்து வைது, கலாட்டா செய்வார்களோ...' அவளைக் கலங்க அடித்து, அதன் மூலம் என்னை ஜாதிக்கட்டுக்குள் பணிய வைக்க முயற்சிப்பார்களோ...

இதையெல்லாம் மாடத்தி சமாளிப்பாளா? ஒன்பது வயசு மகளை வைத்துக்கொண்டு, வயிற்றிலும் ஒரு ஜீவனைச் சுமந்து கொண்டு... இதை எதிர்த்து நின்றுவிடுவாளா?

என்னால் இவளுக்கு எம்புட்டுத் தொல்லைகள். ஆதிநாளிலிருந்தே எல்லா வகையிலும் மாடத்திக்குத்தான் தொல்லைகள்.

அவளுக்காகக் கசிந்து, போராட்டத்திலிருந்து பின்வாங்கினால், சங்கம் என்ன சொல்லும்? சங்கம் கிடக்கட்டும், நம்ம மனசே நம்மளைக் குத்திக் கொல்லுமே... காறித் துப்புமே... மனசுக்கும் ஞாயத்துக்கும் விரோதமா வாழ்ற வாழ்க்கையும் ஒரு பொழைப்பா? நாய்கூட சகிக்காதே, அந்தப் பொழப்பை!

குடையைக் கண்டு வெருண்டு, அங்குமிங்குமாய்ப் பாய்ந்து சீறுகிற காளையை இறுக்கிப் பிடிப்பதைப்போல... மனசுக்கு மூக்கணாங்கயிறைப் போட்டு இழுத்து நிறுத்தினான்.

''மாடத்தி.''

''என்னங்க.''

அவள் குரலில் கனிவு; அவன் முகத்திலேயே மனசை வாசித்து விட்டு, காட்டுகிற மனக் கனிவு; மனப்புண்ணின் மீது, மென்காற்றாக வந்து தழுவுகிற பரிவு.

உதட்டை நாவால் ஈரப்படுத்திக்கொண்டான். வார்த்தைகள் கிடைக்கவில்லை. சொற்கள், ஓடி ஒளிந்துகொண்டு கண்ணாமூச்சி காட்டின. தாய்மொழியே மறந்துவிட்டதைப்போல ஓர் தவிப்பு.

''சொல்லுங்க. எதுவானாலும் சரி, மனசுக்குள்ளேயே அடைச்சிக்கிட்டு எதுக்காக மருகணும்? சொல்லுங்க.''

சொல்லிவிட்டான்.

சுமையை இறக்கி வைத்துவிட்ட ஆசுவாசம் மனசுக்கு. என்ன சொல்வாளோ என்ற எதிர்பார்ப்பு; பதைப்பு. திக்... திக்... திக்...

அவள் மனசுக்குள் கனக்கிற பாரம், முகத்தில் படிந்த கரிய நிழலில் தெரிந்தது. இமைகள் மெல்லிசாகப் படபடத்து அடங்குகிறது. ஈரத்தில் மின்னுகிறது; கீழ் உதட்டில், ஒரு மெல்லிய சிறகின் துடிப்பு.

இவன் முகத்தை இதமாய்த் தழுவி, விலகுகிற அவளது கனிவான பார்வை.

''எந்த ஆகாயத்துலே சுத்தி அலைஞ்சாலும், அடையுறதுக்கு பறவை, கூடு வந்துதானே சேரணும்?''

''ஆ... மா.''

''இப்ப நம்ம கூடு இந்த ஊரு இல்லே. பாடுபடுற இடம்தானே, நம்ம கூடு? கூடச் சேர்ந்து ஒழைக்கிற ஜனங்கதானே... இப்ப நம்ம இனம்?''

''ஆமா'' என்ற அவன் குரலில், உற்சாகத் துள்ளல்; கண்களில் பரவச ஒளி.

''இனம் இனத்தோட இருந்தாத்தான் யாருக்குமே மதிப்பு. மானமதிப்போட வாழணும்னா... அதுக்காக நாம எதையும் தாங்கித்தானே ஆகணும்? நீங்க கவலைப்படாம போங்க, நா பாத்துக்கிடுதேன்.''

"நீ சமாளிச்சிருவியா... மாடத்தி? அதான்... எனக்குக் கவலை."

"ஒரு பொம்பளை மனசு வைச்சு நின்னுட்டா... அவளை எந்த கொம்பாதி கொம்பனும் அசைச்சிட முடியாது. தெரியுமா உங்களுக்கு?"

"தெரியாதா, என்ன! நம்ம கை கோர்த்து சேர்ந்த அந்த நாளிலேயே, நீ காட்டிய வைராக்யம் தெரிந்ததுதானே!"

ஆகாயத்தை முத்தமிட்டு நின்ற அந்த சிமிண்டாலையின் ராட்சஸக் குழாய், இப்போது அலங்கோலமாய் நின்றது. தாலியறுத்த மூளியாய்- அமங்கலமாயிருந்தது. மேகங்களின் அணிவகுப்பாய் வருமே, அந்தப் புகையைக் காணோம்.

ஸ்டிரைக் துவங்கிவிட்டது. ஆயிரத்துக்கும் மேற்பட்ட மனிதக் கைகளின் உழைப்பின் வலிமை, அந்த வெறுமையில் துலாம்பாரமாய்த் தெரிந்தது. உழைப்பு என்பது வலிமை மட்டுமா? அழகும் அல்லவா! அந்த அழகின் சிரிப்பில்லாமல், ஆலை இழவு வீடாகிக் கிடந்தது.

ஆலையின் முன்னால்... முக்கு ரோட்டில்... வெள்ளை வெள்ளைப் பிசாசுகளாய் ஏகப்பட்ட போலீஸ் வேன்கள். அந்தச் சந்திப்புச் சாலை முழுவதும், இரும்புத் தொப்பிகள் அணிந்த ஆயுதபாணி காக்கிச் சட்டைகள்...

இவன்... ஓட்டலில் சாப்பிட்டான். சங்க அலுவலகத்தில் தங்கினான். தட்டிப்போர்டுகள் கட்டினான். ஊர்வலங்களில் கோஷம் போட்டான். பொதுக்கூட்டத்தில் முன் வரிசையில் உட்கார்ந்தான்.

போராட்டப் பரபரப்பில் நாளும் பொழுதும் சென்றாலும்... மனசெல்லாம் மாடத்தி... மாடத்தி... மாடத்திகள்...

ஊரிலிருந்து தினந்தோறும் ஆள் வந்து கொண்டேயிருந்தது.

"நாட்டாமை ஒன்னை வரச்சொன்னாரு."

"ஊர்க்கூட்டம் இன்னிக்கு. நீ கட்டாயம் வரணுமாம். வரலேன்னா... அபராதம் போடுவாகளாம்."

"நாட்டாமை ஒன்னைக் கைப்பிடியா கூட்டிட்டு வரச் சொன்னாரு..."

-இப்படித் தினமொரு விதமாக வருகிற அழைப்புகள், அச்சுறுத்தல்கள், நச்சரிப்புகள், மிரட்டல்கள்.

இவன் அசைந்துகொடுப்பதாக இல்லை.

நாலைந்து நாட்கள் ஆகிவிட்டது. ஆளும்கட்சி சங்கத்தில் கொஞ்சப் பேர் வேலையில் இறங்கத் திட்டமிட்டனர். எல்லோரும் இவனது சாதிக்காரர்கள்தான்.

ஜி.எம்.முக்காகவும், ஜாதியின் மானத்தைக் காப்பதற்காகவும் என்ற மாயை உணர்ச்சியில் மயங்கிப்போய், பலியான கருங்காலிகள். அப்பாவித் தொழிலாளிகள்.

ஜாதி வெறி என்னும் போதையேற்றி, சுற்றுக் கிராமங்களில் கருங்காலித்தனத்திற்கு ஆள் திரட்டுகிற முயற்சிக்கு, ஆயிரக்கணக்கில் பணம் தண்ணீராய் இறைக்கப்பட்டது. ஊர் நாட்டாண்மைகள் வல்லவெட்டு போட்டு, மீசையை நீவிவிட்டுக்கொண்டு, பந்தா பண்ணிக்கொண்டிருந்தார்கள்.

'கருங்காலித்தனத்தை எதிர்த்து மறியல் போராட்டம்' என்று கூட்டுக் கமிட்டி அறைகூவல் விட்டது. தினசரி உணர்ச்சிமயமான தொழிலாளர்களின் கண்டன ஊர்வலங்கள். ஒவ்வொரு நாளும் 20 பேர், 30 பேர் என்று மறியல் செய்து, கைதாகி, மத்திய சிறைக்குச் சென்ற வண்ணம்...

அப்போதுதான், ஊரிலிருந்து ஒருவன் வந்து, இடியை இறக்கினான்.

''மாடத்தியை பாம்பு கடிச்சிடுச்சு. நீ அவசரமா வரணுமாம்.''

இவனது சர்வாங்கமும் நடுங்கி வியர்த்தது. மனசு, மூச்சுவிட மறந்துவிட்டது. உள்ளுக்குள் ஒரு ஹீனக் குரல். மாடத்தி...மாடத்தி, என்ற முணங்கல்.

அவனுள் எண்ணற்ற யூகங்கள். தேனீக் கூட்டமாய் மொய்த்த விபரீத கற்பனைகள். மாடத்தியை மயானக் கரைக்குத் தூக்கிச் செல்கிற காட்சி, மனசில்!

வேரறுந்தவனைப்போலத் தடுமாறுகிறான். கலங்குகிறான். அழுதுவிடுவதைப்போல குமுறி நிற்கிறான்.

பதைப்புடன் சைக்கிளைத் தூக்கினான். அப்போது-

சங்கத் தலைவரின் குரல்-

''தோழர், எங்க கிளம்பிட்டீக?''

''ஊருக்கு.''

''என்ன ஊர்லே? ஏதாச்சும் அர்ஜெண்டா?''

முகம் கறுத்துக் கிடந்தது. கண்கள் நீர்கோர்த்து நின்றன. உதடுகளை அழுத்தமாகக் கடித்தான். பொங்கிக் குமுறிய துயர உணர்ச்சிகளை அடக்கிக்கொள்ள சிரமப்பட்டான்.

வார்த்தை கிடைக்காமல் தவித்தான். சொற்களை எங்கே? காணோமே! தாய்மொழி மறந்துவிட்டதா?

''சொல்லுங்க தோழர், என்ன விஷயம்?''

''மாடத்தியை பாம்பு கடிச்சிடுச்சாம்.''

அதிர்ச்சியில், தலைவரின் முகம் நிறம் மாறியது. அவரது கனத்த மீசைக்கடியில் உதடுகள் துடித்தன. எதையோ யோசிக்க முயற்சித்து, ஏனோ நிறுத்திக்கொண்டார்.

''சரி போய்ட்டு வாங்க. ஆனா, ஏதாச்சும் சூது சூழ்ச்சி இருந்தா... சிக்கிக்கிடாதீக.''

அவனுள் சின்னச் சலனம். திகைப்பு. அவன் நிறைய யோசித்தான்.

''என்ன திகைச்சுட்டீக தோழர்?''

''இல்லே... நீங்க சொல்ற மாதிரி... ஒருவேளை பொய்யா இருந்தா...''

''அப்ப ஒன்னு செய்வோம். நீங்க இருங்க, நம்ம தோழர்கள் ரெண்டு பேரை உங்க ஊருக்குப் போகச் சொல்லுவோம். ஆக வேண்டியதைச் செய்யச் சொல்லுவோம். நீங்க பயப்படாதீக...''

''ஊம்.''

ஊருக்குப் போன இரண்டு தொழிலாளிகள், சாயங்காலம்தான் திரும்பி வந்தனர். அதற்குள் இவன் தவித்த தவிப்பு... பதைத்த பதைப்பு... மனசெல்லாம் மருகித் தவித்தது. அந்தத் தொழிலாளிகள் வந்து-

''அங்க அப்படியொன்னுமில்லே. எல்லாம்... ரெண்டு கால் பாம்பு கிளப்பிவிட்ட கப்ஸா'' என்று சொன்ன பிறகுதான்-

இவனுக்கு மூச்சே ஒழுங்காக வெளியே வந்தது. மனசு ஆசுவாசப்பட்டது. ஆனால்-

இந்நேரம்வரை கலவரப்படுத்தியதற்குக் காரணமாக இருந்தவர்கள் மீது மனசார அருவருத்து காறித்துப்பினான்.

ச்சே... ஜாதி வெறி எம்புட்டு அயோக்கியத்தனமானதா இருக்கு!

மனுசத்தன்மையில்லாம... மனசுகளைக் குத்திக் கிழிச்சு, துடிக்கவச்சு... த்தூ! ஒருவனை வளைச்சுப் பிடிச்சு... பணிய வைப்பதற்காக எம்புட்டு அசிங்கமான சூழ்ச்சி... ஜாதியே மனுசத்தனத்துக்கு எதிரியோ...

அதற்குப் பிறகும் சூழ்ச்சிகள்... அச்சுறுத்தல்கள்... மிரட்டல்கள்... அலைஅலையாக வந்துகொண்டிருந்தன. சங்கம் பலமாக இருந்ததால்... வன்முறை முயற்சியில் இறங்க முடியவில்லை. தொடர்ந்து தொல்லைகள் வந்ததால்-

தலைவர், இவனை மறியலில் கலந்து கொள்ளச் சொன்னார். மையச் சிறைக்குப் போய்விட்டான்.

சாமான்ய மனிதர்களான தொழிலாளர்கள் ஆயிரக்கணக்கில் ஒன்றுபட்டு... உடையாமல், தளராமல், தொடர்ந்து நடத்திய போராட்டத்தில்... சர்க்காரே ஆட்டம் கண்டது. அலட்சியம் காட்டிய நிர்வாகம், அவசரமாகப் பேச்சுவார்த்தைக்கு சங்கங்களை அழைத்து...

போராட்டம் வெற்றி பெற்று, சிறைச்சாலைகளிலிருந்து தொழிலாளர்கள் வந்து இறங்கிய அன்றைக்கு... வெற்றிவிழா கூட்டம்.

தலைவர் பேசுகிறார். ஒற்றுமையின் அவசியத்தை... போராட்டத்தின் சாதனைகளை... பெற்ற சலுகைகளை... அரசின் தவறான அடக்குமுறைக் கொள்கையை- அரசுக்கே பாடம் போதித்த தொழிலாளர்களின் வீர உறுதிகளை எல்லாம் பேசுகிறார்.

''தோழர்களே... வர்க்கப் போராட்டங்கள்தான் அனைத்து மக்களுக்கும் புதிய பாடங்களைக் கற்றுத்தருகிறது என்ற நமது மேதைகளின் வார்த்தை, மீண்டும் இங்கே மெய்ப்பிக்கப் பட்டிருக்கிறது. ஜாதியில் ஊறிக் கிடக்கிற நமது கிராமப்புறத்திற்கு இப்போராட்டம், ஜாதி என்பது மக்கள் விரோத- மனித விரோதத் தன்மையமானது என்ற படிப்பினையைக் கற்றுத் தந்திருக்கிறது.

போராட்டத்தில் உறுதியாக நின்ற சகல தொழிலாளர்களையும் பாராட்டுகிறேன். எல்லா அடக்குமுறைக்கும், இடைஞ்சல்களுக்கும் மேலாக... சுய ஜாதியின் எதிர்ப்புகளுக்கும், கெடுபிடிகளுக்கும், அடாவடித்தனங்களுக்கும் பலியாகாமல்... மனத் துணிவோடு நின்ற

அந்த ஒருசில தொழிலாளர்களின் வர்க்க உணர்வை. விசேஷமாகப் பாராட்டுகிறேன்...''

பலத்த கைத்தட்டல்... விடாத கைத்தட்டல்... தொழிலாளர்களின் உற்சாகக் குரல்...

இவனுக்குச் சந்தோஷமாக இருந்தது. இந்தப் பாராட்டுகள் எனக்குத்தான், இந்தக் கைத் தட்டல்கள் எனக்குத்தான் என்று அவன் மனசு துள்ளியது. ஆயிரமாயிரம் பூமாலைகள் கழுத்தில் விழுந்ததைப் போல... அவன் பாதங்களுக்கு முன்பு உலகமே பூக்களைத் தூவி ஆராதிப்பதைப் போல... அவனுக்குள் பெருமிதம்!

பொங்கி வழிகிற இன்ப உணர்வலைகள். இதயக் கரையை மோதித் தழுவி, நனைத்துச் செல்கிற அலைகள்.

கூட்டமெல்லாம் முடிந்தது. தலைவர் இவனை மட்டும் தனியாக அழைத்துச் சென்றார். கையைப் பிடித்து இறுக்கினார். அந்த இறுக்கத்தில் இருந்த நெருக்கம், வாழ்த்துகள், பரிவுணர்ச்சிகள்...

இவன் மனசெல்லாம் தழும்பி நின்றான்.

''தோழரே... நீங்க ஜெயிலுக்குப்போன பிறகு, உங்க ஊர்லே ரொம்பக் கெடுபிடி பண்ணினாங்க. கடைகள்லே சரக்கு தரவிட மாட்டேன்னாங்க. இன்னும் என்னென்னமோ அக்ரமங்களெல்லாம் செய்தாங்க. அதையெல்லாம் நம்ம சங்கத்து மூலமா.. அப்பப்ப உதவிகள் செய்து... சமாளிச்சிட்டோம். ஆனா... ஒரு வித்தைத்தான் எங்களாலே தடுக்க முடியாமப் போச்சு...''

இப்போதுதான், தலைவர் முகத்தின் வாட்டத்தை உற்றுப் பார்த்தான். இவனுக்குள் ஏதோ நொறுங்கிச் சரிவதைப் போலிருந்தது. சுத்தமாக வடிந்து போய்விட்டான்.

இவனுக்குள் நிறைய தேள்கள் ஊர்ந்தன. பாம்பு முற்றுகைக்குள் சிக்கிக்கொண்டதைப்போல, மனசுக்குள் திக்...திக்...திக்...

அவன் முகம் சட்டென நிறம் மாறியது. இப்போது மனசுக்குள் நெருப்பலைகள். அவனைத் தொட்டு முழுசாகக் கருக்கிவிட ஆசைப்படுகிற தீயலைகள்...

மாடத்தி... மாடத்தி... மாடத்தி..

சகல ரத்த பந்தங்களையும் உதறிவிட்டு, என்னை நம்பி வந்த மாடத்தி...

என்னை மனுசனாக்கி... ஆன்மாவையும் சகலத்தையும் என்னோடு பகிர்ந்துகொண்ட மாடத்தி...

மயானக்கரையில் பூமியின் படைப்புபோல் ஒரு சமாதி... அதற்குள் என் உயிர் மாடத்திதானா...

அவனுக்குள் ஏகமாய் தேள்கள்... கொடுக்கு நிமிர்ந்த கருந்தேள்கள்... அரிவாளை ஓங்கிக் கொண்டு ஓடிவருகிற கறுத்த உருவம்...

தலைவர் முகத்தைப் பார்த்துக் கொண்டிருந்தான், விழிகள் அசையாமல்.

''உங்க சம்சாரத்தை ஊர்க்கெணத்துலே தண்ணியெடுக்க விடமாட்டேனுட்டாங்க. உங்க புதுப் புஞ்சைக்கிணத்துலே தண்ணியிறைச்சு சமாளிச்சிட்டு வந்தாக. நாலு நாளைக்கு முந்தி... தண்ணி இறைக்கப்போய்... வாளிக் கயிறு காலுக்குள்ளே சிக்கி... உள்ளே விழுந்து...''

-ஐயோ மாடத்தி... மாடத்தி...

''இறந்து போச்சு... உங்க பொம்பளைப்புள்ளை, நாங்க எவ்வளவோ முயற்சி பண்ணியும் அந்தப் பெண் குழந்தையைக் காப்பாத்த முடியலே.''

இறந்தது மாடத்தி இல்லை, மகள்தான் என்பதை அறிந்தாலும், இழந்தது பாச மகளை அல்லவா? தலைவர் சொன்ன தகவலின் அதிர்ச்சி, வேறு கனபரிமாணத்தில் அவனைத் தாக்கியது. 'ஐயோ... மகளே...!' என மனம் ஓலமிட்டது.

ஒன்பது வருடங்கள் உயிராக வளர்த்து, மகிழ்ந்து, பறிகொடுத்த தகப்பனின் இதயரத்தம், கண்களில் வழிந்தது.

''தோழரே... இதுவரைக்கும் நீங்க காட்டின துணிச்சலைவிட, இந்தப் பெரிய இழப்பை தாங்கிக்கிடுற துணிச்சலிலேதான்... உங்க வர்க்க உணர்வின் பலமே இருக்கு.''

அவன் கையை மீண்டும் பற்றி இறுக்கிய தலைவர்... அதன் மூலம் ஆன்மாவுக்குள் ஆறுதலை வழங்கிய மனிதநேயம்... நெஞ்சின் ஈரம்...

அவன் கண்ணீரைத் துடைத்துக்கொண்டான். இப்போது வார்த்தைகள் ஓடி ஒளியவில்லை. சொற்கள் கிடைக்காமல் கண்ணாமூச்சி காட்டவில்லை. சுவாசத்தைப்போல சுலபமாகக் கிடைத்தன.

''தோழரே... நம்ம நிர்வாகத்தோட அதிகார மமதையும், கிராமத்து சாதி வெறியும் சேர்ந்து என் மகளை- என்னோட ஒத்தைப் புள்ளையை- தின்னு முழுங்கியிருக்கு. முழுங்குனா... முழுங்கிட்டுப் போகட்டும். தோழரே, மாடத்தி உசுரோட இருந்தா... இன்னும் புள்ளைகளைப் பெத்துக்க முடியும். ஆனா... என் மகளை முழுங்கியிருக்கே, அதுக விக்கி விக்கிச் சாகணும் தோழரே... அதுக செத்தா... எனக்கு நிம்மதிதான்.''

''சபாஷ் தோழரே... சபாஷ்! சாகும். அதுக செத்தே தீரும். அதுக்காகத்தானே நாம போராடிக்கிட்டிருக்கோம்...''

ஜாதியை- சில நூற்றாண்டுகளை- ஜெயித்துவிட்ட வீரனாக, மாடத்தியைப் பார்க்கப் புறப்பட்டான், பாசத்தோடு- பதைப்போடு.

வாழ்க்கை - பூமியில் தடம் பதித்து சுழன்றுகொண்டிருந்தது, அவனது சைக்கிள் சக்கரங்களைப் போல...

–செம்மலர். அக்டோபர். 1986



# 10. பூக்காத மாலை

தொழுவத்தில் கட்டிக் கிடந்த எருமை மாடு ''ம் ம் மே....ஏ...ஏ...'' என்று ஏக்கமாய்க் கதறியது.

கதறிய கதறலில், அதன் பருத்த வயிறு விம்மித் தணிந்தது. இடி முழக்கமாய் நீண்ட அதன் கதறலில்... அந்தத் தெருவே அதிர்ந்தது.

காடியில் புல்லோ- கூளமோ, ஒரு துரும்புகூட இல்லை. மதியத்திலிருந்து அதற்கு இரை இல்லை. புல்லறுத்துப் போடுகிற ராசாத்தியை எதிர்பார்த்து எதிர்பார்த்து, ஆவலோடு அதன் கருங்கண்கள் வாசலைப் பார்த்தன.

வீட்டை விட்டு வெளிவர முடியாமல் வெட்கப்பட்டுப்போய் உள்ளேயே கிடந்தாள், ராசாத்தி. வெம்பலும் விசும்பலுமாய்... கசியும் கண்களுமாய், வெட்டுப்பட்ட கொடியாய்த் துவண்டு கிடந்தாள். ஊர் முகத்தை ஏறிட்டுப் பார்க்க அவளுக்குத் தைரியமில்லை. எப்படி அவள், ஊர் முகத்தைப் பார்க்க முடியும்? அய்யாதான் அவளை மூக்கறுத்து மூலையில் தள்ளிவிட்டாரே!

அய்யாவும் வாய்க்கு வாய் ஆசையோடு சொல்வார். ''இந்த வருஷ வெள்ளாமையிலே... எப்படியாச்சும் ஒனக்கு அஞ்சு பவுன் நகை வாங்கிப் போடணும். எந்தச் செலவை நிறுத்தினாலும் சரி... நகை கட்டாயமாக வாங்கிடணும்.''

அவர் ஆசையும், ஆர்வமும் போலியல்ல. ஏமாற்றமல்ல. உண்மையானவைதான். ஆனால் மிளகாயும், பருத்தியும் வருஷா வருஷம் விளையத்தான் செய்கிறது. வியாபாரிகளிடம் போய்ச் சேர்கிறது. கடைசியில் கணக்குப் பார்க்க, ஒன்றும் இருக்காது. கைக்கு எட்டினால் வாய்க்கு எட்டாது. வாய்க்கு எட்டினாலும் வயிற்றுக்கு எட்டாது. என்னதான் மாயமோ, இது!

வருஷம் என்பது வருஷங்களாகி... அதுவும் ஏழு எட்டு என்றாகிவிட்டது. அஞ்சு பவுன் நகை வாங்க முடியவுமில்லை. அய்யா ஆசையாய்ச் சொல்வதை நிறுத்தவுமில்லை.

இப்போ-

செடிப் பருவத்தில் நிற்கிற மிளகாய்ச் செடி, சுருட்டையடித்துக் கிடக்கிறது. பூச்சி மருந்து அடிக்கணும், உர உப்புப் போடணும், முதல் தண்ணீர் பாய்ச்சணும். அய்யாவும் சூறாவளியாய் ஓடிப்பார்த்தார்.

'அங்கு, இங்கு' என்ற குருட்டு ஈயாய்ப் பறந்துபார்த்தார். முட்டி மோதி, அலைந்து, அலுத்துச் சோர்ந்த நிலையில்-

ராசாத்தி காதிலும், மூக்கிலும் கிடந்த கம்மலையும், மூக்குத்தியையும் கழற்றும்படியாகிவிட்டது.

மூளியாகிப்போன முகத்தோடு எப்படி வெளியே தலை காட்டுவது? ஊர் முகத்தை எப்படி ஏறிட்டுப் பார்ப்பது? காதையும், மூக்கையும் பார்த்தவர்கள், என்ன நினைப்பார்கள்? முதுகுக்குப் பின்னால் கெக்கலி பண்ணி, நமுட்டுச் சிரிப்புச் சிரிக்கமாட்டார்களா?

ராசாத்திற்கு உள்ளுக்குள் குத்திக் குடைந்தது. எந்த வேலையும் செய்ய விருப்பமில்லாமல், உயிரற்ற மனத்தோடு... வெட்டுண்டு கிடந்தாள்.

அம்மா உயிரோடு இருந்திருந்தால்... இவளை இப்படி குறைகோலமாக்கிக் குப்புறக் கிடத்தவிட்டிருப்பாளா? ராசாத்தியை இன்னும் இந்த வீட்டில் இருக்கவா விட்டிருப்பாள்? அடுத்த வீட்டுக்குக் காலா காலத்துலே மாலையும் கழுத்துமாய் அனுப்பி வைத்து, பேரன் பேத்தி என்று பூப்பிஞ்சுகளைப் பார்த்துப் பூரித்திருக்கமாட்டாளா?

அய்யா, இவளை ஒரு கடமை- சுமை- என்று நினைக்கத்தான் செய்கிறார்; இறக்கி வைக்கவேண்டும் என்று ஆசைப்படத்தான் செய்கிறார். ஆனால்... அதற்கான முன்முயற்சி எடுக்கத் தெரியவில்லையே...

அம்மா இருந்திருந்தால் இவரைக் குத்திக் குடைந்து முடுக்கிவிட்டிருப்பாளே... புலம்பிப் புலம்பித் துரிதப் படுத்தியிருப்பாளே. 'கன்னி கழியாத புள்ளையை எம்புட்டு நாளைக்கு வீட்டிலே வைச்சிருக்கிறது' என்று நச்சரித்து, நச்சரித்து... அய்யாவை ஏதாச்சும் ஏற்பாடு செய்ய வைத்திருப்பாளே...

இப்ப யாரு அய்யாவை நச்சரிக்கிறது?

பாவம், தூண்டிப் பத்த ஆளில்லாத மாடுபோல... தன் நடையாய் நடக்கிறார். வெள்ளத்தில் மிதக்கிற மரக்கட்டையைப்போல் தன்போக்கில் புரண்டு கொண்டிருக்கிறார்...

ஊரில் இருக்கிற இரக்கப்பட்ட பெரிய மனிதர்கள்... இரண்டு தடவை 'ஏற்பாடு'களுக்கு அய்யாவுடன் பேசிப் பார்த்தனர்.

முதல் தடவை, "எட்டு பவுன் நகை முடியுமா" என்றனர். இரண்டாவது தடவை, "அஞ்சு பவுன் நகையாச்சும் போட முடியுமா" என்று கேட்டனர்.

அய்யா வெறும் கையைப் பிசைந்தார். ஏக்கப் பெருமூச்சுடன் சப்புக் கொட்டினார். அவ்வளவுதான்!

'சந்தைக்கு வராத மாடு இது' என்று சுத்தமாகக் கைகழுவி விட்டனர். இப்போ?

ராசாத்தியோடு அஞ்சாம் கிளாஸ்வரை ஒன்றாகப் படித்தவள் ராமாயி. இதோ... அவளது மகன் மூணாம் கிளாஸ் போய்க் கொண்டிருக்கிறான்!

இவள் சடங்காகி, மூலையில் பதினாறு நாள் இருந்தபோது, பாவாடைச் சிறுமியாக வந்து, முட்டாள்தனமாய்ப் பல்லாங்குழி விளையாடிய கமலா, தலைப் பிள்ளையைப் பெற்றெடுத்துத் தாய் வீட்டில் வாங்கித் தந்த புதுச் சேலை, தொட்டில், வேட்டியோடு, போன வாரம்தான் புருஷன் வீட்டுக்குப் போகிறாள்...

இவள் தாவணி போட்ட அதே மாதத்தில் பிறந்த பேச்சியம்மா, வளர்ந்து, மலர்ந்து, பெரிய மனுஷி முகூர்த்தம் வைத்திருக்கிறார்கள்...

இவளைச் சுற்றிக்கொண்டு காலம் ஓடுகிறது. கண்ணாமூச்சி காட்டுகிறது. எல்லாவற்றையும் தழுவி வளர்க்கிறது. சிறு செடியை, பெரிய செடியாக்கி, மொட்டுகளை அரும்ப வைத்து, பிஞ்சாக்கி, காயாக்கி, கனியவைத்து, பறிக்கவைத்து, விதையாக்கி...

மாய்மாலம் செய்கிற காலம், இவளை மட்டும் பூத்த நிலையிலேயே நிற்க வைத்துவிட்டது.

காலமும் வாழ்க்கையும் இவளை விட்டுவிட்டு... தன் போக்கில் ஓடிக்கொண்டேயிருக்கின்றன...

ராசாத்தி, கைத்துப் போன மனசோடு குமுறிக் குமுறி அழுதாள். சத்தமில்லாமல் அழுதாள். நெஞ்சின் ஆழத்தில் நைந்து கிடந்த ரகசிய உணர்ச்சிகளெல்லாம் பொங்கிப் பீறிட்டு, அவளை உலுக்கியெடுத்தன. அமுந்திக் கிடந்த அவலச் சோகம் விசுவரூபமெடுத்து... அவளை அடித்துப் புரட்டியது.

உள்ளுக்குள்ளேயே கொத்திக் குதறுகிற சோகம்; அடுத்த ஜீவனிடம் பகிர்ந்துகொள்ளமுடியாத ஊமைச் சோகம்; சுமையாய் அழுத்தித் திணறடிக்கிற சொந்தச் சோகம்; மனத்தின் மெல்லிய ஜவ்வுகளைக் கிள்ளிக் கிள்ளித் துடிக்க வைக்கிற சோகம்; அவமானத்தில் குன்றிக் கூசிக் குறுகச் செய்கிற கொடிய சோகம்.

''அம்மா... தாயே'' என்று வெடித்துக் கதறிவிட்டாள்.

''என்னை இப்படித் தவிக்க விட்டுட்டு, நீ மட்டும் போய்ச் சேர்ந்துட்டியே'' என்று புலம்பலோடு அழுதாள். மனத்தில் மண்டிக் கிடந்த அவலமெல்லாம், கண்ணீரில் கலந்து கரைந்தது. அழுது அழுது... விம்மி, விசும்பி... மெல்ல மெல்ல அடங்கினாள்...

''ம் ம் ம் மே ஹ ஹ ஏ... ஏ...''

எருமையின் விடாப்பிடியான கதறல், இவளை நச்சரித்தது. 'பாவம் வாயில்லாச் சீவன்' என்று பரிவோடு சிந்திக்க வைத்தது. தாய்மை ததும்பும் அவளின் பெண்மை உள்ளம், வாயில்லாச் சீவனின் பசியை நினைத்துப் பதைத்தது.

தாயை விழுங்கிய சாமியையும், தகப்பனைக் கையாலாகாத நிலையில் நிற்கவைத்த வாழ்க்கையையும் சபித்துக்கொண்டே எழுந்தாள். முகத்தைக் கழுவி, அழுந்தத் துடைத்துக்கொண்டாள். கலைந்து கிடந்த தலைமுடியைக் கோதி, ஒழுங்குபடுத்திக்கொண்டாள்.

கடாப் பெட்டியையும், பன்னரிவாளையும் எடுத்துக் கொண்டாள். வெளியே வந்து பார்த்தாள். மஞ்சள் வெயிலில் நிழல்கள் நீளமாய்ப் படுத்துக்கிடந்தன. பொழுது, மேற்கு மலையின் முதுகை உரசிக்கொண்டிருந்தது. மேகங்கள், காயம்பட்ட ரத்தக் கசிவோடு மிதந்தன.

கதவைச் சாத்தினாள், எருமையின் முதுகைத் தட்டிக் கொடுத்தாள். ராசாத்தியைப் பார்த்ததும் ஆவலோடு தறிய முறிய விழுந்தது, எருமை.

''பொறுத்துக்க... இன்னும் அஞ்சு நிமிசத்துலே ஒனக்குப் புல்லைக் கொண்ணாந்துருவேன்... பொறு பொறு...'' என்று சமாதானம் சொல்லிவிட்டுத் தெருவில் இறங்கினாள்.

நடுத்தெருவுக்குள் நுழைந்தாள். டீக்கடையில் டேப்ரிக்கார்டு, காதல் பாட்டுப் பாடிக்கொண்டிருந்தது- அப்போதுதான் வந்த டவுன் பஸ்ஸில் இறங்கி, புத்தம் புதிய கல்யாணத் தம்பதியோடு உறவினர் குழு ஒன்று இவளைக் கடந்தது.

மடத்துத் திண்ணையில் சிலர் உட்கார்ந்திருந்தனர். மாடசாமியும் குத்துக்கால் வைத்து உட்கார்ந்திருந்தான். கடாப் பெட்டியோடு வந்த இவளை, அவன் பார்த்தான்.

அவன் சும்மாதான் பார்த்தானோ... காரியமாய்ப் பார்த்தானோ... ஆனால், ராசாத்திக்கு, அவன் பார்வையில் ஏதோ அர்த்தம் தொனிப்பதுபோலிருந்தது. காரியமும் கபடமும் ஒளிந்திருப்பது

போலத் தோன்றியது. இரைக்காக ஒற்றைக் காலில் காத்து நிற்கிற கொக்கின் தாகம், அவன் கண்களுக்குள் பதுங்கியிருப்பதுபோல... இவளுக்குத் தோன்றியது.

மனத்துக்குள் படபடவென்று அடித்துக்கொண்டது. திகிலாகவும், திகைப்பாகவும் இருந்தது. பறவையின் இறக்கையைப்போல் துடித்தது, மனசு.

நாலு பக்கமும் ஆள் உயரத்திற்கு மேல், சோள நாற்றுப் புஞ்சை. சுவர்போல அடர்த்தியான நாற்று. நடுவில் பருத்திப் புஞ்சைகள். இங்கே கொலையே நடந்தாலும் வெளியே தெரியாது.

பொழிகளில் காடாய் வளர்ந்து கிடந்த அருகம் புல்லையும், மத்தாங்கப் புல்லையும் பரட்பரட்டென்று வேக வேகமாய் அறுத்துக் கொண்டிருந்தாள். உள்ளுக்குள் இனம் புரியாத பதைப்பு. பரபரப்பாய் அறுத்துப்போட்ட புல்லில் பெட்டி நிறைந்தது. இரு கைகளாலும் அமுக்கி அமுக்கி நிறையப் புல்லைத் திணித்தாள்.

மனசுக்குள் மர்மமான படபடப்பு...

மஞ்சள் வெயிலும் மறைந்துவிட்டது. மேகத்து வெளிச்சம் மட்டும் மிஞ்சி நின்றது. கருகருவென்று இருட்டு துரத்திக்கொண்டு வந்தது.

ராசாத்தி துரிதமானாள். விறுவிறுவென்று பெட்டியைத் தூக்கக் குனிந்தபோது-

உரசிக் கொண்டு பின்னால் யாரோ நிற்பது போன்ற, பதற்ற உணர்வு.

திரும்பிப்பார்த்தால்... மாடசாமி.

அவனது சூடான மூச்சு, இவளது தோளில் சுடுகிறது.

நிதானிப்பதற்குள்-

அவன், அவளைச் சுற்றித் தழுவிக் கொண்டான். முரட்டுத்தனமாய்ச் சேர்த்து, அணைத்தான்.

திமிறினாள். தப்பிக்க முயன்று போராடினாள். திமிறிய திமிறலில், அலம்பி மல்லாக்க விழுந்தாள்.

நுகர்ந்து அறிந்திராத ஆண் வாடை; தொட்டு உணர்ந்திராத ஆண்மையின் உஷ்ணம்; அனுபவித்தறியாத ஆணின் மூர்த்தண்ய

உணர்ச்சி... ஆற்று மணலை அள்ளி விழுங்குகிற புதுவெள்ளத்தின் வெறி வேகம்...

மலத்தை மிதித்துவிட்ட அருவெருப்பில் அவள் திமிறினாள்.

"டேய்... விடுடா... என்னை... விடுடா... ஐயோ... கேவலப் படுத்திடாதேடா... விடுடா..." என்று அலறிக்கொண்டே போராடினாள்.

"அங்க யார்டா அது?" என்ற வேற்றுச் சத்தத்தில், மாடசாமி ஸ்தம்பித்துப் போனான், பதறிப்போய் எழுந்தான்... அரை நிர்வாணமாய்- அலங்கோலமாய்- ராசாத்தி. உயிரையே அறுப்பதுபோல அவமானத்தில் துடித்தாள்.

பரபரவென்று துணியைச் சுற்றிக்கொண்டு எழுந்தாள். நனைந்த கோழிக் குஞ்சாக நடுங்கினாள்.

ஓட முயன்ற மாடசாமியை, வந்து சேர்ந்த மேலத்தெரு சின்னையா, திமிற விடாமல் பற்றி, இறுகப் பிடித்துக்கொண்டார். ராசாத்தி, தலையில் அடித்துக்கொண்டு அழுதாள்.

மாடசாமி அவரிடம் கெஞ்சி அழுதான். விட்டு விடும்படி காலில் விழுந்து அர்த்தமில்லாத வார்த்தைகளை மிழற்றினான். அவர் அவனை அதட்டலான குரலில் சத்தம் போட்டார்.

"ஏலேய்... ஒனக்கு ராசாத்தி வேணும்னுதானடா... இம்புட்டுத் தூரம் வந்தே? படுவா ராஸ்கல், பயப்படாதே. ஊர்க் கூட்டத்துலே உங்களைக் கொண்டுபோய் நிறுத்துறேன். ஊரறிய ராசாத்தியை ஏத்துக்கணும் நீ..."

உறுமினார். குற்றவாளியாய்த் தலைகுனிந்தான். அவரது மீசைக்கடியில் ஒரு பெருமிதப் புன்னகை.

"நீ என்னம்மா சொல்றே? ஒனக்குச் சம்மதமா?"

அவள் மௌனமாய் அழுதுகொண்டிருந்தாள். காயம்பட்ட ரணத்தோடு கதறிக்கொண்டிருந்த அவளுக்கு, அவரது அதட்டலான கேள்வி ஆறுதலாய் இருந்தது...

கல்லில் மோதிய கால் பெருவிரல், சுரீரென்று வலித்தது. ராசாத்தி பிரக்ஞையுற்று, காலைப் பார்த்தாள். நகத்தைச் சுற்றி மெல்லிய ரத்தக் கசிவு. வலி சுண்டி இழுத்தது.

இன்னும் மஞ்சள் வெயில்தான் அடிக்கிறது. இடுப்பில் வெற்றுக் கடாப்பெட்டியோடு நடுத்தெருவின் இறுதி நுனியைக் கடக்கிறபோது, திரும்பிப் பார்த்தாள்.

மடத்துத் திண்ணையில் குத்துக்கால் வைத்து உட்கார்ந்திருந்த மாடசாமி, எங்கோ பார்த்துக்கொண்டிருந்தான்.

கண்ட கனவில் மனசு கசந்து அழுறியது. வெட்கத்திலும், அவமானத்திலும் மனசு குன்றிக் குறுகித் தவித்தது.

'ச்சே... இந்தக் கொரங்கு மனசு, எம்புட்டு வெக்கங்கெட்டுப் போய் அலையுது' என்று தன் மனசைத் தானே சபித்துக்கொள்ளும் போது... அவளுக்குள் ஓர் ஆழ்ந்த வேதனை சூழ்ந்துகொண்டு... நெரித்தது.

–கல்கி. பிப்ரவரி. 1988.



# 11. நாற்றல்ல அவள்

புரட்டாசி மாதக் கடைசி. உப்பு மூலை மின்னிக் கொண்டிருந்தது. எல்லோரும் தூங்கட்டுமென்று காத்திருந்தமாதிரி, சாமத்துக்குமேல். மழை கொட்டத் தொடங்கியது. மேகமே நொறுங்கி விழுந்த மாதிரி... பேய் மழை பெருமழையாய்ச் சதப்பியது.

உழுது, பாத்தி கட்டி முடிந்த புஞ்சைக்காரர்களுக்கு, உறக்கம் போய்விட்டது. 'மிளகாய் நாற்று வளர்ந்து கிடக்கு. நடுவை முடிச்சாகணும். ஆளுங்க வேலைக்குக் கிடைக்கணுமே...'

பதைக்கிற மனசை, தூக்கம் எட்டிக்கூடப் பார்க்குமா? பசுங்கிளி, இருட்டைப் பார்த்துக்கொண்டு படுத்திருந்தாள். 'கொங்காணி' மடித்த சாக்கைத் தலையில் போட்டுக்கொண்டு, மழையோடு சல்லம்பட்டி, செந்தட்டியாபுரம் போய் வந்துவிட்டார், அய்யா.

''எட்டு ஆளுங்க வருதுகளாம்... நாளை மதியத்துக்குள்ளே நட்டு முடிக்கணும். அதுக்குப் பெறகும் பிந்துனா... ஈர மண்ணு இறுகிக்கிடும். நாத்தை வைச்சுக்கிட்டுப் பெருவிரலைப் பதிக்க முடியாது. விரல் நகம் 'விண்'ணென்று வலிக்கும்!''

விடிவதை எதிர்பார்த்துப் படுத்திருந்த பசுங்கிளிக்குப் பதைப்பு. முள்ளு மேலே படுத்திருக்கிற மாதிரி மனசெல்லாம் தவிப்பு...

கட்டுத் தரையில் நிற்கமாட்டாத கன்றைப்போல, அறுத்துக் கொண்டு ஓட ஆசைப்படுகிற மனசு. பசுங்கிளி எழுந்துவிட்டாள்.

முற்றம் தெளித்து, பாத்திரங்களைக் கழுவி, அடுப்பு வேலையைத் துவங்கிவிட்டாள். தம்பி முத்து தூங்கிக் கொண்டிருக்கிறான். வேலை முடியும்போது கிழக்கு வெளுத்துவிட்டது.

அய்யாவை எழுப்பினாள்.

''என்னம்மா?''

''நடுவைக்கு வர்ற ஆளுகளை அனுப்பி வையுங்க அய்யா... நான் நாத்து புடுங்கி வைக்கேன்!''

''இன்னும் இருட்டாயிருக்கேம்மா?''

''இருட்டு என்ன செய்யப் போவுது?''

''ஒத்தையிலேயா போறே?''

''இல்லே, முத்தம்மாவும் கூடவர்றா.''

கடாப்பெட்டிகள், கூடைகள், பழைய கிழிந்த துணிகளை எடுத்துக்கொண்டு கிளம்பிவிட்டாள்.

கனிந்த கறுப்பில் படுத்துக்கிடந்த நிலம். தாயக்கட்டம் போலச் சதுரம் சதுரமாய்க் கட்டிக்கிடந்த பாத்திகள். உழுது புதிதான மண். மினுமினுக்கிற ஈரம். வடமேற்கு மூலையில் நாற்றங்கால். பாத்திகளின் மூலையில் மழைத் தண்ணீர்.

பாத்தி வரப்புகளில் பசுங்கிளியும், முத்தம்மாவும் குத்துக்காலிட்டு உட்கார்ந்தனர். வேர் அறுந்து போகாமல், நாற்று பறித்து கைப்பிடி கைப்பிடியாக வைக்கின்றனர். பசுங்கிளி துரிதமாக இயங்கினாள். தோழியையும் துரிதப்படுத்தினாள்.

''நடுவைக்கு ஆள்க வந்துரும். வெருசா நாத்தைப் பிடுங்கு.''

''சும்மாவா உக்காந்துருக்கேன்? நாற்றைப் பிடுங்கிக்கிட்டுதானே இருக்கேன்? ஏண்டி வெரட்டுதே? இதான் கடைசி நடுவைன்னு வெரட்டுதீயாக்கும்?''

கேலிச் சிரிப்பாணியாய் 'களுக்'கென்றாள், முத்தம்மா.

''கடைசி நடுவையா, என்னடி பேசுதே?''

பசுங்கிளி முகம், கோபத்தில் சுண்டிப்போய்விட்டது.

அவ்வளவுதான், பசுங்கிளி மௌனத்தில் புதைந்து கொண்டாள். விசனத்தைக் காட்டுகிற மௌனம். 'உன் சங்காத்தம் வேண்டாம்' என்று முகம் திருப்பிக்கொள்கிற மௌனம். கிள்ளப்பட்ட மனத்தின் கோப மௌனம்.

முத்தம்மா, கஞ்சி குடிக்க வீடு போய்விட்டாள். விடுபட்ட காலடி நாற்றைக் கை பார்த்துக்கொண்டிருந்தாள் பசுங்கிளி.

முத்தம்மாவின் கேலி, பொய்யல்ல. வெள்ளாமைக்கான வேலைகளோடு கல்யாண வேலையும் கைவீசி நடக்கிறது. ஆவணி மாசமே நிச்சயமாகி, 'பூ' வைத்துவிட்டுப் போய்விட்டார்கள், மாப்பிள்ளை வீட்டார்.

கல்யாண வேலைகளையும் இழுத்துப் போட்டுக்கொண்டு, ஒற்றையாளாய் ஓடியாடுகிற அய்யாவை நினைத்து, உள்ளுக்குள் நெகிழ்ந்தாள்.

'கரையேத்த வழியைப் பாருங்க' என்று நச்சரிக்கிற அம்மா இல்லை. 'நாள் குறிச்சு வை. மத்ததுங்களுக்கு நாங்களாச்சு' என்று தைர்யம் கொடுக்கிற- கை கொடுக்கிற- சொந்தக்காரர்களும் இல்லை.

ஆனாலும் அய்யாவே அலைந்து, முயற்சிகள் செய்து, அததற்கு ஆட்களைப் பிடித்து... ஏற்பாடுகளைச் செய்து...

'அடடா... அய்யாவைப் போல ஒரு மனுசர் யாரு இருக்க முடியும்? இவருக்கு மகளாப் பொறக்க... நா எம்புட்டுக் குடுத்து வைச்சிருக்கணும்...!'

பிரசவத்தில் சிரமம் ஏற்பட்டு, வைத்தியம் பார்க்க வசதியில்லாமல் பொசுக்கென்று அம்மா போய்ச் சேர்ந்தபோது... பசுங்கிளி, பாவாடைகட்டிக் கொண்டு திரிந்த ஒன்பது வயது அரும்பு.

முத்து, கைப்பிள்ளை.

கண்ணு முழியாத சின்னக் குஞ்சுகளைக் காலடி நிழலில் வைத்துக்கொண்டு... அய்யா எம்புட்டுத் தவிச்சாரு! அடுப்பு வேலையும், காட்டு வேலையும் அவரது தோளில்தான். போதாக்குறைக்கு, கைக்குழந்தை வேறு... காலைப் பின்னிக் கொள்ளும்...

மறு கல்யாணம் செய்து கொள்ளும்படி, யார் யாரோ பெரிய ஆட்களெல்லாம் பொடிவைத்து, மந்திரம் ஓதிப் பார்த்தனர்.

"இந்தச் சின்னஞ்சிறுசுகளை வளர்த்து ஆளாக்கினா... அதுவே போதும். எனக்குக் கல்யாணமும் வேண்டாம்; ஒரு கருமாதியும் வேண்டாம்."

பிள்ளைகளிடம் பூவாக நடந்துகொள்கிற அய்யா, இந்த விஷயத்தில் மட்டும் இரும்பாக இருந்துவிட்டார். ரெண்டு வருஷம் அடுப்புப் புகையோடு மல்லுக்கட்டி, அல்லாடித் தவித்துப் போனார், பாவம்!

முத்துவைத் தூக்கிச் சுமந்து கொண்டிருந்த பசுங்கிளி, அடுப்பு வேலைக்குத் தயாராகி... வீட்டு வேலைக்குக் கை பழகிய பிறகுதான்... வீடு, வீடாயிற்று. குப்பையும் கூளமுமாய்க் கூகை அடைந்த வீடு மாதிரி கிடந்த அந்த வீடு, சுத்தமாகி, சுண்ணாம்பு பார்த்து, மனுஷ மக்கள் குடியிருக்கிற வீடாக மாறியது.

நல்ல நாட்களுக்கு, இந்த வீட்டிலும் பலகாரம் மணந்தது.

அய்யா மட்டும் கொஞ்சம் சபலப்பட்டிருந்தா என்னாகியிருக்கும்? அக்காளும், தம்பியும் எம்புட்டுச் சீரழிவுக்கு ஆளாகியிருக்கணும்? நெனைச்சாலே... நடுங்கிப்போகுது, மனசு.

ஒரு நாற்றுப் பெட்டியை 'முக்கித் தக்கி'த் தூக்கினாள். புஞ்சையின் 'மாரி மூலை'யில், வேப்ப மரத்தடியில் வைத்தாள். முதல் நடுவை இங்குதான் துவங்கணும்.

கொழை மூடிக் கிடந்த அந்த இடத்தில், சின்னக் கன்றாக மறைந்து கிடந்த வேம்பைப் பசுங்கிளிதான் பார்த்தாள். கொழைகளைச் செதுக்கி, கன்றுக்கு வேலியமைத்து... கண்ணுங்கருத்துமாய் வளர்த்தாள்.

இதில் துரட்டிப் போட்டுக் கொழையை இழுத்த, எத்தனை ஆட்டுக்காரர்களிடம் சண்டை போட்டிருக்கிறாள்... திட்டி விரட்டியிருக்கிறாள். இவளும் வசவுகளை வாங்கியிருக்கிறாள்.

இப்போது... நல்ல மரமாக வளர்ந்துவிட்டது. நாலா பக்கமும் சமமாய்க் கிளைகள் நீண்டு, இலைகள் அடர்ந்து... என்ன அம்சமாய்க் குடை விரித்து நிற்கிறது!

இந்த மரத்தின் பூ வாசனை... இவளுக்குத் தனியாக மணக்கும். மற்ற வேப்ப மரங்களின் பூ வாசனைகளிலிருந்து, இந்த மரத்துப் பூ வாசனையைத் துல்லியமாய் வித்தியாசப்படுத்தி நுகர்ந்துவிடத் தெரியும், இவளது நாசிகளுக்கு! அம்புட்டு நெருக்கமான பிணைப்பு அவளுக்கு, இந்த மரத்துடன்!

புஞ்சையின் நடு வாய்க்காலில் நடந்தாள். பாதம் முழுவதும் ஈரமண்ணுக்குள் சுகமாய்ப் புதைந்தது. கால் விரல்களுக்கிடையே சகதி பிதுங்கியது. இந்த மண்ணின் ஈரச் சகதியில் மிதிக்கிறபோது... தாய் மடியில் முகம் புதைக்கிற சந்தோஷம்... அரைத் தூக்கத்திலிருக்கும்போது அம்மாவின் கை, தலையைக் கோதிவிடுகிற இன்பப் புல்லரிப்பு...

'வியர்வையை வாங்கிக்கிட்டு இந்த மண்ணு, எம்புட்டு விளைச்சலை வாரி வாரிக் குடுத்திருக்கு... இந்த மண், அம்மாவைப் போலப் பாசக்காரிதான்.'

காத்துக் கிடக்கிற வேலைகள், இவளது காலுக்குச் சக்கரம் கட்ட... துரிதமானாள்... வீடு வந்தாள்.

இவள் காலடிச் சப்தம் கேட்டதுமே... ஆசையோடு தடபுடவென்று எழுந்தது, எருமை மாடு. 'ம்ம்மேஏஏ...க்' என்று அடிக்குரலில் கதறிப் பாசத்தைப் பொழிந்தது.

அறுபத்தைந்து ரூபாய்க்குக் கன்றுக்குட்டியாக அய்யா பிடித்து வந்தது, இவளது அக்கறையில் வளர்ந்து, நாலு ஈத்து ஈன்று, ஐந்தாவதைச் சுமந்து நிற்கிறது.

''எக்கா, சோறு வை.'' முத்துவின் குரல்தான் அவள் பார்வையைக் கலைத்தது. திரும்பினாள்.

"பல்லு தேய்ச்சிட்டியாடா?"

"எருமை மாடு பல் தேய்ச்சுதான்னு கேட்டீயா?"

"ஏலேய்..." கோபித்த பசுங்கிளியைப் பார்த்துக் குறும்பாகச் சிரித்தான். சிரிப்பே பதிலாக இருந்தது. பளிச்சிட்ட பற்கள்.

வட்டில் முன் உட்கார்ந்தான் முத்து. இவளும் கஞ்சியை ஊற்றிக் கொண்டாள். சாப்பிடுகிற தம்பியை, ஆசையோடு பார்த்தாள்.

அம்மாவின் அதே அச்சு. அம்மாவுக்கும் இப்படித்தான். சிரித்தால் உதட்டில் ஒரு வளைவு தெரியும். கன்னத்தில் குழி விழும்.

தவிக்கவிட்டுப் 'போய்' விட்ட அம்மாவே, எதிரில் உட்கார்ந்து சாப்பிடுவதுபோல... ஒருகண உணர்வு! அவளுக்குள் என்னவோ செய்தது. பகீரென்று மோதிய ஒரு சூன்யம். கண்ணுக்குள் முட்டிய நீரை, மனசு அப்படியே விழுங்கிக்கொண்டது.

சுவரின் கீழ் மூலையில் 'ங்ங்யிய்ய்'யென்று இரைகிற சில்வண்டு. சில்வண்டுக்கும் ஆயுசு மனுஷங்களைப் போலத்தானோ! இவளும் சின்ன வயசிலிருந்து கேட்டுக்கொண்டிருக்கிறாள், இந்தச் சில்வண்டு இரைச்சலை. அதே சில்வண்டு... அதே சப்தம்... உணர்வுகளின் ஆழத்திலே பழகிப்போன இரைச்சல்.

பைக்கட்டை எடுத்துக்கொண்டு, "நான் பள்ளிக்கூடம் போறேன்க்கா" என்று சத்தத்துடன் ஓடிவிட்டான் முத்து. சாப்பிட்ட இடத்தைப் பெருக்கி முடித்துவிட்டு நிமிர்ந்தால்... அய்யா நின்றார்.

"நாத்து பிடுங்கிட்டியாம்மா? நீ புஞ்சைக்குப் போ. நடுவைக்கு எழு ஆளுக வருது. வெள்ளனத்துலே நடுவையைத் துவக்கு."

"நான் உங்களுக்குச் சோறு வைச்சிக் குடுத்துட்டுப் போறேன் அய்யா."

"வேண்டாம். நீ வெருசா போ. நான் சாப்பிட்டுக்கிடுதேன்!"

அய்யா முகத்தைத் தயக்கமாய்ப் பார்த்தாள். 'அவரே பானையை உருட்டிச் சட்டியை உருட்டி... சோறு வைக்க, நான் சம்மதிப்பதா...?'

மனத்தைத் தட்டியடக்கிக் கொண்டாள். அய்யா பார்க்காத அடுப்பங்கரையா...!

பாய்ச்சலாய் நடையை எட்டிப் போட்டுப் புஞ்சைக்கு வந்தாள். நடுவைக்குப் பெண்கள் வந்திருந்தனர். மாரி மூலைக்கு ஓடிவந்தாள்.

நடுவை தொடங்கியது. முத்தம்மாவும் வந்து சேர்ந்தாள். வேலை 'மளமள'வென்று நடந்தது...

நாளும் பொழுதும் நாலாவித உணர்வுகளைப் பதிவு செய்துவிட்டு, நாட்களாய் நகர்கிற வாழ்க்கை. ஐப்பசி பிறந்து... கல்யாண வேலைகள் சிறகு கட்டிப் பறந்தன. பரபரப்பாய் ஆடி ஓடித் திரிகிற அலைச்சல்கள். உஸ்ஸென்று உட்கார நேரமில்லாமல் பறக்க வைத்த வேலைகள்.

தூர்ந்து போன சொந்தங்கள் யாவும், மீண்டும் அரும்பி... கல்யாணத்தில் கூட, வெள்ளையும் சொள்ளையுமாய்- வெளிச்சமும் வர்ணமுமாய் வீடு நிறைந்து ததும்பிய ஆண்கள், பெண்கள்... உறவினர்கள்... குழந்தைகள்...

என்றைக்குமே இவள் பார்த்தறியாத கோலத்தில், அய்யா வெள்ளை வேட்டியும், வெள்ளை சட்டையுமாய்... பார்க்கப் பார்க்கப் பசுங்கிளிக்குச் சந்தோஷம். மனசுக்குள் பூத்துச் சிரிக்கிற பூக்காடு...

புது டவுசரும், சட்டையும் போட்டுக்கொண்டு, மகிழ்ச்சி நதியாய், உற்சாக வெள்ளமாய்த் துள்ளித் திரிந்த தம்பியைப் பார்த்துப் பார்த்து... இவளுக்குக் கண்ணெல்லாம் நிறைந்தது. ததும்பி வழிந்தது, மனசு.

கல்யாணம் நடந்து முடிந்தது. மறுநாள், கணவன் அவள் மனசெல்லாம் நிறைந்துவிட்டான்; நினைத்த கணமெல்லாம் மனதைச் சிலிர்க்க வைத்துவிடுகிறான்.

அறிமுகமில்லாத அந்த அந்நியன், ஒரே இரவில் மனசுக்கு எவ்வளவு நெருங்கிவிட்டான்! தனிமையில் இவளுடன் கலந்து... என்னென்னவோ பேசி, எதையெதையோ நினைக்கவைத்து, எங்கெங்கோ தொட்டு, பார்த்தறியாத உலகங்களையெல்லாம் புரியவைத்து... ஆன்மாவையே கவ்வி ஆக்கிரமித்துவிட்டான், அதிசயம்தான்!

மூன்று நாட்களும் மாப்பிள்ளைச் சோறு. விருந்து தடபுடலாக நடந்தது. பசுங்கிளி அனுபவித்தறியாத உயரத்தில் சிறகடித்தாள். இன்பத் துள்ளலோடு மேகங்களுக்குள் ஊடுருவிப் பறந்தாள்.

அடுப்பங்கரையில் எந்நேரமும் பலகார வாசங்கள். குளிப்பும், புதுச்சேலையுமாய்... மஞ்சளும், மங்கலமுமாய் இன்ப நதியாக நடக்கிற பசுங்கிளி. அவளது சிவந்த முகம்... தங்கமாய் ஜொலிக்கிறது.

மூன்றாவது நாள், மாலை.

புருஷனின் அண்ணனும், அக்காளும் வந்துசேர்ந்தனர். இவளும் சந்தோஷமாய் வரவேற்றாள். ஆக்கி, அவித்துப் போட்டு உபசரித்தாள். புருஷனுக்கு வேண்டியவர்கள் என்ற அன்பில், மதிப்போடு பேசிப் பழகினாள்.

இரவுச் சாப்பாடு முடிந்து, கை கழுவி முடித்தவுடன், "காலையிலே பசுங்கிளியையும், தம்பியையும் கூட்டிக்கிட்டுப் போறோம். அதுக்கான ஏற்பாடுகளைச் செய்யுங்க, மாமா" என்றனர்.

தொண்டைக்குள் விக்கிக்கொண்டதைப்போல, 'விலுக், விலுக்'கென விழித்தார், அய்யா. "ம்,ம்... பார்ப்போம்" என்று முனகிவிட்டு, முகத்தை மறைக்க வெளியே போய்விட்டார்.

பசுங்கிளிக்குப் பகீரென்றது. உள்ளுக்குள் மோதித் தள்ளிய ஒரு சூன்ய உணர்ச்சி.

கூட்டிட்டுப் போகவா... புகுந்த வீட்டுக்கா...? நிரந்தரமாகவா...?

பகைமை நிறைந்த வெறுப்பும், வேதனையும் மனசுக்குள் குப்பென்று மூண்டெழுகிறது. புருஷனின் உறவுக் காரர்களே-பகையாளிகளாய்- சிறகுகளைப் பிய்த்தெறிகிற எதிரிகளாய்-

உடம்பெல்லாம் தீயாய்த் தகித்தது, அவளுக்கு. மனசுக்குள் பொங்கிப் பொருமிய வெறுப்பை மறைத்துக்கொள்ள, வீட்டுக்குள் மறைந்தாள் பசுங்கிளி.

சில்வண்டு இரைகிறது. இவளுக்காக ஏங்கி அழுவதைப்போல இடைவிடாத 'ங்ங்ஙிய்ய்ய்' என்ற இரைச்சல்...

இந்தச் சில்வண்டின் இரைச்சலை, நாளை முதல் கேட்கவே முடியாதா?

பாதத்தின் சப்தத்திலேயே இனம் கண்டு பாசத்தோடு பார்க்கிற அந்த எருமை மாட்டின் அன்புக் கதறல்... தொலையாத தூரத்தில் போய்விடுமா?

தாயின் மடியாகக் சுகம் தருகிற பச்சை மண், இனி தொடமுடியாத அந்நியமா?

பிள்ளையாய்க் கருதிப் பேணி வளர்த்த, அந்த வேப்ப மரத்தின் பூ மணம்கூட, நுகரமுடியாத தொலைவிலா?

நினைக்க நினைக்க இருட்டாகச் சூழ்கிற ஏக்கம். பிரிவுத்துயர் நெஞ்சை மடேரென்று தாக்கி, அதிரச் செய்கிறது. நிலைகுலைந்து நிற்கிறாள். திணறித் தவித்த உணர்ச்சிகளால், அலைக்கழிக்கிற மனசு.

சகலத்தையும் பறிகொடுக்கிற உணர்வுப் பரிதவிப்பில்... மனசே துவண்டது.

'முத்துவை இனி யாரு பார்த்துக்கொள்வது? அவனுக்கு நேரமறிஞ்சு, மனசறிஞ்சு யாரு சோறு வைச்சுக் கொடுப்பது? உழைத்துத் தளர்ந்துபோன அய்யா. மறுபடியும் அடுப்பங்கரைப் புகையில் அல்லாடணுமா?

'அவருக்கு ஒரு காய்ச்சல், தலைவலின்னா... யாரு பார்த்துக்கிறது? நாதியத்த அனாதையாய்த் தவிக்கவிட வா? பொம்பளைப் புள்ளையைப் பெத்து வளர்த்து, ஆளாக்கின பாவத்துக்கு... இது தண்டனையா?'

பசுங்கிளிக்குக் கதறியழவேண்டும் போலிருந்தது. அடிவயிற்றில் எதுவோ புரண்டது. இதயத்தின் சதைகளையே யாரோ அறுத்து, நரம்புகளைப் பிய்த்தெறிகிற திகிலுணர்வு...

நாற்று, நாற்றங்காலை மறந்து புதிய மண்ணில் சில நாட்களில் துளிர்க்கத் துவங்கிவிடும். நாற்று மனுஷியல்லவே! அதுக்கு மனசு இல்லையே...? உறவுகளை வளர்த்து, அதிலேயே உறைந்து கொள்கிற உணர்வுகள் இல்லையே...?

'கூட்டிக்கிட்டுப் போக வரல்லே, இவக. பிய்ச்சுக்கிட்டுப் போக வந்திருக்காங்க. பாவிக. உடம்புலேயிருந்து கையை மட்டும் வெட்டிக்கிட்டுப் போறமாதிரி!'

கல்யாண பந்தத்திற்காக எதையும் இழக்காமல், ஆண் கூடுதல் சுகத்தையும், உறவையும் பெற்றுத் திளைக்க, பெண் மட்டும் எவ்வளவு இழக்க வேண்டியிருக்கிறது! ஆன்மாவையே அறுத்துக் காயப்படுத்துகிற இழப்புகள்... துடித்தலற வைக்கிற கொடிய இழப்புகள்...

இந்த இழப்புக்களின் வேதனையே பிறந்த வீட்டுப் பாசத்துக்கும், புருஷனின் உறவுக்காரர்கள் மீது வெறுப்புக்கும் நிரந்தர ஊற்றுக்கண்ணாகிவிடுகிறதா?

தப்பிக்க முடியாத குழிக்குள், கதியற்று விழுந்துவிட்ட அவலத்தை நினைத்து நினைத்துப் பசுங்கிளி அழுதாள்... பெண்ணாக ஜென்மமெடுத்ததை எண்ணி, அவள் மனசு கசந்து அழறியது.

மறுநாள்-

அந்த வீடு, கண்ணீரும் கம்பலையுமாய்... காயம்படும்!

-கல்கி. தீபாவளி மலர். 1987.



# 12. காதல் போயின்...

வீட்டு முற்றத்தில் சைக்கிளை நிறுத்தி துடைத்துக் கொண்டிருந்த சந்தானத்துக்கு, தேங்காயெண்ணெய் வேண்டும். இரண்டு தடவை கூப்பிட்டும் எட்டிக்கூடப் பார்க்காத லட்சுமியை நினைக்க நினைக்க எரிச்சல்.

'ச்சே...! இவளோட பெரிய தொல்லையாப் போச்சு. 'கூப்புட்டோம், வந்தோம்'னு இருக்கமாட்டா. மசமசன்னு அசமந்தம் பிடிச்சுப்போய். இவா பிறவியே இப்படியாகிப் போச்சு. எருமை மாட்டுப் பிறவி.'

பொறுமையிழந்து போன மனசுக்குள், முணுமுணுப்பாகத் திட்டிக்கொண்டே மூன்றாவது தடவையாக கோபக் கத்தலாய்க் கத்தினான். "ஏய்...லட்சுமீ..."

"என்ன?"- அசரீரியாக மனைவியின் எதிரொலி. பதற்றமில்லாத "என்ன?"; அசிரத்தையான "என்ன?"; மழை கொட்டினாலும் அசைந்து கொடுக்காத மந்தமான எருமையின் "என்ன?".

நினைத்தாலே சந்தானத்துக்கு தீயாய்ப் பற்றிக்கொண்டு வந்தது. என்ன என்ற அசரீரிக்குப் பிறகு, சில நிமிஷங்கள் கழித்தே லட்சுமியின் உருவம் நிதானமாக வாசலில் தெரிந்தது.

எரிந்து விழுவதற்காக நிமிர்ந்த சந்தானம், உணர்ச்சியின் வாலைச் சுருட்டிக் கொண்டான். வாயைச் சப்புக் கொட்டிக் கொண்டான்.

"அந்தத் தேங்காயெண்ணெய் பாட்டிலை எடுத்துட்டு வா."

சங்கடத்துடன் வேலை செய்கிற கடுப்பும், எரிச்சலும் அவள் முகத்தில். உதடுகளில் மெல்லிய சுளிப்பு. சந்தானம் நிர்ப்பந்தமாய் சாந்தமாக வேண்டிய அவலம்.

பொங்கிப் பெருகிய ஆத்திர உணர்ச்சி, சீறி வெளிப்பட வழியற்று, உள்ளுக்குள் இறங்கியபோது... மனசின் சகல விளிம்புகளையும் தகித்துக்கொண்டே பரவியது. வாழ்க்கையே அநியாயமாகப் பலியாகிவிட்டது. சுரணையற்ற ஒரு ஜென்மத்துக்குப் புருஷனாகி... மனப்புழுக்கத்துடன் மாரடிக்கிற பிழைப்பாகிவிட்டது.

தாம்பத்யம் இந்த லட்சணத்துலேயே பத்து வருஷம் ஓடிப்போச்சு. இரண்டு பிள்ளைகளையும் பெற்றாகி விட்டது. சே!

ஒரு யுகத்துக்குப் பிறகு வந்து சேர்ந்தது, தேங்காய் எண்ணெய். பேச்சில்லை, மூச்சில்லை.

"ச்சே, சுரணைகெட்ட சோம்பேறி... எருமை ஜென்மம்."

உள்ளுக்குள் திரும்பிய லட்சுமி, புருஷனின் அனல் முணு முணுப்பைக் கேட்டாள். மனசைச் சுடுகிற வசவுகள். மனசில் வடுவாகிவிட்ட புண்ணைச் சுடுகிற வசவுகள். தன் கனவுகளை யெல்லாம்- வசந்தத்தையெல்லாம்- அள்ளி விழுங்கிப் புதைத்துக் கொண்ட சமாதியின் வசவுகள்.

மனசுக்குள் ஊசி குத்திப் பிடுங்கியதைப்போல வலி. இமைகளை நெறித்துக்கொண்டு பிதுங்கி வழிகிற கண்ணீர். அழக்கூட உரிமையற்றுப்போன ஆன்மா. அடிபட்ட வேதனையில் வடிக்கிற ஊமைக்கண்ணீர். அடுப்பங்கரைக்குள் லட்சுமி வந்து விழுந்தாள். அடுப்புக்கு வெளியே வந்திருந்த நெருப்பை, உள்ளே தள்ளி விட்டாள். சோறு கொதிக்கிற சள சள சத்தம். அறைக்குள் முட்டி மோதுகிற புகை மூட்டம். முக்காலியில் உட்கார்ந்திருந்த லட்சுமி, மன அயர்ச்சியோடு சுவரில் சாய்ந்தாள். கன்னத்தில் வழிகிற கண்ணீரைக் கூட துடைக்க மனமில்லை. மனசெல்லாம் எங்கோ... தூரத்தில்... காலத்தை விழுங்கிய தூரத்தில்... மனசுக்குள் முட்டி மோதுகிற நினைவு மூட்டங்கள்...

அது தைமாதம். நெல் அறுவடை நடக்கிற காலம். செல்வராஜ்தான் கொத்தன். அறுவடைக்கான கூலி பேசுவது, வாங்குவது எல்லாம் இவன் பாடுதான். ஆணும் பெண்ணுமாய் சில ஆள்களைச் சேர்த்துக் கொண்டு வேலையை முடித்துக் கொடுப்பது- வாங்கிய கூலியைப் பகிர்ந்து தருவது எல்லாம் இவன் பொறுப்பு.

இவனும் சமமாக வேலை செய்வான். வேலைக்கொரு பங்கு. கொத்தன் என்பதால், அதற்குத் தனியாக ஒரு பங்கு.

காலை நாலு மணிக்கெல்லாம் வயக்காடு புறப்பட்டுவிடணும். அறுப்பை துவக்கினால், ஏழு மணிக்கெல்லாம் முடித்துவிடணும். அப்புறம்தான் சாப்பாடு. பிறகு களத்துக்குச் சுமப்பது, கதிரடிப்பது- ஒதுக்குவது என்று, வேலை இரவு ஏழு மணிவரை நீளும்.

முதல் நாள் அறுப்பிலேயே, பதினெட்டு வயசு லட்சுமி எல்லோரையும் முந்திக்கொண்டு போனாள். புயல் வேகச் சுறுசுறுப்பு. இடது கையால் தாளைப் பிடிப்பதுவும்- வலதுகை அரிவாளால்

அறுப்பதுவும், கண்ணால் பார்க்கவே முடியவில்லை. அத்தனை வேகம்.

கொத்தன் செல்வராஜ், கொஞ்ச நேரம் அவளுடன் போட்டி போட்டுப் பார்த்தான், ரகசியமாக. ஊஹூம்... முடியவில்லை. கௌரவமாய் தோல்வியை உணர்ந்து ஒதுங்கிக்கொண்டான். லட்சுமி அறுப்பு வேகத்தில் காட்டிய தீவிரம், இவனை அசத்திவிட்டது.

இவன் மனதில் அவளது வேர்கள்...

மறுநாளிலிருந்து காலை 4 மணிக்கு லட்சுமியை முதல் ஆளாக எழுப்பிவிடுவதே இவன்தான். கதவைத் தட்டினால் லட்சுமியின் அம்மாதான் "யாரது?" என்பாள்.

"என்ன அத்தை, நாந்தான். லட்சமியை எழுப்பி விடுங்க."

லட்சுமி இல்லாவிட்டால் அறுப்பு வேலையே நடக்காது என்று பயப்படுகிற அளவுக்குப் பிரமித்தான். ஒருநாள்-

காலை ஏழு மணிக்கு மேலாகிவிட்டது. வேர்க்க விறுவிறுக்க அறுத்துக் கொண்டிருந்த லட்சுமி, தனது நிரையை எல்லோருக்கும் முந்தி அறுத்து முடித்துவிட்டு, முதல் ஆளாகச் சாப்பிடப் புறப்பட்டாள். தூக்குச் சட்டிகள் வைத்திருந்த இடத்துக்கு வந்தாள்.

தன் சட்டி என்று நினைத்துத் திறந்தாள். சோறு கெட்டுப் போயிருந்தது.

கொதிக்கக் கொதிக்க உள்ளே சோறு வைத்து மூடியிருக்கிறார்கள். புழுங்கி வியர்த்துக் கொட்டியிருந்தது. சாப்பிட ஆகாது. சாப்பிட்டால் 'வாயாலே, வயித்தாலே' போகும். அதாவது வாந்தி பேதி.

சட்டியைத் திறந்தபிறகுதான், அது கொத்தன் தூக்குச்சட்டி என்று தெரிந்தது. பாவம், தாயில்லாதவன், இவனோட அய்யாதான் சமையல். அவர் ஆக்கிவைத்த சோறுதான். பசியோடு ராத்திரி வரைக்கும் ஒரு மனுசனாலே எப்படி வேலை செய்ய முடியும்?

தாய்மைத் தன்மையுள்ள பெண்மை உணர்ச்சி. இரக்கத்தில் நனைந்து மனசே சங்கடப்பட்டது. வேறு எதையும் சிந்திக்கவில்லை. அவன் சோற்றைக் கீழே கொட்டிவிட்டு, தனது சோற்றில் பாதியை அந்தச் சட்டிக்குள் வைத்து மூடினாள். மீதிச் சோற்றைக் கரைத்துக் குடித்துவிட்டுப் புறப்பட்டாள். எல்லோரும் சாப்பிட கூட்டமாய் வந்தனர்.

''அதுக்குள்ள சாப்பிட்டாச்சா...? துடியானவதான்டி நீ.''

இவள் தலையாட்டினாள். இவளைக் கடந்து பின்சென்ற அவர்களின் இரைச்சல். கேலியும் கிண்டலுமாய் சிரிப்புச் சத்தங்கள். கோபமாய்க் கத்துகிற சத்தங்கள். கோபத்தைப் பொருட்படுத்தாமல், சீண்டி விளையாடுகிற இளமைச் சத்தங்கள்.

எல்லோரையும் சாப்பிட அனுப்பிவிட்டு, கடைசியில் வந்த கொத்தனை, பொழியில் எதிர்கெண்டாள் லட்சுமி. மனசுக்குள் தயக்கம். என்ன சொல்வானோ... எப்படி நினைப்பானோ...

''உங்க சோறு வேர்த்துப் போச்சு.'' கூச்சத்தில் தலை தாழ்த்திக் கொண்டாள்.

''சாப்புட ஆகாதா?''

''சாப்புட்டா... வாயாலே... வயித்தாலே போகும். அதான் கீழே கொட்டிட்டேன்.''

''ஐயய்யோ! எனக்கு?''

''ஏஞ் சோத்துலே பாதியை உங்க சட்டியிலே வைச்சிருக்கேன்.''

''ஒனக்கு?''

''சாப்பிட்டுட்டேன்.''

அதற்குமேல் அவளால் நிற்க முடியவில்லை. அறுத்துப் போட்டதை, அரித்துக் கட்டுவதற்குப் போய்விட்டாள்.

செல்வராஜ், அப்படியே நெக்குருகிப் போய்விட்டான்.

பசியறிந்து சோறு தருகிற- முகம் பார்த்து ஆறுதல் சொல்கிற- ருசியறிந்து பதறிப் பதைத்து தயார் செய்து பரிமாறுகிற அம்மாவை- இவன் பார்த்ததில்லை. தாய்மையின் பாசத்தை- பரிவை- இவன் அனுபவித்ததேயில்லை. தாய்மை ததும்புகிற இந்தப் பெண்மையின் மிருதுவான காரியம், அவன் நெஞ்சின் ஆழத்தைத் தாக்கி உலுக்கிவிட்டது.

அக்கறைக்குரியதாகப்பட்ட இதயத்தில், இந்த உணர்ச்சிதான் வருமா? அன்பு செலுத்தப்பட்டவனின் மனசு, இப்படித்தான் நெகிழ்ந்துபோகுமா? மனசையே நனைத்து ஈரப்படுத்தி- குழைத்துவிட்ட இந்தச் சின்ன விஷயம், அவனைத் திக்குமுக்காடச் செய்தது.

கோடையில் பெருமழையைக் கண்ட மானாவாரிச் சம்சாரியைப் போல, ஆச்சரியத்தில் தவித்தான். ஆனந்த நதியின் மோதலில் திகைத்தான்.

தன்வசம் இழந்துவிட்டான்.

அவளது சுறுசுறுப்பான உழைப்பைக் கண்டு பிரமித்திருந்த அவன், இயல்பான தாய்மையன்பு செலுத்த முடிகிற இந்தக் கனிந்த இதயத்தை தொட்டுணர்ந்த அனுபவத்தில்... இனம் புரியாத மர்ம உணர்ச்சிகளுக்கு ஆளாகிவிட்டான். கனவுகள், அவன் அனுமதியில்லாமலேயே பூத்துச் சிரித்தன.

அன்று அவன் நன்றியோடு பார்த்த ஈரப்பார்வையை, லட்சுமி பெருமிதமாய் ஏற்றுக்கொண்டு கூச்சமாய் சிரித்தாள். அதுவே மோகப் பார்வையாக பரிணமித்தது... அந்தப் பங்குனியிலேயே இந்தப் பண்ணைக்காரர் புதிதாக டிராக்டர் வாங்க, டிரைவராகி விட்டான். அது மட்டுமல்ல, விவசாயம் முழுவதையும் கவனித்துக்கொள்கிற மேற்பார்வையாளனாக - நம்பிக்கைக்குரியவனாக ஆகிவிட்டான்.

இப்போதெல்லாம்...

இவர்கள் கண்களுக்கு பாஷை பேசுவது இயல்பாகிவிட்டது. வாய்பேசிய வார்த்தைகள் காற்றில் கரைந்துவிட, உணர்வுகள் மட்டுமே மனசில் உரைகின்றன.

லட்சுமியின் நடையில், புதிதாகத் தெரிகிற துள்ளல். சேலை கட்டுவதில் தனிக் கவனம். ஜாக்கெட் எடுத்துப் போடுவதில், கலர் பொருத்தம் கண்டுபிடிப்பதற்குள் திணறிப்போகிறாள். கண்களில் நிரந்தரமாக ஜொலிக்கிற மின்னல். கனவுகளைக் குழைத்துப் பூசியது போல முகத்தில் இன்ப மலர்ச்சி. பருவக்கிளர்ச்சியின் ஆர்ப்பரிக்கிற அலைகள் உறைந்து உருப்பெற்றதுபோல, உடம்பெல்லாம் ஒரு மெருகு, மிருதுவான ஒரு புதிய வெளிச்சம்.

இரவுகளில் நெஞ்சுக்குள் வந்து, லட்சுமியின் உறக்கத்தைப் பறித்துக் கொள்கிற செல்வராஜ். டிராக்டரை ஓட்டுகிறபோதே அவன் நினைவுகளை எங்கோ இழுத்தடித்து விளையாடுகிற லட்சுமி. தண்ணீர் எடுக்க வரும் லட்சுமியோடு புன்னகை பாஷையில் பேசிக்கொள்வதற்காகவே, மாலைகளில் மடத்துத் திண்ணையில் தவம்கிடக்கிற செல்வராஜ். இவனை நேரில் பார்த்து, நாலு வார்த்தைகள் பேசி, உணர்வுகளைப் பரிமாறிக் கொள்கிற தவிப்புக்காகவே... இவன் வேலை செய்கிற பண்ணைக்கு பதிவாக வேலைக்கு வருவது என்று ஆக்கிக்கொண்ட லட்சுமி.

அப்படிப் பார்த்து, பேசிச் சிரித்து, மனம் மயங்குகிற இன்பக் கணத்தில், உலகமே ஒரு பொய்யாகத் தோன்றி புகையாகக் கலைய, இவர்கள் மட்டுமே இவர்களது உலகமாய்த் தோன்றுகிற வினோதப் பிரேமை...

பார்க்காத நிமிஷங்கள் யுகங்களாகக் கனத்து, மனசை வதைக்கிறது. ஸ்பரிசித்து பேசிய நிமிஷங்கள், யுகங்களைத் தாண்டி நீடித்து நிலைக்கிற இன்ப உணர்ச்சியாக மனசுக்குள் தோன்றி, மீண்டும் மீண்டும் அந்தச் சந்திப்புக்காக ஏங்கி ஏங்கித் துடிக்கிற இளமை இதயங்கள்...

லட்சுமிக்குள் பரபரப்பு. காந்த இழுப்புக்கு ஆட்பட்ட இளமைத் துடிதுடிப்பு. அவசர அவசரமாய் சடையைப் பின்னிப் பின்னுக்குத் தூக்கி வீசினாள். பின்பக்கமாய் கையை நீட்டி, சடையை லேசாக இழுத்து முதுகோடு படியவைத்தாள்.

ஹேர் பின்களை எடுத்து, மயிர்க் கற்றைகளில் திணித்து சரி செய்தாள். முகத்தைக் கழுவி, உள் பாவாடை நுனியால் அழுந்தத் துடைத்தாள். ஈரத்துணியில் சுற்றி வைத்திருந்த பூவை எடுத்து க்ச்சிதமாக வைத்தாள். கையகலக் கண்ணாடியில் உற்று உற்றுப் பார்த்து பொட்டு வைத்துக் கொண்டு, உதட்டைப் பல்லால் கடித்து ஒரு ஈரக்கனிவை வரவழைத்தாள்.

''எம்மா, சோறு வைச்சிட்டியா?''- கூப்பாடு போட்டாள்.

''என்னடி, இப்படிப் பறக்கே? விடிஞ்சும் விடியாம் இந்தப் பறப்பா?''

''வேலைக்குப் போகணுமா, வேண்டாமா?''

''போனாலும்... இந்தக் கூத்தா? எதுக்குத்தான் இப்படித் துள்ளுறே?''

''அப்பச் சரி... நா வேலைக்குப் போகலே.''

''இப்ப நா என்ன சொல்லிட்டேன்? கோவிச்சுக்கிட்டே. ரொம்பத் துள்ளாதேடி. துள்ளுற மாடு பொதி சுமக்கும்.''

''துள்ளாத மாடும் பொதிதான் சுமக்கும். பொம்பளைக கதியே அதுதான்.''

''வாயைப் பாரு. ரொம்ப நீளுதடி. வந்து சாப்புடு.''

லட்சுமிக்குள் செல்வராஜின் புன்சிரிப்பு. கறுத்த முகத்தில் கூச்சமாய் சிரிக்கிறபோது துல்லியமாகத் தெரிகிற பல்வரிசை. மனசைச்

சுண்டியிழுக்கிற குறும்பான ஆழ்ந்த பார்வை. டக்கரில் (டிராக்டர்) அவன் ராஜாவைப்போல உட்கார்ந்துகொண்டு, கிராமத்துப் புழுதியைக் கிளப்பிக்கொண்டு ஓட்டுகிற கம்பீரயம்.

மயங்கித் திளைத்த மனசின் பரபரப்பு உடம்பெல்லாம் பரவ, அது கால்களுக்கும் புரிய... வேகமாய் நடந்தாள், வயல்காட்டுக்கு.

வயல்காட்டுப் பருத்திக்குள் களைவெட்டு நடந்து கொண்டிருந்தது. நிறைய பெண்கள். கிழவிகளும், குமரிகளுமாய், குசுகுசுத்த பொரணிப் பேச்சுக்கள். நையாண்டிகள். வேலிக்காட்டு மறைவில் ஒதுங்கிய பறவைகள் பற்றிய ரகசியங்கள்...

எதிலும் பட்டுக்கொள்ளாமல் எல்லாரையும் முந்தி வெட்டிக்கொண்டு போகிறாள் லட்சுமி... இறுகிப்போன வயல்காட்டுத்தரை, சுரண்டியை எத்துகிறது. உதறுகிற சுரண்டியை அழுத்தி வெட்டினால்தான் புல்லும் சாகும்; புழுதியும் புரளும்.

நிமிராமல் வெட்டிக்கொண்டு போகிற லட்சுமிக்கு, கையெல்லாம் வலிக்கிறது. மூக்கு நுனியில் தொங்குகிற வியர்வை முத்து, அவள் அசைவிலேயே சிதறி தரையில் விழுகிறது. கன்னமெல்லாம் வியர்வைக் கோடுகள். காய்ந்த உப்பு.

பம்ப்ஷெட் ரூமில் செல்வராஜ் இருப்பான். மதியக் கரண்டு. கரண்டு வந்தவுடன் நீர் பாய்ச்சுவான். மனசுக்குள் விசிலடிக்கிறான்.

மற்றவர்களுக்கு இரண்டு மூன்று பாத்திகள் கிடக்க, இவள் வெட்டி முடித்துவிட்டு, அடுத்த நிரையில் சுரண்டியைப் போட்டுவிட்டு-

''தண்ணி குடிச்சுட்டு வாரேன்'' என்று ஒப்புக்குப் பொதுவாகச் சொல்லிவிட்டு, பம்ப் ஷெட் ரூமை நோக்கி நடந்தாள்.

''தண்ணி குடிக்கவா போறா? தம் பியைப் பாக்கப் போறா'' முதுகுக்குப் பின்னால் கேட்ட கிசுகிசுப்பை, இவள் பொருட் படுத்தவில்லை.

இவளால் தண்ணி குடிக்காமல் இருக்க முடியாது. மனசுக்குள் தாகம். முகம் பார்த்து நாலு வார்த்தை பேச ஆசைப்படுகிற தவிப்பு, அவனது சிரிப்பு- கேலியை- குத்தலான கிண்டலை- கேட்டு ரசிக்க ஆவல்படுகிற மனசின் துள்ளல். இவளது நடையில் அதே துள்ளல்.

பம்ப் ஷெட் ரூமுக்குள்-

குடத்தில் இருந்த தண்ணீரைக் குடித்தாள். செல்வராஜை கவனிக்காதவளைப்போலத் திரும்பினாள். அவள் கையைப் பிடித்து இழுத்தான்.

''ஏய்...''

''ந்தா... சும்மாயிருங்க. ஆளுக இருக்காக.''

''அவுக பாக்க முடியாது.''

''பாக்காட்டாலும்... நெனைப்பாக.''

சட்டென்று இழுத்தான்... திமிறிய அவளை, விடாமல் அழுந்த அணைத்து, இறுகத் தழுவி... அவள் உடம்பெல்லாம் வியர்வை நசநசப்பு.

கன்னத்தில் அழுந்த முத்தமிட்டு, லேசாகக் கடித்தான். 'ச்சீய்...ச்சீ' என்று மறுத்த உதட்டிலும் முத்தமிட்டான். அவளை விட்டதும்,

''த்தூ... த்தூ'' என்று துப்பினான். முகத்தில் போலியான அருவை.

துள்ளி விலகிக்கொண்டு ''ஆளைப் பாரு ஆளை'' என்று, செல்லமாய்க் கடிந்துகொண்ட லட்சுமி, 'என்ன?' என்பதுபோல கண்ணால் கேட்டாள்.

குறும்பு அவன் கண்களில் மின்னியது.

''முத்தம்னா இனிக்கும்னு சொல்வாக. இதென்ன ஒரே உப்புக்கரிப்பு?''

கோபித்துக்கொண்டு அடிக்கக் கையை ஓங்கினாள். ''மூஞ்சைப்பாரு மூஞ்சை'' என்று பழிப்புக் காட்டினாள். அவன் சுதந்திரமாய்ச் சிரித்தான்.

''காக்காக்களுக்கு உப்புக் கரிக்கத்தான் செய்யும்'' என்று பதிலுக்கு, அவன் நிறத்தைச் சாடினாள்.

''அம்மா தாயே, சுண்டுனா ரத்தம் வர்ர சிவப்பா, நீ? நா கட்டெறும்பு நிறம். நீ சித்தெறும்பு நிறம், அம்புட்டுதானே வித்தியாசம்?''

''கட்டெறும்புக்கும், சித்தெறும்புக்கும் ஒத்துவராது.''

''நாம ஒத்துமையா காலம் பூராவும் வாழத்தானே போறோம்.''

''ஆசைப்பட்டா மட்டும் போதுமா? காரியம் ஆக வேண்டாமா?''

''ஏன்? ஒன்னை எனக்குக் கட்டிக்குடுக்க மாட்டாகளா? நா எதுலே குறை?''

"உங்களுக்கு காடுகரை இருக்கா? காலமெல்லாம் ஒரு வீட்லே கைகட்டி நிக்கிற கூலிப் பொழப்பு தானே?"

"நீங்க மட்டும் என்ன வாழ்றீகளாம்?"

"நா கூலி வேலைக்கு வந்தாலும், எங்கய்யா சம்சாரி. காடு இருக்கு. கிணறு இருக்கு. பரம்பரை வீடு இருக்கு."

"நா ஒன்னைக் கொத்தாம விடப்போறதுல்லே. உனக்குத் தெரியுமா லட்சுமி? கீழக் காட்டுல மூணு குறுக்கம் நிலம் விலை பேசியிருக்கேன். அடுத்த மாசம் பத்திரம் பதியப்போறேன்."

"நெசமாவா..."

"ஆமா...ஐயாவை லேசுன்னு நெனச்சியா?"

"ராசாதான். சரி.. சரி... நா களை வெட்டப் போறேன்."

"இன்னும் கொஞ்சம் தண்ணி குடிச்சுக்கோ..." என்றான் அர்த்தமுள்ள தாபத்துடன்.

"ஆசையைப் பாரு, தண்ணி உப்புக் கரிக்கும்" என்று அர்த்தத்துடன் பதில் கொடுத்துவிட்டு, கேலிச் சிரிப்பு கலகலக்க ஓட்டம் பிடித்தாள்.

அவனும் அசட்டுத்தனமாய்ச் சிரித்துக்கொண்டான்.

மானைப்போலத் துள்ளித் துள்ளி அவள் ஓடுகிற ஓட்டம். மனசுக்குள் தீ மூட்டுகிற அவளது சுறுசுறுப்பு. உழைப்பை நேசிக்கிற அவளது பண்பு. விட்டுக்கொடுத்து ஒத்துப்போகிற மனப்பாங்கு. இளமை. அழகு. கபடமோ, பாசாங்கோ இல்லாத வெளிப்படையான அவளது மனசு. கேலி, கிண்டல், வசவுகள்...

இவனை மயக்கிக் குழைய வைத்த, அவளது, மோக ராகங்கள்.

பச்சைப் பசேலெனப் படர்ந்திருக்கிற பருத்திச் செடிகளுக்குள், லட்சுமி குதித்துக் குதித்து ஓடுவதையே இமை தட்டாமல் பார்த்தான். மண்ணில் கால் பாவாமல் ஒரு தேவதை மிதந்து செல்வதைப்போல...

'இவளுக்கு மெதுவா நடக்கவே தெரியாதா...?'

உள்ளுக்குள் குறுநகைத்துக் கொண்டான்.

உறக்கம் வராமல் புரண்டு கொண்டிருந்தாள் லட்சுமி. மனசுக்குள் செல்வராஜ் 'கிச்சலம்' காட்டிக் கொண்டிருந்தான். சிரிக்காமல் இருக்கவும் முடியாமல், சிரித்து விடவும் முடியாமல் தவித்துக் கொண்டிருந்தாள்.

அம்மாவிடம், அய்யா பேசுகிற சத்தம்:

''நாளைக்கு ராசகுலராமன் போறேன், பத்திரம் பதியுறதுக்கு.''

''யாருக்கு?''

''நம்ம செல்வராஜ் மாப்புள்ளைதான் நிலம் வாங்கியிருக்கார். அவருதான் கூப்புட்டார். வாறேன்னு சொல்லிட்டேன்.''

''இங்க கிடக்குற வேலையை யாரு பாக்குறது?''

''அடக் கிடக்கட்டுமா. மாப்புள்ளை நல்ல பையன். சின்ன வயசிலேயே எம்புட்டு அக்கறை. பாடுபடுகிற ஆசை. நாலு காசு சேத்து வைக்கணும்ங்கிற பொறுப்புணர்ச்சி. இந்தக் குணத்துக்காக வாவது கூடப் போகவேண்டாமா?''

அய்யாவின் வெள்ளந்தியான வார்த்தைகள். லட்சமியின் மனசுக்குள் பூக்களை அள்ளி அள்ளித் தூவின. சந்தோஷ நதிகளாக அவளுள் பெருக்கெடுத்தோடி, உணர்வுகளையெல்லாம் சிலிர்க்கச் செய்தன.

தங்கள் கல்யாணத்திற்கு அவர் போடுகிற அட்சதை அரிசிகளாக, அந்த வார்த்தைகள். கனவுகளில் நனைந்து புல்லரித்துப் போனாள்.

லட்சுமியின் மனசெல்லாம் நந்தவனமாய், பூக்களின் வர்ணப் போரொளி. நம்பிக்கை நாற்றுகளுக்கு நீர் பாய்ச்சுகிற நினைவுகள்.

'நாளைக்கு இதை அவர்கிட்டே சொல்லணும்.'

ஒரு மாதத்திற்குப் பிறகு-

அய்யா, அம்மாவிடம் சொன்னார்:

''சிவகாசியிலேருந்து நம்ம சின்னச்சாமி வந்துருந்தான். நம்ம லட்சுமிக்கு நல்ல இடம் ஒன்னு இருக்குன்னு சொன்னான்.''

''நீங்க என்ன சொன்னீக?''

லட்சுமி, சட்டென்று அங்கே உற்பத்தியானாள்.

''எனக்குக் கல்யாணமும் வேண்டாம். மாப்பிள்ளையும் பாக்க வேண்டாம்''- வெடுக்கென்று சொல்லிவிட்டு மறைந்துவிட்டாள்.

திகைத்துப்போன அந்தக் கிழடுகள், அந்த வார்த்தைகளுக்கு அவர்கள் அகராதிப்படி அர்த்தப்படுத்திக்கொண்டனர்.

தனிமையில் அம்மா, இவளை நோண்டிப்பார்த்தாள். அன்பான வார்த்தைகளால், பரிவான சொற்களால், மனசின்

மூலைகளைத் துழாவினாள். இவளும் செல்வராஜைப் பற்றி அரைகுறையாகச் சொல்லிவிட்டாள்.

அய்யா பூகம்பமாய் வெடித்து, பூமிக்கும், ஆகாயத்துக்குமாய் குதிப்பாரோ என்று அம்மா பதறிப் பதைத்தாள். நல்ல வேளை அப்படியொன்றும் ஆகிவிடவில்லை. ரெண்டு நாட்களாக வீட்டுக்குள் ஒரே குசுகுசுப்பாகக் கிடந்தது.

அய்யா சம்மதித்துவிட்டார். செல்வராஜ் அய்யாவும்கூடத் தலையை ஆட்டி ஆமோதித்துவிட்டார்.

"ஏதோ... பொம்பளையில்லாம இருண்டு கெடக்குற வீட்லே, லட்சுமி வந்து விளக்கேத்தி வைச்சா... எனக்கும் நிம்மதிதான்."

லட்சுமியும், செல்வராஜும் சந்தோஷத்தில் தலை கால் புரியாமல் தவித்தனர். கனவுகள் இத்தனை சீக்கிரமாய் - சுலபமாய்- கைசேர்ந்ததில் அவர்களுக்கே ஆச்சர்யம். ஆனந்தக் கற்பனை வானில் இன்பச் சிறகசைத்தனர்...

ரெண்டு தகப்பனார்களும் ஒரு நாள், 'பொருத்தம் பார்க்க' பக்கத்து ஊர் ஜோஸ்யரிடம் போயிருந்தனர். பிரபலமான ஜோஸ்யர். மதுரையிலிருந்துகூட இந்தக் குக்கிராமத்துக்கு ஆட்கள் வருகிற அளவுக்குப் புகழ் வாய்ந்தவர். அவர் சொன்ன ஜோஸ்யம் எதுவுமே பொய்யானதில்லை என்ற நம்பிக்கையில், கிராமத்து ஜனங்கள் தெளிவாக இருந்தனர். இவரைவிடத் தெளிவான ஜோஸ்யர் உலகத்திலேயே கிடையாது என்ற வைரம் பாய்ந்த நம்பிக்கை.

அன்று ராத்திரி வந்து அய்யா சொன்ன செய்தி, ஆயிரம் தேள்களாக அவளைக் கொட்டியது போலிருந்தது.

பெயர் பொருத்தம்- நட்சத்திர பொருத்தம் எதுவுமே அமையவில்லையாம். அதை மீறி கல்யாணம் செய்தால்... இருவரில் ஒருவருக்கு மரணம் சம்பவிக்குமாம். இரண்டு குடும்பத்துக்குமே பீடையாம்.

செல்வராஜ் கொதித்தான்:

"இதெல்லாம் என்ன ஐயா, கூறுகெட்ட பேச்சு? அந்த ஜோஸ்யர்கிட்டே போய், 'ஒமக்கு என்னைக்குச் சாவு வரும்'னு கேளுங்க. 'தெரியாதும்'பார். அவனவன் விதியைக்கூட தெரிஞ்சுக்காத ஜோஸ்யர்க, நம்ம விதியைப் பத்திச் சொல்றது, என்ன வேதவாக்கு? இதை நம்புறது, வெவரம்கெட்ட பைத்தியக்காரத்தனம். நா பைத்தியக்காரனா இருக்கமாட்டேன். நா தாலிகட்டுனா, லட்சுமிக்குத்தான். இல்லேன்னா இல்லே...!

இன்னும் எம்புட்டோ சொல்லிப் பார்த்தான். தாவிப் பார்த்தான். தகராறு செய்தான். நாட்கணக்கில் சாப்பிடாமல் இருந்து பார்த்தான். அவனது அய்யா, 'கட்டன் ரைட்'டாகச் சொல்லிவிட்டார்.

''ஜோஸ்யக்காரர் 'இது கெணறு'ன்னு தெளிவா சொல்லிட்டாரு. அதுக்குப்பெறகும் அதுலே விழுந்து சாகுறது கிறுக்குத்தனம். நீ லட்சுமிக்குத்தான் தாலி கட்டணும்னா ஒன்னு செய், நா செத்த பிறகு, கருமாதியை முடிச்சிட்டு தாலியைக் கட்டு. ரொம்ப அவசரம்னா... என்னைக் கொன்னுட்டு இந்தக் கல்யாணத்தை நடத்திக்கோ...''

எந்த அய்யாவைக் கொல்றது? இவரையா? அம்மா செத்தபிறகு, ஒற்றை மகனுக்காக வாழ்க்கையையே பாலைவனமாக்கிக்கொண்ட இவரையா? இன்றுவரை சமையல் கட்டுக்குள் - அடுப்புக்குள் விறகாக எரிந்து கருகிக்கொண்டிருக்கிற இந்த அய்யாவையா? இந்த மனுச அற்புதத்தையா?

அவன் மனசால் நடுங்கிப் போனான். ஆனால் ஒடுங்கிக்கொள்ள முடியவில்லை.

லட்சுமி அழவில்லை. கதறவில்லை. ஒரு சொட்டுக் கண்ணீரைக் கூடச் சிந்தவில்லை. உறைந்துபோன சோகச் சிலையாக ஒடுங்கிப் போனாள். அந்த இறுகிப்போன மௌனத்தைக் கண்டுதான் அம்மா நடுங்கினாள். பயந்து பயந்து அழுதாள்.

''ஒரு மூச்சாவது அழுது முடிம்மா'' என்று சொல்லிப் பார்த்தாள்.

ஊஹூம்! அழவில்லை. அது மௌனம் - உறைந்து இறுகிப்போன மௌனம். கருமருந்து கிட்டித்த வேட்டுபோல, அபாயமான மௌனம். அம்மாவின் பயம் பொய்யாகிவிடவில்லை.

'லட்சுமி அரளிக் கொட்டையை அரைத்துக் குடித்து விட்டாள்' என்ற செய்தியில், ஊரே பதறிப் பதைத்தது. அல்லோல கல்லோலப்பட்டது. 'அடப் பாதரவே, இப்படியும் கொடுமை உண்டுமா' என்று கலங்கிக் கரைந்தது.

'வண்டியைப் பிடி', 'மாட்டைப் பிடி' என்று கிராமமே சிறகு கட்டிப் பறந்தது. சுறுசுறுப்பாக இயங்கியது.

டவுன் ஆஸ்பத்திரிக்குக் கொண்டுபோய்ச் சேர்த்து, பிழைக்க வைத்து விட்டனர். ஒரு மாதம் கழித்து, ஊருக்குத் திரும்ப வரவழைக்கப்பட்டாள்.

செல்வராஜ், எங்கோ ஓடிப்போய்விட்டான் என்ற செய்தி கிடைத்தது.

அதற்குப் பிறகுதான் 'கோ'வென்று கதறியழுதாள். வெடித்துச் சிதறினாள். ஜோஸ்யக்காரனைச் சபித்தாள். அடிபட்ட பறவையாகத் துடித்தாள்.

நாளொரு நிகழ்ச்சியும், பொழுதொரு உணர்ச்சியுமாக காலமகனின் துரித ஓட்டத்தில் காயங்கள்- ரத்தமெல்லாம் உலர்ந்து, வாடி, வடுக்களாய் மாற... வாழ்க்கையை உணர்ந்து சிலரும், யந்திரமாய் பலருமாய் வாழ்ந்து கழிக்க-

இரண்டு வருஷம் கழித்து, அந்த ஊருக்குப் பெண் கேட்டு வந்தான் சந்தானம்.

...அடுப்பங்கரைக்குள் யந்திரமாகிவிட்ட - பழுதான பழைய யந்திரமாகிவிட்ட லட்சுமி, புகை மூட்டத்திற்குள் மூச்சு முட்டிப் போயிருந்தாள்.

சந்தானம் மறுபடியும் அழைக்கிற சத்தம்: "லட்சுமி..."

என்ன என்று கேட்கக்கூட மனசில் உயிரில்லை. ஏதோ புருஷன்- ஏதோ உறவு- ஏதோ குடும்பம்... உயிரில்லாத பிரேத வாழ்க்கை. மனசின் உணர்ச்சிகளற்ற யந்திர வாழ்க்கை. ஊருக்காக- உறவு முறைக்காக- பிறருக்காக - இவள் இவளாக இல்லாமல், பொய்யாக வாழ்கிற மலட்டு வாழ்க்கை.

பத்து வருஷத்திற்கும் மேலாக வாழ்ந்துவிட்ட தாம்பத்யத்தில், மனசைக் குளிர்ச்சியாக்குகிற உணர்ச்சிகள் இருந்ததே இல்லை. ஈரப்பதமே இல்லை. பள்ளிக்கூடம் போயிருக்கிற இரண்டு புள்ளைகள்தான், இவளுக்கு நிஜமானவை. நிஜமாக இன்னும் இவளை உயிர் வாழ வைத்துக்கொண்டிருப்பதே... அந்த ரத்த பந்தங்கள்தான்.

மீண்டும் பலமாகக் கூப்பிடுகிற சந்தானம்.

"லட்சுமீ...ஏய் லட்சுமீ... இங்க வந்து பாரேன். உங்க ஊர்க்காரர் செல்வராஜ் அண்ணன் வந்துருக்காரு."

உடலெங்கும் பற்றிக்கொண்ட தீயில், உயிர் பெற்றுவிட்டதா உயிர்? முகத்தில் குளிர் நீர் பீய்ச்சியதைப்போல, மனசெல்லாம் குலுங்கிப்போன அதிர்ச்சி.

வசந்தகாலத் துளிர்களாக அவள் முகத்தில் சட்டென்று விகசித்த மலர்ச்சி. யந்திர கதியிலல்ல- பறவையின் உயிர்ப்பான வேகத்தில் வாரிச் சுருட்டிக்கொண்டு வெளியே பாய்ந்து வந்தாள்.

திண்ணையில் உட்கார்ந்திருந்தான் செல்வராஜ். பக்கத்தில் எட்டு வயதுப் பெண் குழந்தை. வாழ்வின் கால்களால் உதைபட்டவனைப் போல, குன்றிப்போயிருந்தான் அவன்.

"எப்ப வந்தீக...?"

"இப்பத்தான்."

"உள்ளே வாங்க. உள்ளே வந்து உக்காரச் சொல்லுங்க."

புயலாக உள்ளே ஓடினாள். அடுத்த நிமிஷத்தில் எல்லோருக்கும் காபி கொடுத்தாள். சந்தானம் திகைத்துப்போனான்.

அவன் பார்த்தறியாத சுறுசுறுப்பில் லட்சுமி, அவன் பார்த்தறியாத மலர்ச்சியில் லட்சுமி. ஒரு நாள்கூட அனுபவித்தறியாத ஒளி, மனைவியின் கண்ணில்.

திகைப்பு மாறாமல், மனைவியையே பார்த்தான். பார்த்துக் கொண்டிருக்கிற அளவுக்கு, ஒரு இடத்திலா நிற்கிறாள்? வசந்த காலத்துச் சிட்டுக் குருவியைப்போலப் பறந்து பறந்து, மின்னலாய் தோன்றித் தோன்றியல்லவா மறைந்துகொண்டிருக்கிறாள்!

திகைப்பை மறைத்துக்கொண்டு, செல்வராஜிடம் ஆரம்பித்தான் சந்தானம்.

–செம்மலர். 1986.



# 13. கறுப்பு

வீட்டுக்குள் நுழைந்த பெரியசாமி, செருப்பைச் சுழற்றிப் போட்டுவிட்டு, சட்டையைக்கூடக் கழற்றிக் கொள்ளாமல் ஈஸிச் சேரில் விழுந்தார்.

தேகத்தின் ஒவ்வொரு எலும்புத் துணுக்குகளும் வலித்தது. ஐம்பதைத் தாண்டிவிட்ட உடம்பு, இந்த அலைச்சலைத் தாங்க முடியாமல் சோர்ந்துபோய்த் துவண்டது.

மனசும் அதற்கும் மேலாக கிழடு தட்டிப்போய்த் துவண்டது. உடம்பின் சோகத்தையெல்லாம் திரட்டி, வாய் வழியாகப் பெருமூச்சுவிட்டார்.

''உஸ்ஸ்ஸ...'' என்ற பேரிரைச்சலாக இருந்தது. கண்கள் இருண்டு வந்தது. மூடினால் எரிந்தது.

'ஐயாயிரம் புரட்டுவதற்கு எத்தனை புரள வேண்டியிருக்கு?'

'ஊர் ஊரா புரண்டெழுந்தாலும் பணம் பெயர்ற மாதிரி தெரியலியே... ஊர்லே ஏதோ கொஞ்சம் மதிப்பும் மரியாதையும் சம்பாதிச்சு வைச்சிருக்கிற செகண்ட்ரிகிரேடு வாத்யார்- நமக்கே இந்தப் பாடுன்னா... மத்த ஏழை எளியவங்க பாடு எம்புட்டு கஷ்டமாயிருக்கும்?'

அலுத்துப்போன சிந்தனை, இந்த ரீதியில் ஓடி, தன்னைத்தானே சமாளித்துக்கொண்டது.

''அப்பா...''

பயந்த, மெல்லிசான குரல் கேட்டு, கண்ணைத் திறந்தார் பெரியசாமி. மகள்... அலைச்சலுக்கும், அலுப்புக்கும் காரணகர்த்தா.

''என்னம்மா...''

''ஏன், காலைக்கூட கழுவலியா?''

''கொஞ்சம் டயர்டா இருந்தது.''

''இந்தாங்கப்பா...காபி.''

''வைச்சிரு. கால் கையை அலம்பிட்டு வர்றேன்.''

நாசி விடைத்துக்கொள்ள, மீண்டுமொருமுறை பெருமூச்சு.

அப்பாவைப் பார்க்க ராஜிக்கு பாவமாக இருந்தது. வயதான காலத்தில் இவருக்குத்தான் எவ்வளவு அலைச்சல்? இதைத் தாங்கக் கூடிய வயசா, உடம்பா?

எனக்குப் பதிலாக ஒரு நொண்டிப் பையனைப் பெற்றிருந்தால் கூட... இவ்வளவு கஷ்டமில்லையே... 'சாண் பிள்ளையென்றாலும்... ஆண்பிள்ளை' என்று தெம்பாக இருக்குமே...

எத்தனை அழகு இருந்தென்ன... பெண்தானே! பெண் என்றாலே பெற்றவர்களுக்குச் சுமைதானே! கழுத்தில் தாலி ஏறுவதற்குள் குடும்பத்தின் ஜீவனே இறங்கிப்போய்விடும் போலிருக்கிறதே!

ராஜி, காபி தம்ளர் மீது ஒரு அட்டையை வைத்து மூடிவிட்டு, அடுக்களைக்குள் நுழைந்தாள். மீறிவரும் நெருப்புக்கு, கட்டையை உள்ளே தள்ளினாள்.

எரியும் ஜ்வாலைகளையே பார்த்துக்கொண்டிருந்தாள். அவளுள் நினைவு ஜ்வாலைகள்...

...அன்று பெண் பார்க்கும் படலம். தன்னைத்தானே அலங்கரித்துக் கொள்ளும்போது கண்கள் நீரைக் கொட்டியது. தாயில்லாத வெறுமை, அன்றுதான் முழு பலத்துடன் நெஞ்சைத் தாக்கிக் கிழித்தது.

தானே பலகாரம் செய்து... தானே வீட்டைச் சுத்தம் செய்து... தானே அலங்கரித்து... ஒரு பெண்ணுக்குரிய நாணத்தைக்கூட அணியக்கூட முடியாமல்... தாயில்லாச் சோக மனசை முழுசாக உணரச் செய்து, அவஸ்தைப்படுத்தியது.

''அம்மா...''- அப்பாவின் குரலைக் கேட்டாள். தட்டுத் தடுமாறிய மனசைத் திடப்படுத்திக்கொண்டு வந்தாள். தரையில் கண்கள் நிலைக்க... பல கண்கள் உடலைத் துளைக்கிற உணர்வு...

அந்த உணர்வே மனசைத் தூண்டித் தவிக்க வைக்க, மெல்ல இமை நிமிர்த்தி... விழிகளை ஓரப்படுத்தி... மாப்பிள்ளையைப் பார்த்தாள்.

நல்ல கறுப்பு. இருட்டுப்போல அடர்ந்த கறுப்பு. வாலிபத் துடிப்பான தோற்றம். முகத்தில் ஒரு குழப்பம்... தயக்கம்... இருப்புக் கொள்ளாத லஜ்ஜை... தெரிகிறது...

எப்படிப்பட்டவராக இருப்பார்...? தனது மனசை- வாழ்வை புரிந்து கொள்வாரா? அங்கீகரித்துக்கொள்வாரா... அணைத்து அனுசரித்துப் போவாரா? அன்பு - பரிவு... காட்டுவாரா?

''மாப்பிள்ளை விருந்து போட்ட லட்சணம் தெரியாதாக்கும்?'' என்று நாக்கால் மனசைக் கிழித்து புண்ணாக்குவாரோ?

''உங்க அப்பன் பொழைப்பு தெரியாதாக்கும்'' என்று நெஞ்சை உடைத்து, சுக்கு நூறாக்கி வன்மம் காட்டுவாரோ?...

நினைக்கும்போதே நெஞ்சு அதிர்ந்து, நடுங்கி... குளிர்ந்து...

ஏதேதோ கேள்விகள்... விசாரிப்புகள்...

''போம்மா.''

அப்பாவின் சத்தம், மனசுக்குத் தெம்பாக இருந்தது. துவண்டு தள்ளாடி 'விழுந்து விடுவோமோ' என்று பயப்பட வைத்த கால்கள், ஸ்திரப்பட்டன. உள்ளே போய்விட்டாள்.

பேச்சு சப்தம் கேட்டது.

எல்லோரையும் தவிக்க வைத்து விட்டுப் போகும்போது அம்மா... பத்துப் பவுன் நகையையும் விட்டுவிட்டுப் போனாள். சாகும்வரை அப்பாவின் பாரத்தையெல்லாம், தன் மனசில் தாங்கியே வாழ்ந்து வந்த அம்மா... செத்த பிறகுகூட நகையின் மூலமாக அப்பாவின் பாரத்தை ஏந்திக்கொண்டாள்.

''மேற்கொண்டு என்ன தர முடியும், உங்களாலே?''- இது 'அவரின்' அப்பா குரல்.

''என்ன எதிர்பார்க்கிறீங்க...?''- இது அப்பாவின் குரல்.

சற்று மௌனம். பேச்சு எங்கெங்கோ திசை திரும்புகிறது. மறுபடியும் விஷயத்துக்கு வருகிறது. தத்தம் நெஞ்சுள் முட்டி மோதும் ஆசைகளையும்- பயத்தையும் மறைத்துக்கொண்டு விஷயத்தைப் பேசுகிற சாங்கோபாங்கம்.

இறுதியில் முடிவாயிற்று.

கல்யாணச் செலவுக்கு இரண்டாயிரமும், தொழில் துவங்க மூவாயிரமும் தருவது என்று முடிவாயிற்று.

இரண்டாயிரத்தைத் தயார் செய்துவிட்டார். ஆனால் மேற்கொண்டு மூவாயிரம்தான்... இப்போது பிரச்னை. இதற்காக அலைந்து அலைந்து... அறிந்த் தெரிந்த பெரியவர்களிட மெல்லாம் அணுகிப் பேசி... சோர்ந்து... அலுத்து...

பாவம், அப்பா!

அப்பாவைப் பார்க்கப் பார்க்க, தன் பிறப்பின்மீதே ஆத்திரப்பட்டாள்...

"மேற்கொண்டு என்ன தர்றீங்க?"

எத்தனை சட்டம் போட்டாலும்...: நாகரீகம் வளர்ந்த இந்தக் காலத்திலும் 'இந்தக்' குரல் எத்தனை தைரியமாக ஒலிக்கிறது. எப்படி முடிகிறது? சட்டத்துக்கும் மேலாக உயிர்வாழ... இந்தக் குரலுக்கு சமூகத்தில் வலுவான வேர்கள் ஓடியிருக்கிறதா... அது எப்போ அறுபடும்? அறுபடுமா...? பெண் குலத்துக்குச் சாபமாக-சாஸ்வதமாகத் தொடருமா...?

நெருப்பின் அனல் கையில் வீச... உணர்வுக்கு வந்தாள். நெருப்பு இப்போது மனசில் எரிகிறது.

விறகை உள்ளே தள்ளி... மூடியைத் திறந்து... சாதத்தை சரிபார்த்தாள்.

"அம்மா... ராஜி."

"என்னப்பா?"

"ரெண்டு காபி போடும்மா..."

யாரோ வந்திருக்கிறார். பரபரத்தாள்.

காபியுடன் வெளியே வந்தபோது, அப்பாவுடன் இன்னொருவர் பேசிக்கொண்டிருந்தார்.

யார் இவர்? எங்கோ பார்த்தது போலிருக்கிறதே... மனசுக்குள் ஒரு தீவிர தேடல்...

ஆங்... ஞாபகத்துக்கு வந்துவிட்டது.

'அன்று' இவர், 'அவருடன்' வந்திருந்தார். 'அவரு'க்குத் தாய் மாமா. பேசாமலிருந்தாலும், இவர்தான் 'அவர்' அப்பாவுக்கு 'மூளை' என்பது, அடிக்கடி கிசுகிசுப்பதும், காதைக் கடித்துக் கொள்வது மாயிருந்ததிலிருந்து தெரிந்தது.

என்னத்துக்காய் வந்திருப்பார்...? மனசு அதிர்ந்தது. விரைவில் குழப்பம் நீங்கிப்போயிற்று. பணத்துக்காக வந்திருக்கிறார்.

"அதனாலென்ன, தர்ரேன். சாப்பிட்டுட்டு வாங்கிட்டுப்போங்க..."

"சாப்பாட்டுக்கென்ன இப்போ. அங்க இனிமேதான் கல்யாண வேலைகளைத் துவக்கணும். நாள் நெருங்கிடுச்சு. எல்லாம் நாமெதானே செய்யணும்."

"சரிங்க... இப்ப ரெண்டாயிரம் ரெடியாயிருக்கு. கொண்டு போங்க, வேலையைத் துவக்குங்க. அதுக்குள்ளே நா மூவாயிரத்தை ரெடி பண்ணிடுறேன்."

"அதுக்கென்ன... நாமெ ஒன்னுக்குள்ளே ஒன்னாகப் போறோம். இந்தளவுக்குக்கூட அட்ஜஸ்ட் பண்ணிப் போகலேன்னா... மத்தவங்களுக்கும் நமக்கும் என்னங்க வித்தியாசம்...?"

இவர் ரொம்ப சாமர்த்தியமாகவே பேசுகிறார். எவ்வளவு இனிப்பாகப் பேசுகிறார்!

வாங்கிவிட்டுப் போனார்.

வேலைகள், சிறகு முளைத்துப் பறந்தன. 'என்றோ, எப்போதோ' என்று தூரத்தில் நின்ற நாள், 'இதோ இன்று' என்று நெருங்கிவிட்டது.

அழைப்பிதழைப் பார்க்கிறபோதெல்லாம், தன் மகளின் வாழ்வு மலரப் போகிறது... எப்படியெல்லாம் மணம் வீசப்போகிறது... என்று கனவுகளைக் காணக்கூட மனசு தைரியப்படவில்லை. அந்த மூவாயிரத்துக்கு என்ன செய்றது? இந்தக் கேள்விதான் நெஞ்சைக் குடைந்து தவிக்க வைக்கிறது. நினைக்க நினைக்க மனசுக்குள் ஏதேதோ கற்பனைகள். விபரீத நினைப்புகள்...

இப்படியாகுமோ என்கிற அச்சம், குலையை நடுங்க வைக்கிறது.

இவருடைய பழைய மாணவர்கள் நிறைய உதவிகள் செய்கின்றனர். வேலைகளையெல்லாம் தன்மேல் தாங்கி நிறைவேற்றுகின்றனர்.

இவர்களுக்குத்தான் ஆசிரியர்கள்மீது எவ்வளவு பாசம்...! அந்தப் பாசம் இவர்களை இவ்வளவு செயல்படுத்துகிறதென்றால்... அது எத்தனை நிஜமாக- தூய்மையாக இருக்க வேண்டும்...!

அவர்கள், இவருக்கு நிறைய பலம் தந்தார்கள். மனசும்கூட தெம்பும் நம்பிக்கையும் துளிர்த்து, சற்று நிமிர்ந்தது.

சிந்தனைகூட, நம்பிக்கையின் வலிமையுடன் ஓடியது.

'சரி... மூவாயிரம் தொழில் துவங்கத்தானே! கல்யாணம் ஆனாலும், எப்படியும் ரெண்டு மாசமாச்சும் விருந்து நடக்காதா... அதுக்குப் பிறகுதானே தொழில்? அதுக்குள்ளே ஏற்பாடு செய்துட முடியாதா, என்ன...'

ஆமாம்... வேலைகள் சிறகு கட்டிப் பறந்தன. நாட்களும் பறந்தன.

இதோ, நாளைக்குத்தான்!

காலையிலேயே மாப்பிள்ளை வீட்டார் வந்து சேர்ந்தனர். அவர்களுக்கென்று பார்த்து வைத்திருந்த வீட்டில், சாமான்களை நிரப்பினர்.

வாழைகள் கட்டப்பட்டன. மைக்செட் முழங்கியது. திருமண வேலைகளுக்கு கிராமத்தினரே ஒத்துழைத்தனர்.

மாப்பிள்ளை வீட்டாரும், மிகுந்த சந்தோஷமாகக் காணப்பட்டனர். கிராமத்தினர், ஆசிரியர் பெரியசாமி மீது வைத்திருக்கும் மரியாதையைக் கண்டு மகிழ்ந்தனர்.

இரவு பத்து மணிக்கு மேலாகிவிட்டது. தாய் மாமா, மாப்பிள்ளையின் அப்பாவின் காதில் கிசுகிசுத்தார். அவரது முகம் மாறியது. கண்கள் விரிந்தன.

''என்னை என்ன இளிச்சவாயனா நினைச்சாரா? 'பொண்ணுக்கு போட முடிஞ்சா செய்யட்டும்... என்ன அர்த்தம்? மூவாயிரத்தை ஏமாத்த இந்தத் திட்டமா...? விடியட்டும்... நா பார்த்துடுறேன்...'' என்று சவால் விடுவதுபோல ஆவேசமாகச் சீறினார்.

விடிந்தது...

வெளியூரிலிருந்து உறவினர் வந்தவண்ணமிருந்தனர். பந்தி நடந்தது. கிராமத்தினர் எல்லோரும் வந்தனர்... சாப்பிட்டனர். 'வெள்ளையும் சொள்ளையுமாக' வளைய வந்தனர்.

தன் வாழ்வையே அவர் காலடியில் சமர்ப்பிக்கின்றனரே, அவர் அந்த வாழ்வைப் போற்றிப் பாதுகாப்பாரா...? பூவாக நினைத்து பிரியம் காட்டுவாரா...?

புகைந்து சுருங்கிப்போன சிகரெட் துண்டாகப் பாவித்து, நசுக்கிப் போட்டுவிட்டுப் போய்விடுவாரா...?

அவளுள் நம்பிக்கையும் தலை காட்டியது; அவநம்பிக்கையும் அலைக்கழித்தது.

'பெண்ணோட வாழ்க்கை சுயதன்மையேயில்லாமெ, ஏன் இப்படி முழுக்க சார்புத்தன்மையாயிருக்கு? அதனாலேதா இந்த உத்தரவாதமின்மையா? தாலியை வாங்கும் போதும் கூட திகிலுடன் - பீதியுடன்தானே ஏந்த வேண்டியிருக்கு!'

நினைத்தால் 'ச்சே' என்றாகிப்போகிறது. மனசே சோர்ந்து, துவண்டு, கசந்து போகிறது. தன் பிறவி மீதே ஆத்திரம் வருகிறது.

ஒலிபெருக்கியின் இசைத்தட்டு முழக்கம். மனிதர்களின் கசகசப்பு சப்தங்கள்.

நாட்களை எதிர்பார்த்தது போய்... இப்போது நிமிசங்கள்...

''பொண்ணைக் கூட்டிட்டு வாங்க'' என்ற பல குரல்களில் கூவல்.

''சீதம்மா... போ. கூட்டிட்டு வா.'' பெரியசாமியின் குரல்.

தோழிகள் அழைத்துச் செல்ல, முழுமைபெற்ற அலங்காரத்துடன் ஒரு தேவதையாக...

மணவறையில் உட்கார்ந்தாள். குரல்களில் ஓர் அவசரம் தெரிந்தது.

''சீக்கிரம் சீக்கிரம்'' என்று துரிதப்படுத்தும் குரல்கள். ''ஏய்... மைக்செட்காரனை மங்கள ரிக்கார்டு போடச் சொல்லுங்கப்பா'' என்ற பெரியசாமியின் குரல்.

சம்பந்தி குறுக்கிட்டார். அந்தக் குறுக்கீடு ஓர் அபசகுனமாய்... ஓர் இடறலாய்...

''அதுக்குள்ளே பேசுனதைக் குடுத்துட்டா நல்லது.'' தீர்மானமாக அவரின் குரல். அந்தக் குரலின் கண்டிப்பு. அந்த சூழ்நிலையின் உணர்வையே மாற்றியது.

திடுக்கிட்டுப் போய் நிமிர்ந்தாள் ராஜி.

''என்ன சொல்றீக சம்பந்தி?''- பெரியசாமியின் துடித்துப்போன வேதனைக்குரல்.

''பேசுனபடி மூவாயிரம் வரணுமே, இன்னும் தரல்லியே.''

''நடக்கட்டும்; நா தர்ரேன்.''

''முடிஞ்சபிறகு, தருவீகளா, மாட்டீகளாங்கிறதா இப்பப் பிரச்னை? பேசுனபடி குடுத்துடுங்க... மனுஷனுக்குப் பேச்சுப்படி நிக்கணும்னு நெனப்பு வேண்டாமா?''

''நா இல்லேன்னு சொல்லலியே... பொறுங்க... முடியட்டும். ரெண்டு வாரத்துலே எப்படியாச்சும் ஏற்பாடு பண்ணிக் குடுத்துடுறேன்...''

''அதெல்லாம் முடியாதுங்க. பேசுனா பேச்சுப்படி இருக்கவேணும். அதுதான் முக்யம்.''

''நா, எவ்வளவோ ட்ரை பண்ணிப் பார்த்தேன். முடியலை.''

''அதுக்கு நான் என்ன செய்யறது?''

பேச்சு வளர்ந்தது. பேச்சில் உஷ்ணம் ஏறியது. வார்த்தைகள் தடித்துச் சிதறின.

ராஜி பயந்துபோனாள். மனசெல்லாம் அதிர்ந்து விதிர் விதிர்த்து... குலுங்கி... நடுங்கி... பேய் மழையில் சிக்கிக்கொண்ட கோழிக் குஞ்சைப்போல...

கூட்டம் திக்பிரமை பிடித்து நின்றது. இந்தக் கிராமத்தில் இந்த மாதிரி அவலம் சரித்திரத்திலேயே கிடையாது. இது புதிது. நகரத்துப் பழக்கம். புரியாமையுடன் திகைத்து நின்றது.

பெரியசாமி மனசெல்லாம் குழம்பி... எதுவும் பேசமுடியாதவராகி... சக்தியையெல்லாம் இழந்தவராகி... குண்டடிபட்ட ஊமையாக...

சம்பந்தி அதட்டலுடன் சீறினார்:

''என்னடா... இப்படி முழிச்சிக்கிட்டு உட்கார்ந்து இருக்கே... எந்திடா.''

ராஜி, முகமெல்லாம் வெளுத்துப் போனாள். திகிலுடன் மாலையுடன் அமர்ந்திருந்த அவரைப் பார்த்தாள்.

அவனும், இவளைப் பார்த்தான். பார்வையில் கருணையா... தர்மசங்கடமா... பயமா...?

திகிலில் ராஜி உறைந்துபோனாள்.

''எந்திடா மடப்பயலே...'' சம்பந்தியின் காட்டுக் கூச்சல்.

''என்னடா, செவிடா? எந்திடா.''

''அப்பா!''- அவனது குரல். அந்தக் குரலின் நிதானம், அந்தச் சூழலுக்கே விநோதமாக இருந்தது. பொங்கி வழிகிற பாலில் விழுந்த நீர்த் துளிகளாக... சூழலையே மாற்றிவிட்டது.

''எனக்குத் தாலி கட்டப்போற வயது. அதட்டுன உடனே தலையையாட்டிக்கிட்டு வர்ரதுக்கு... நா ஆட்டுக் குட்டியில்லே...''

அவரது அப்பாவின் முகத்தில், சுருக்கங்கள் விரிந்துவிட்டு ஒடுங்குகின்றன. இருள் படிகிறது. எக்களிப்புடன் சுழன்ற விழிகள், எதிலோ முட்டிக் கொண்டதைப்போல திகைத்துக் குழம்பி... அலங்க மலங்க தவித்தன... சுரத்திழந்துபோய் கேட்டார்:

"என்னடா...சொல்றே?"

மணமகன் தீர்மானமாகப் பேசினான். பதுங்கிக் கிடந்த உணர்ச்சிகளின் பீறிடலாக... துல்லியமாக ஒலித்தன:

"அன்னிக்கு நீங்க பேச்சு வார்த்தை நடத்துனதே எனக்குப் பிடிக்கலே. ஆனாலும் கஷ்டப்பட்டு வளர்த்த பெரியவங்க மனசைக் கஷ்டப்படுத்த வேண்டாம்னு, கம்முன்னு இருந்தேன். ஆனா... அது ரொம்ப வரம்பு கடந்து போகுது. உங்க சூதாட்டத்துக்கு பகடைக்காயா நா உருள முடியாது. நா வெறும் ஜடமில்லே! மனுஷன். சிந்திக்கத் தெரிஞ்ச மனுஷன்!..."

அப்பாவின் முகம் காகிதமாய் வெளுக்கிறது. தாங்கமுடியாத அவமானம், ஆயிரம் ஊசிகளாக நெஞ்சைக் குத்திக் குடைகின்றது.

'அவர்' ஒரு சிகரமாய்... மனசுக்குள் உயர்வதை ராஜி உணர்கிறாள். கன்னத்தில் வழியும் சீழை, ஏதோ ஓர் அன்புக்கரம் துடைப்பது போன்ற பிரமை.

அந்தக் கரத்தின் பரிவு... கடலாய் ஆழ்ந்து விரியும் கருணை... அவளை மெய்சிலிர்க்க வைக்கிறது.

...அவன் தொடர்கின்றான்.

"இன்னிக்கு நடக்கிற விழா, ஆயுள் பூராவும் நாங்க நடத்தப் போற வாழ்க்கைக்கான துவக்கம், அஸ்திவாரம். அந்த அஸ்திவாரமே இப்படிப் பேரத்திலேயும், மிரட்டல்லேயும் துவங்குனா... அன்பும் பாசமுமான வாழ்க்கையை நாங்க வாழமுடியாது. சுயநலமும், மிருக வெறியுமான வியாபாரந்தான் நாங்க நடத்த முடியும்...

"அப்பா, முடிவா சொல்றேன்... உங்களுக்கு என்னோட நலன்லே அக்கறையிருந்தா... இருந்து எங்களை ஆசீர்வதியுங்க. அம்புட்டுத்தான் சொல்வேன்."

ஒரு கனத்த மௌனம்...அங்கு நிலவியது. மூச்சுச் சப்தங்கள்கூட துல்லியமாகக் கேட்டது.

கிராமத்துப் பெரியவர் ஒருவர் மௌனத்தை உடைத்தார்:

"அப்புறம் என்னப்பா... மாப்பிள்ளையே சொன்னபிறகு... மறுபேச்சு என்ன கிடக்கு? மங்கள ரிக்கார்டை போடுங்க" என்றார். அவர் குரலில் சந்தோஷமும், பெருமிதமும் ததும்பியிருந்தது.

பெரியசாமிக்கு நெஞ்சில் உயிர் வந்தது...

கூட்டம் மீண்டும் கசகசத்தது.

ராஜி... தன்னுள் உடைந்து... உருகி... கரைந்து... மானசீகமாக அவன் நெஞ்சில் வழிந்தாள்.

அவனின் கருத்த முகம்... இப்போது சூரியனாகப் பிரகாசிப்பது போலிருந்தது.

–செம்மலர். ஏப்ரல். 1981



# 14. கடிவாளம்

இன்றைக்கு என்னமோ, மாடசாமிக்குக் கண்ணில் உறக்கம் ஒட்டவேயில்லை. மனத்துக்குள் ஏகப்பட்ட நச்சரிப்பு. தவறு செய்து விட்டோமோ என்ற ரகசியமான உளைச்சல்கள். புரண்டு புரண்டு படுத்தான். ம்ஹூம்!

விடிவிளக்கின் மங்கலான பச்சை வெளிச்சத்தையே பார்த்தான். மனைவியும் குழந்தையும் பாயில் படுத்திருப்பது நிழலாகத் தெரிந்தது. அயர்ந்த தூக்கம். பார்க்கப் பொறாமையாக இருந்தது.

பஸ்ஸை விட்டு இறங்கி, பணிமனையில் கணக்கு முடித்துவிட்டு வந்தானென்றால்... சாப்பிட்டதும் படுத்துவிடுவான். அடித்துப்போட்டமாதிரி உறங்கிவிடுவான். விடிந்தபிறகுதான், மனைவி, குழந்தை, வாழ்க்கையெல்லாம்!

அப்படித் தூங்குகிறவன்தான், இன்றைக்கு என்ன இழவோ... உறக்கம் வந்து ஒட்டவே மாட்டேன் என்கிறது. மனத்துக்குள் தவிப்பு. கிடைத்த பொக்கிஷத்தைப் பறிகொடுத்துவிட்ட மாதிரி ஒரு நமைச்சல். அமைதியிழந்த நினைவுகள், பல திசைகளில் ஓடியலைகின்றன.

'ஒருத்தன் சொத்தை ஒளிச்சு வைச்சா... அது நிலைக்கவா செய்யும்? நோயோ நொடியோ வந்து, அதையெல்லாம் வாரிச் சுருட்டிக்கிட்டு ஓடிவிடாதா? அதுலே என்ன பெருமை இருக்கு? கண்டக்டர் உத்யோகமிருக்கு. கை நிறைஞ்ச சம்பளம். காலமிருக்கு; நாளும் இருக்கு; உழைச்சு எம்புட்டோ சம்பாதிக்கலாம். அடுத்தவன் சொத்தை அமுக்கிச் சம்பாதிக்கிறதும், ஒரு சம்பாத்தியமா? மனச்சாட்சி கொத்திப் பிடுங்காதா? ச்சே!

இப்ப... நாலு பேராச்சும் யோக்கியன்னு சொல்லுவாக. அது போதாதா? ஒரு மனுசன் வாழ்க்கையிலே சாதிக்கவேண்டியது அதுதானே...'

நியாயப்படுத்துகிற இந்த நினைவை, வெட்டி முறித்துக் கொண்டு, மற்றோர் நினைவு; லௌகீக வாழ்வின் வெக்கையில் அடிபட்டுக் கன்றிப்போன அந்த நினைவு; கர்ணகடூரமாய்க் கைகொட்டிக் கேலி செய்தது.

'யோக்கியன்னு பேரு வாங்கி, என்ன செய்யப்போறே? யோக்கியன்னு சொல்லிக்கிட்டுக் கடை முன்னாலே நீ நின்னா, அரிசி,

பருப்பு அள்ளி விடுவாங்களா? ஒலகத்துலே யோக்கியனுக்குன்னு சல்லிக்காசு சலுகையாச்சும் உண்டா? ஊரெல்லாம் கூடி உனக்குக் கிரீடமா தூக்கித் தரப் போறாக? இப்படியும் பொழைக்கத் தெரியாத பயலும் இருப்பானா, கிடைச்சதையும் குடுத்துட்டு நிக்கிற கிறுக்கன் மாதிரி அலையுறானேன்னு ஒன்னைக் கேலியும் கிண்டலும்தானே செய்வாக?'

மனம் ஒரு நிலைப்படவில்லை.

மேஜையிலிருந்த கைக்கடிகாரத்தை எடுத்துப் பார்த்தான். மணி 1-15. வயிறு பசிப்பது போலிருந்தது. உதடு, தொண்டையெல்லாம் உலர்ந்து போயிருந்தது. லைட்டைப் போடாமலேயே அடுப்பங்கரைக்குள் நுழைந்து, ஊகத்திலேயே கையால் துழாவி, செம்பை எடுத்துத் தண்ணீர் குடித்தான். செம்பை மறுபடி கீழே வைக்கிறபோது, அந்தச் சப்தத்தில் லட்சுமி தலையைத் தூக்கிப் பார்த்தாள்.

''என்ன, இன்னும் தூங்கலியா?''

''தூக்கம் வரலை.''

''பெறகு?''

''ஒண்ணுமில்லே. தூங்கிடுவேன்.''

அவள், விட்ட இடத்திலிருந்து தூக்கத்தைப் பிடித்தாள். சீரான மூச்சுச் சப்தம் வருகிறது. இவன் கட்டிலில் உட்கார்ந்து சிகரெட்டைப் பற்றவைத்துக் கொண்டான். மனம் அதுபாட்டுக்குக் கண்டமேனிக்கு ஓடிக்கொண்டிருந்தது...

பஸ் நிலையத்தில் நின்று கொண்டிருந்த டவுன் பஸ்ஸில், மாடசாமி டிக்கெட் போட்டுக்கொண்டிருந்தான். டைம் கீப்பர் ஆபீஸில் டிரிப் சீட்டில் கையெழுத்து போட்டுவிட்டு, அதோ டிரைவர் வருகிறார். அவரை மறித்துக்கொண்டு இன்னொரு டிரைவர்.

''என்ன பாஸ், உங்க ஜோடி யாரு?''

''மாடசாமி?''

''எந்த மாடசாமி?''

''நம்ம சிரிச்ச மூகம்!''

''அட நம்ம சிரிச்ச மூகமா? பெரிய பேஜார் இல்லே?''

''அதை ஏன் கேட்கே? ஒரே போர்...''

அவர்கள் கிண்டலாய்ச் சிரித்துக்கொள்வதை, இவன கவனிக்கிறான்.

மாடசாமின்னு பெயரைச் சொன்னால் ஆளைத் தெரிய மாட்டேங்குதோ...? சிரிச்ச முகம்னு சொன்னால்தான் தெரிகிறதோ? இவன் சிடுசிடுப்பான ஆளாம். எந்நேரமும் உர்ரென்று இருப்பானாம். சிரிப்பையே இவனிடம் பார்க்க முடியாதாம். அதைக் கேலி செய்கிற பட்டப் பெயர்தான், சிரிச்ச முகம்.

மனம் விட்டுச் சிரிச்சுப் பேசி, கலகலப்பா இருக்குற மாதிரியா... தொழிலும், வாழ்க்கையும் இருக்கு? அந்த லட்சணத்துலேயா மனுஷங்களும் இருக்காங்க? நல்ல வாழ்நிலையிலேயும், நல்ல சூழ்நிலையிலேயும்தானே நல்ல மனநிலை அமையும்? சுற்றிலும் தீ பற்றிக்கிட்டு எரிஞ்சுக்கிட்டிருக்கும்போது, நடுவுலே நின்னு குளுமையாச் சிரிக்கவா முடியும்?

பஸ்ஸிலே ஏறி உக்கார்கிற சகலரும், கண்டக்டரைப் பகையாளியை பாக்குறமாதிரித்தானே பாக்குறாக? அனுதாபமான ஒரு பார்வையைக்கூடப் பார்க்க முடியலியே.

அறுபது பைசா டிக்கட்டுக்கு ஐந்து ரூபாய் நோட்டு. 1. 60 டிக்கட்டுக்கு இருபது ரூபாய் நோட்டு. அதுவும் மனுசனா மதிச்சு நீட்டுவாகளா? ம்ஹூம்! இளப்பமாய்-அலட்சியமாய் நீட்டுவாக. எல்லாரும் நோட்டாகவே நீட்டினா... சில்லறைக்கு நான் எங்க போக? கஜானாவா எம் பைக்குள்ளே இருக்கு? இருபத்தஞ்சு ரூபாய்க்குச் சில்லறை மாத்திப் போட்டாலும், அடுத்த டிரிப்லேயே காலியாயிடுது. ஒவ்வொரு டிக்கட்டுக்கும் சில்லறை சரிபார்த்துக் கொடுக்கிறதுக்குள்ளே, மூளையே கசங்கிப்போகுது.

இதுலே ஐந்து பைசாக் கொறைஞ்சாக்கூட முணுமுணுப்பு. காய்ஞ்சு போன மனங்களிலிருந்து பாய்ஞ்சு வர்ற வசவுகள். பெருக்கல் கணக்கு போட்டுப் பார்த்து, தினமும் கண்டக்டர் நூறு ரூபாய்ப் பொட்டலத்தோடு வீட்டுக்குச் செல்வதாகப் பொருமிப் புகைஞ்சு பேசற பேச்சுகள்... இப்படி, குமைஞ்சு குமைஞ்சு, அடங்குற- உறையுற- உணர்ச்சியெல்லாம், மூஞ்சியிலே வந்து சிடுசிடுப்பா வந்து நின்னுக்கிடுது. நான் என்ன செய்ய?

ஸ்டியரிங்கில் கை வைத்த நிலையில், ''போகலாமா'' என்றார் டிரைவர். மாடசாமி 'உம்' என்றான். விசிலடித்தான். பஸ் உயிர் பெற்றவுடன்-

வெளியே சிதறி நின்ற பயணிகள் 'மொளோ' ரென்று ஓடி வந்து இடித்துக்கொண்டு தொற்றினர்.

"உள்ளே வாங்க. ஏறுங்க. டிக்கட், டிக்கட்... எங்கே போகணும்? தெண்ணூறா? சில்லறையில்லியா? பதினைஞ்சு பைசா இருக்கா? அதுவுமில்லியா? படியிலே நிக்குறது யார்? எத்தனை தடவை சொல்றது? உள்ளே வாய்யா."

மாடசாமி என்ற மெஷின் ஓடத் துவங்கியது. ஓட ஓடச் சூடேறிக்கொண்டிருந்தது. நெருக்கியடித்துக்கொண்டு உட்கார்ந்திருந்த மனிதர்கள். நடுவில் ஆண் - பெண் வித்தியாசமில்லாமல் அப்பிப் போய் நின்ற-தொங்கிய- மனிதர்கள்.

"டிக்கட் யாருக்கு வேணும்? கேட்டு வாங்குங்க... படிக்கட்டுலே யாரு டிக் கட் எடுக்கணும்? சீக்கிரம்."

மாடசாமி இன்வாய்ஸ் எழுதுவதற்கு முன்பு, கடைசி வரைக்கும் கேட்கிற மாதிரி, "டிக்கட் வேணுமா? யாரும் டிக்கட் எடுக்க வேண்டியிருக்கா?" என்று கத்தினான். நிற்க இடமில்லை. டிரைவர் பக்கத்தில் ஒரு கம்பியில் முதுகைச் சாய்த்து இன்வாய்ஸை எழுதினான். இடது உள்ளங்கைக்குள் அடங்கியிருந்த டிக்கட் கற்றைகளில் நம்பரைச் சரிபார்த்துச் சரிபார்த்து எழுதிக் கொண்டிருக்கும்போதே...

டிரைவருக்கு இடது பக்கம் ஒற்றைச் சீட்டில் உட்கார்ந்திருந்த பெரியவர், "ஆமர்நாட்டுக்கு ஒரு டிக்கட்" என்று இருபது ரூபாயை நீட்டினார்.

மாடசாமிக்குள் தீ பிடித்த மாதிரியிருந்தது.

"எங்க ஏறினது?"

"செவகாசி?"

"இந்நேர வரைக்கும் டிக்கட் வாங்காம, எங்க போனீரு? தொண்டை காயக் கத்துனேனே, காதுலேவுழலை?"

பெரியவர் முகத்தில் மெல்லிசாக மிரட்சி பரவியது. சட்டென்று அது சினமாக மாறிக்கொண்டது. "இங்க நீங்க வந்தாத்தானே, வாங்க முடியும்?"

"இங்க நாலு தடவை வந்தேன்லே? ஒம்ம பக்கத்துலே இருக்கிறவுகளுக்கெல்லாம் டிக்கட் கொடுத்தேன்லே? நீரு ஏன் வாங்கலே?"

"நீங்க கேட்டாத்தானே நான் வாங்க முடியும்?"

"யோவ், வாங்காம இருந்ததுமில்லாம, சண்டி வழக்குமா பண்றீரு?"

மாடசாமி சீற, பெரியவரும் பாய, வண்டிக்குள் வெக்கை பரவியது. டிரைவர் குறுக்கிட்டு, மாடசாமியைச் சமாதானப் படுத்தினார்.

"சரி, சரி... பேச்சை நிறுத்திட்டு டிக்கட்டைக் கொடுத்துத் தொலை!"

இவனுக்கு எரிச்சல் எரிச்சலாய் வந்தது. எரித்துவிடுவதைப் போல அவரைப் பார்த்தான். "சில்லறையில்லியா?"

"இல்லே!"

டிக்கெட்டைக் கிழித்துக் கொடுத்தான். விரலிடுக்கில் நீளவாக்கில் மடித்து வைத்திருந்த ரூபாய்களில் உருவி உருவிப் பதினெட்டு ரூபாயைக் கொடுத்தான். பையைத் திறந்து சில்லறையைக் குலுக்கினான்.

"பத்துப் பைசா இருக்கா? அம்பது பைசாத் தாரேன்."

"இல்லியே!"

பையைக் குலுக்கிக் குலுக்கிப் பார்த்தான். முப்பத்தைந்து காசுதான் தேறியது. கொடுத்தான்.

பெரியவர் உள்ளங்கையில் வைத்து எண்ணி எண்ணிச் சரிபார்த்து விட்டு, "இன்னம் அஞ்சு பைசா?" என்றார்.

"இல்லே."

"நான் அஞ்சு பைசாக் குறையக் கொடுத்தா... நீங்க டிக்கட் தருவீகளா?"

மாடசாமிக்குச் சுரீரென்று அடிபட்டதுபோல் இருந்தது. உள் மனம் வலித்தது. 'பொறு, பொறு' என்று லகான் போட்டுக் கொண்டிருந்த உள் மனமே அலறிவிட்டது. விருட்டென்று நிமிர்ந்த பார்வையில் அக்கினி...

வெடித்து விட்டான். வார்த்தைகள் மனத்தின் அனலாய்ச் சிதறின. பெரியவரும் விடாக்கண்டனாக வார்த்தைக்கு வார்த்தையாக மோதினார். 'நீ, வா, போ' என்று தரம் தாழ்ந்து ஆபாசமாயிற்று.

மற்றவர்கள் தலையிட்டனர். இருவரையும் அடக்கினர்; சமாதானப்படுத்தினர். பஸ்ஸுக்குள் வெக்கை குறைந்தது. குண்டும் குழியுமான ரோட்டில் பஸ், அது பாட்டுக்கு ஓடிக்கொண்டிருந்தது. கிராமங்களைக் கடந்தது. நின்றது. இறக்கியது. ஏற்றியது. போய்க் கொண்டேயிருந்தது.

ஆமர்நாடு போய் விட்டுச் சிவகாசி வந்து சேர்ந்த பஸ், நிலையத்துக்கு வெளியே நின்றது. இந்த டிரிப்போடு இவர்கள் பணி நேரம் முடிகிறது. அடுத்த டிரைவர், கண்டக்டரிடம் வண்டியை ஒப்படைக்க வேண்டும்.

டிரைவர் இறங்கி, டீக்கடையை நோக்கிப் போய்விட்டார். பயணிகளெல்லாம் இறங்கியபிறகு, மாடசாமி வழக்கம்போல் ஒவ்வொரு சீட்டாகப் பார்த்தான். குனிந்து சீட்டுக்கு அடியிலும் பார்த்து வந்தான். டிரைவர் சீட்டுக்கு இடது பக்கமுள்ள ஒற்றைச் சிட்டிற்கும், பாடிக்கும் நடுவில்-இடுக்கில்-ஒரு சிறிய பேப்பர் பொட்டலம்.

அலட்சியமாக எடுத்து விரித்தான்; உடம்பெல்லாம் அதிர்ச்சி, மின்சாரமாய் ஓடிப் பரவியது.

தங்கச் செயின், புத்தம் புதுசாக ரெட்டை வடம். உள்ளங்கையில் தூக்கிப் போட்டுப் பார்த்தான். அஞ்சு பவுனுக்குக் குறையாது. மனத்துக்குள் பிரளயம். ஓங்கியடிக்கிற அலையாக நினைவுகள்.

''கல்யாணமாகி நாலு வருஷமாகுது. ஒரு மூக்குத்தியாச்சும் வாங்கி, இந்தான்னு தந்திருக்கீகளா? நீங்களும உங்க சம்பாத்தியமும்...''

அற்பத்திலும் அற்பமாய்த் தனக்குத் தன்னையே உணர்த்துகிற லட்சுமியின் அந்தச் சொற்கள், நெஞ்சுக்குள் ஒலித்தன.

''இந்தா, அஞ்சு பவுன் நகை'' என்று நீட்டினால்... லட்சுமியின் மனம் எப்படி மலர்ந்து வெடிக்கும்... ஆனந்த மின்னல் பளிச்சிடுகிற அவளது கண்கள். ஆச்சரியப் புன்னகை நிறைந்து பிரகாசிக்கிற சிவந்த முகம். சிரிப்பு மலர்கள் பூத்து, ஈரக்குளிர்ச்சியாக மின்னுகிற உதடுகள்...

மயங்கிய மனதில் நறுக்கென்று கிள்ளுவதைப்போல் ஓர் உணர்ச்சி. மனத்துக்குள் சப்பென்று விழுகிற ஓர் அடி. 'சீ, நாயே! அடுத்தவன் நகையை அமுக்கி, ஒம் பொண்டாட்டி கழுத்திலே போடவா ஆசைப்படுதே? நீயெல்லாம் மனுசந்தானா? சோத்தைத்தான் திங்கியா?'

உள் மனத்தின் இந்த உலுக்கலில், அப்படியே கலகலத்துப் போனான்.

பணிமனைக்குப் போகிற ஒரு பஸ்ஸில் ஏறிக்கொண்டான். மனசுக்குள் ஒரு திகிலான பரவசம் சுமையாக அமுத்த... நடுக்கத்துடன் கணக்கு முடித்தான்.

மானேஜர் அறைக்குள் நுழைந்தான். வெள்ளைப் பேப்பரில் நகைப் பொட்டல விவரம் எல்லாம் எழுதிக் கையெழுத்திட்டு, மானேஜரிடம் நகையையும் ஒப்படைத்தபிறகுதான், மனத்துக்குச் சுலபமாகச் சுவாசிக்க முடிந்தது.

பாரத்தை இறக்கி வைத்துவிட்ட நிம்மதி. அலுப்பு தீரக் குளித்த மனச்சாந்தி...

அப்போது சாந்தியடைந்த மனம், இப்போது அலைபாய்கிறது. நாணயமாய் ஒப்படைத்த யோக்கியம், சரிதானா? கிறுக்குத்தனமானது தானா? நாலு பேரு பாராட்டுவார்களா? பிழைக்கத் தெரியாதவன் என்று நமுட்டுச் சிரிப்புச் சிரிப்பார்களா?

தேள் கடிபட்ட குரங்காக, மனம் ஆடிக் குதித்து அலை மோதுகிறது. தூக்கத்தை அண்டவிடாமல் நிம்மதியைப் பிறாண்டுகிறது.

லட்சுமிக்குத் தெரிந்தால்...என்ன சொல்வாள்? இளப்பமாய்ச் சொல்வாளோ... 'கடவுளாப் பாத்துக் கையிலே தூக்கிக் கொடுத்ததையும் தொலைச்சிட்டு வந்து நிக்கிறீகளே... நீங்க ஒரு ஆம்பளைதானா?' என்று சீறுவாளோ...

சிகரெட்டை அணைத்தான். அலைந்து தவிக்கிற மனத்தோடு படுத்தான். வலுக்கட்டாயமாக இமைகளை மூடினான். மூடிய இமைகளுக்குள் ஏதேதோ காட்சிகள்...

இரண்டு மூன்று நாட்கள் ஓடிவிட்டன. சினிமாவுக்குப் போய் விட்டு, பத்துமணிக்குமேல் வீட்டுக்கு வந்தான்... அதிசயமாய் விளக்கு எரிந்தது.

இன்னும் லட்சுமி தூங்கலியா...

காத்திருந்தவளைப்போல, உற்சாகமாக எதிர்கொண்டாள்.

"எங்க போனீக, இந்நேரம் வரை?"

"ஏன், சினிமாவுக்குத்தான். எதுக்குக் கேக்கே?"

"உங்களைத் தேடி ஒருத்தர் வந்து, ஏழு மணியிலேயிருந்து காத்திருந்தாரு..."

"என்னவாம்?"

"அவரு சொன்னதைக் கேட்டு எனக்கு மனமே கலங்கிப் போச்சு. உங்களை நெனச்சா, எனக்கு எம்புட்டுப் பெருமையாயிருக்கு, தெரியுமா?"

தலையும் புரியாமல், வாலும் புரியாமல் தவித்த மாடசாமி, சிடுசிடுப்பாய்ச் சீறினான். ''என்னங்கிறதைச் சட்டுன்னு சொல்லித் தொலையேன்!''

வீட்டு வாசலில் யாரோ நுழைகிற செருப்புச் சப்தம், திரும்பினான். பெரியவர். அன்று பஸ்ஸில் இவனுடன் சண்டை போட்ட அதே பெரியவர். ஆனால், ஆள் ரொம்பக் கலகலத்துப் போயிருந்தார். கண்ணில், கனத்து நின்ற சோகம். துன்பத்தில் புரட்டியெடுக்கப்பட்ட வாட்டம், முகத்தில்.

விளங்காமையோடு திகைத்தான்.

''என்ன ஐயா?''

வெட்க உணர்வும், நன்றி உணர்வும், முரண்பட்டுத் ததும்ப, கையெடுத்துக் கும்பிட்டார்.

''கோயில் கட்டிக் கும்புடணும் தம்பி, உங்களை... எங்க குடும்பத்துக்குக் குலதெய்வமே... நீங்கதான்...'' அவர் கண்ணிமைகள் ஈரத்தில் நனைந்தன.

''கையிலே கிடைச்ச கால் ரூவாயைக்கூட கண்காணாம அமுக்கிக்கிடுற இந்தக் கலி காலத்துலே... அஞ்சு பவுன் தங்க நகை கெடைச்சும், அதை நாணயமா ஒப்படைச்சிருக்கீகளே தம்பி... உங்ககூட அஞ்சு பைசாவுக்காக அற்பத்தனமாச் சண்டை போட்டேனே அன்னிக்கு...''

''அதெல்லாம் இருக்கட்டும்... அப்ப... அந்த நகை உங்களுடையதுதானா?''

''ஆமா தம்பி, ஒன்றரை வருஷமா நகைப் பிரச்னையிலே என்னோட ஒரே பொண்ணு வாழாவெட்டியா வந்து கிடந்தா. ஊர்லே பஞ்சாயத்துப் பண்ணி அஞ்சு பவுன் நகை போட்டு புருஷன்கூட அனுப்புறதுன்னு முடிவு செய்தாக. தாய்க்குத் தாயா இருந்து காலம் பூரா சோறு போட்ட பூர்வீகப் புஞ்சையை வித்து, அந்தப் பணத்துலேதான் அன்னிக்கு நகை வாங்கிக்கிட்டு ஊர் போனேன்.

''நகை தொலைஞ்சதுன்னு தெரிஞ்சவுடனே... எம் பொஞ்சாதி மருந்தைக் குடிச்சு, ஆஸ்பத்திரியிலே அரை உசுராக் கிடக்குறா...''

''அய்யய்யோ... அப்புறம்?''

''நீங்க ஒப்படைச்ச நகையிலேதான் எம்பொண்ணோட வாழ்க்கையும், வம்ச விருத்தியும் அடங்கியிருக்கு தம்பி...''

"சரி...அதுக்கு நான் என்னமும் செய்யணுமா?"

"மானேஜர்கிட்டே பேப்பர் எழுதிக் குடுத்தேன், அவர் ரொம்ப நேரம் என்னை விசாரிச்சாரு. உங்களையும் விசாரிக்கணும்னு சொன்னாரு..."

"அவ்வளவுதானே! நீங்க அன்னிக்கு அந்த சீட்லேதான் உக்கார்ந்திருந்தீக. அந்தப் பொருள் உங்களுடையதா இருக்க நியாயமிருக்குன்னு, மானேஜர்கிட்டே சொல்லிடுதேன்... போதுமா அய்யா...? கவலைப்படாம போங்க!"

"அதுபோதும் தம்பி... உங்களை மாதிரி ஒண்ணு ரெண்டு நல்ல ஆத்மாக்களாலேதான் மழையும் பெய்யுது. மண்ணும் வெளையுது. நீங்க செய்யுற புண்ணியமே உங்களையும், உங்க குடும்பத்தையும் என்னென்னைக்கும் செழிப்பா வைச்சிருக்கும் தம்பி... நான் வாரேன் தம்பி, நான் வாரேம்மா..."

அவர் போய்விட்டார். லட்சுமியின் பெருமிதமான பார்வையைச் சந்தித்தான். தர்மமே கை நீட்டித் தங்கக் கிரீடத்தைத் தலையில் சூட்டுவது போலிருந்தது. மனித இனமே கையெடுத்து வணங்குவதைப்போல ஓர் உணர்வுச் சிலிர்ப்பு...

தான் செய்த ஒரு சிறிய செயலில்... ஒரு பெண்ணின் வாழ்க்கையே புதிதாகக் காலூன்றியிருப்பதை நினைக்கையில்... அவனுக்கே பெருமிதமாக இருந்தது.

இப்போது- அவனுள் ஊசலாட்டமில்லை. தெளிந்த நீரோடையாய் ஒரே திசையில் ஓடியது, மனம். மனத்தின் பெருமிதத்தில் அவன் முகமெல்லாம் புன்னகை.

-கல்கி, 24/4/88



# 15. ஒரு நகர்வுக்குக்கூட...

வேலை முடிந்து வயக்காட்டை விட்டு வெளியேறும்போதே, பொழுது விழுந்துவிட்டது. மேற்கு மலைத் தொடருக்குள் வெயில் சுருண்டு படுத்துக்கொள்ள, மேகத்து வெளிச்சம் மட்டும் மிச்சமாய் இருந்தது. ஒரு தவிப்போடு முத்தக்கா ஊரை நோக்கி, 'வேகு வேகு' என்று நடந்தாள். இவள் மனசுக்குள் ஏங்கி வாடிப்போன மகனின் முகம் உறுத்தியது.

தலையில் சின்னதாக ஒரு முள் விறகுக்கட்டு. கட்டைப் பிடித்திருந்த வலது கையில், தூக்குச் சட்டியும் ஆடி ஆடித் தொங்கியது. விடிந்ததிலிருந்து ஓடிஓடி பருத்தி எடுத்ததில் இரண்டு கைப் பெரு விரலும் காயம்பட்டதுபோல வலித்தது. குனிந்து குனிந்து நிமிர்ந்ததில், இடுப்பெல்லாம் கடுப்பு. நடக்கிற நடையில் தொடைச்சதையிலெல்லாம் ரணமெடுக்கிறது. முகத்தில் உலர்ந்துபோன வியர்வையின் உப்பு வரிக்கோடுகள்.

தூரத்தில் மங்கலாய் கிராமம். இன்னும் ஒரு மைல் இருக்கும். போய்ச் சேருவதற்குள் கருகருவென்று இருண்டுவிடும். 'பாவம், ராமசாமி' என்று மகனை நினைத்து மருகிய மனசு, அவளை முந்திக் கொண்டு ஓடியது.

பள்ளிக்கூடம் விட்டவுடன்... மற்ற பிள்ளைகளைப் போல அவனும் வேகமாய் வந்து பார்த்திருப்பான், பூட்டிக் கிடக்கிற கதவை.

வந்தவுடனேயே அம்மா மடியில் விழுந்து, பள்ளிக்கூடத்தில் நடந்ததையெல்லாம் சொல்லிச் சொல்லி மகிழ்கிற ஆசைத் துடிப்போடு ஓடிவந்திருப்பான். சிட்டாக சிறகடித்து வந்தவன், கதவில் முட்டிய ஏமாற்றத்தில் சுருங்கிப் போய் சிறகொடிந்து நிற்பான்... பாவம்.

பைக்கட்டை வாசலில் போட்டுவிட்டு, தண்ணிகூட குடிக்க வழியில்லாமல் உதட்டை நக்கிக்கொண்டு விளையாட்டு ஆசையில் தெருவுக்குப் போயிருப்பான். தெருப் புழுதிகளில் கூட்டாளிச் சிறுவர்களோடு ஓடி விளையாடி, சண்டை போட்டு களைத்துப் போய்...

''அவரவர் வீட்டுக்கு அவரைக் கஞ்சி குடிக்கப் போறோம்'' என்று ராகம் போட்ட பாடலோடு, குழந்தைகள் குதூகலமாய்ப் பிரிந்து போயிருக்கும். ராமசாமி அப்போதும் வந்து, பூட்டிய கதவில் மோதி

மனசு உடைஞ்சிருப்பான். தாய் முகத்தைப் பாக்க முடியாம, தண்ணி கூடக் குடிக்க முடியாம, "எம்மா... மிட்டாய் வாங்க துட்டு" என்று சிணுங்க, அழ, ஆளில்லாம தேம்பி நிப்பான்...

நினைக்க நினைக்க முத்தக்காவுக்கு மனசு மருகியது. வாடிச் சோர்ந்த ராமசாமியின் பிஞ்சு முகம் கண்ணுக்குள் நின்றது. மனசெல்லாம் தவித்தது. "இந்த பாதகத்தி மானம் பாத்த பூமியிலே கூலிக்காரியா பொறந்து தொலைச்சுட்டேனே... புள்ளைக்கு நல்லது செஞ்சு பாக்காட்டாலும், 'அம்மா'ன்னு ஆவலோடு வர்ற புள்ளையை 'என்னடா ஏங்கண்ணு'ன்னு ஆசையா தூக்கி குளுர வைக்கிற தாயா இருக்கக்கூட இந்தச் சிறுக்கிக்கு லபிக்கலியே... பாவிப்பய தெய்வம், என்னைச் சீரழிச்சு கூத்துப் பாக்குதே..."

பழசாய்ப்போன தோல் செருப்பு, நடைக்கேற்ப டபக் டபக்கென்று சத்தமிடுகிறது. நடையைத் துரிதப்படுத்தினாள்.

மத்த கூலிக்காரப் பொட்டச்சிகளெல்லாம்... வேலைக்குப் போய்ட்டு நாலு மணிக்கெல்லாம் வீடு வந்து சேர்ந்துருவாக. நா மட்டும் தினசரி இந்தத் தூரந்தொலைவான காட்டுக்கு வந்து... புள்ளை மனசை ஏங்க வைச்சு, இருட்டுன பிறகு வூடு போய்... அடக்கொடுமையே...

இந்த வழக்கத்தை முறிக்க முடியலியே... தாலி கட்டுன அந்தப் பாவியால வந்த கதி இது!

நாளையிலேருந்து இங்கே வேலைக்கு வரவேகூடாது என்றுதான் முத்தக்கா சாயங்காலம் நினைப்பாள். அது என்ன மாயமோ... மந்திரமோ... விடிந்தால்... இந்த வேல்சாமியண்ணன் புஞ்சையில்தான் வந்து நிற்பாள். அவளது விருப்பத்தை, அவளையே அலட்சியப்படுத்த வைப்பது, என்ன மாயம்?

எதிரில் யாரோ சைக்கிளில் வருவது, நிழலுருவமாகத் தெரிந்தது. ஒதுங்கிக்கிடந்த மாராப்பை, இடது கையால் இழுத்துச் சொருகிக் கொண்டாள்.

முந்தியெல்லாம் முத்தக்காவும்... நாலுபேரைப்போல வாழ்ந்தவள்தான். கூப்பிட்ட சம்சாரிகளுக்கு வேலை பார்த்துவிட்டு நாலு மணிக்கெல்லாம் வீடு வந்து சேருவாள்.

வெள்ளனத்துலே கஞ்சி காய்ச்சத் துவங்கிவிடுவாள்.

பூனைக் குட்டியைப்போல, ராமசாமி காலைக் காலை சுத்தி வருவான்.

‘‘எம்மா அஞ்சு பைசாம்மா... எம்மா... அஞ்சு பைசாம்மா...’’

‘‘உங்க அய்யாகிட்டே போய்க் கேளு.’’

‘‘அவரைத்தான் காணோமில்லே?’’

‘‘அதுக்கு நா என்ன செய்ய?’’

‘‘ஆஆ... ஆங்... ஆஆ... ஆங்’’ என்று வாயைக் கோணிக் கொண்டே கள்ள அழுகையாய் அழுவான். பிஞ்சுக் கையை உதறிக்கொண்டே, கால் மாற்றிக் காலால் தரையை உதைப்பான். மகன் அழுகிற லட்சணத்தில் இவள் சிரித்துவிடுவாள். மனசெல்லாம் ததும்பி வழிய, வாய்விட்டுச் சிரித்துவிடுவாள். அம்மாவின் சிரிப்பைக் கண்டவுடன், அவனுக்கு நம்பிக்கை வந்துவிடும். ஆனாலும் அழுகையை- உதையை- நிறுத்தமாட்டான்.

‘‘போடா..போ... போக்கத்த பயலே. போய் அய்யா சொன்னார்னு சொல்லி, கடையிலே பத்துப் பைசாவுக்கு என்னமாச்சும் வாங்கிக்கோ...’’

‘‘ஹைய்...யா...’’ ஆனந்தக் கூச்சலாய்க் குதித்துக்கொண்டு குதூகல நதியாய் ஓடுவான்.

‘‘ஏலேய், ஏதாச்சும் தீம்பண்டம் வாங்கித்தின்னு. உடம்புலே சேரட்டும். வெளையாட்டு சாமான் வாங்குனீன்னு தெரிஞ்சா... தோலை உரிச்சுப் போடுவேன்...’’ என்ற ஓங்கிய அதட்டல் சத்தம், அவனைத் துரத்திக்கொண்டு ஓடும்.

உற்சாகப் பெருக்காய் ஓடுகிற மகனைப் பார்த்து, அப்படியே பூரித்துச் சொரிவதைப்போல ஒரு மென்மையான கிளுகிளுப்பு.

இதெல்லாம்... புருஷன் இருந்த காலத்தோடு முடிந்துவிட்டது. அந்தக் குட்டைக்கால் தேவடியாச் சிறுக்கியை இழுத்துக்கிட்டு அவன் ஓடிப்போனபிறகு, நிலைமையே தலைகீழ்.

ஒருத்தி கூலியிலேயே ரெண்டு வயிறு கழுவணும். நல்லது பொல்லது பாக்கணும். நோய்நொடிக்குப் பதில் சொல்லணும். நடக்குமா? இதுபோக கூலி வேலை கிடைக்காத கோடைக்காலம்... போக முடியாத அடைமழைக் காலம்... அப்போவெல்லாம் எதை வைச்சுத் திங்குறது?

இதெல்லாம் சேர்ந்து புயலாக வீசி... முத்தக்காவை இந்தத் தூரந் தொலைவான வயக்காட்டுக்குள்ளே தூக்கிக்கொண்டு வந்து புதைத்து விட்டதே.

பூங்கொத்து மாதிரியான இந்த மணிப் புள்ளையை விட்டுட்டு, ஓடிப்போறதுக்கு அந்தப் பாவி மனுஷனுக்கு எப்படித்தான் மனசு வந்ததோ...

முத்தக்காவுக்குள் படர்கிற கசப்பு. வாழ்க்கையின் கைப்பான உணர்வுகள் அவளைக் கவ்வியது. தனது பெண்மையே உதாசீனப்படுத்தப்பட்ட அவமானமும், நிராதரவாய் விடப்பட்ட அவலமும் மனசின் ஆழத்தைத் தீக் கோலமாய் இறங்கிச் சுட்டது.

வெக்கையாகப் பெருமூச்சு வந்தது. நடையை எட்டிப் போட்டாள். மனசுக்குள் மீண்டும் ராமசாமி. முகம் மறைக்கிற இருட்டு, முகம் காட்டும்போது ஊருக்குள் நுழைந்தாள். தெருவுக்குள் வந்தாள். வாசலைப் பார்த்தவளுக்குப் பகீரென்றது.

வாசல் படியில் ராமசாமி சுருண்டு கிடந்தான். கூதலில் கிடுகிடுப்பவனைப்போல, மடக்கிய காலுக்குள் கைகளைத் திணித்து, முகத்தைத் தன் நெஞ்சுக்குள் புதைத்துக்கொண்டு...

பதைத்துப் பதறிப்போன முத்தக்கா, அப்படியே முள்ளுக்கட்டைத் தூர எறிந்துவிட்டு, மகனை ஆவித் தூக்கி அணைத்தாள். அந்தப் பிஞ்சு உடம்பு நெருப்பாகத் தகித்தது. உதடெல்லாம் காய்ந்து... கண்ணெல்லாம் சிவந்து....

மனசை உடைத்துக்கொண்டு அழுகை பீறிட்டது. கலங்கித் தவித்த உணர்ச்சி, காயம்பட்ட பறவையாகத் துடித்தது.

"என்னடா... இப்படிக் காச்சல்... எள்ளாப்பொறியுதே."

சிவந்த கண்களை ஏறிட்டுப் பார்க்கவே முடியாமல் சிரமப்பட்டான். நெற்றியெல்லாம் தீயாகச் சுடுகிறது.

"பள்ளிக்கோடத்துலே... மத்தியானம் கக்கிட்டேம்மா. டீச்சர்தா வீட்டுக்குப் போன்னு சொல்லிட்டாங்கம்மா. வந்துட்டேம்மா... ஒன்னைக் காணோம்மா... அழுதுக்கிட்டே படுத்துட்டேம்மா... நாக்கெல்லாம் கசக்குதும்மா..."

தொண்டைக்குள் சத்தமாய் விட்டு விட்டுக் கிசுகிசுத்த ராமசாமி... அடங்கிக்கிடந்த ஏக்கமெல்லாம் பொங்கிப் பிரவகித்ததைப்போல பலமாய் அழுதுவிட்டான். அம்மாவின் நெஞ்சுக்குள் முகத்தைப் புதைத்துக்கொண்டான்.

அவளுக்குக் குடலைப் பிடுங்கிப்போட்டது போலிருந்தது. குலையெல்லாம் பதறியது.

"அய்யய்யோ... ஏம் பச்சை மண்ணை, நாதியத்த புள்ளையாத் தவிக்க விட்டுட்டு, தூரந் தொலைவான காட்டுலே இருந்துட்டேனே, இந்தப் பாதகத்தி. இந்த வங்கொடுமையை நா எப்புடித் தாங்கப் போறேன்..."

வலது கையால் ஓங்கி ஓங்கி மடேர் மடேரென்று கொதிப்போடு தலையில் அடித்துக்கொண்டாள். மாலை மாலையாய் கண்ணீர். மனசைக் கவ்விப் பிசைகிற தாய்மை உணர்ச்சி.

கதவைத் திறந்தாள். பாயை எடுத்துப் போட்டு, தோளில் கிடந்த ராமசாமியைப் படுக்க வைத்தாள். பழைய சேலையை எடுத்து மூடினாள். பஞ்சு ரோமங்களை பாசத் தவிப்போடு கோதிவிட்டாள்.

அவள் 'பரபரத்தாள். ஒவ்வொரு அணுவிலும் தாய்மைப் பரிதவிப்பு. அவசரமாய் அடுப்பை மூட்டினாள். வெல்லமும் தேயிலையும் போட்டு 'காப்பி'யைக் கொதிக்க வைத்தாள்.

உதைபட்ட பந்தாக கடைக்கு ஓடினாள்.

"என்னம்மா வேணும்?"

"காச்ச மாத்திரை குடுங்கய்யா."

"யாருக்கு காச்சல். நிதானமாச் சொல்லும்மா."

"எம்புள்ளைக்குத்தானய்யா. கொடியா சுருண்டு கிடக்கானய்யா..."

"இந்தா...இதுலே பாதி மாத்திரையைக் குடு. வெறும் வவுத்துலே மாத்திரை குடுக்கக்கூடாது. பன்ரொட்டியை குடுத்துட்டுக் குடு."

"ரெண்டு பன்ரொட்டி குடுங்க."

இறக்கையை கட்டிக்கொண்டு ஓடினாள். கொதித்த கடுங்காப்பியை ஆற்றினாள்.

"ஐயா ராசா, ஏஞ்செல்வம்... ஏலே, ஏங்கண்ணு... எந்திடா."

அவனுக்கு இமைகள் கனத்தன. திறக்க முடியாமல் கண்ணைத் திறந்தான். நெற்றி சுருங்கியது. நாசியிலிருந்து அனல் மூச்சு. மெல்ல எழுந்தான். பிள்ளை அரை உசுராய் போனான்.

"இந்த ரொட்டியைத் தின்னுடா..."

காய்ந்து கனல் பறந்த சின்ன முகத்தைச் சுளித்தான்.

"எனக்கு வேண்டாம்மா..."

"ஏங்கண்ணுல்லே, ஏந்தங்கமில்லே... இதைத்தின்னுட்டு மாத்திரையை முழுங்கிடு. காச்ச, மண்டையடி விடவேண்டாமா ராசா."

எரிச்சலுடன் சூள் கொட்டினான். உதடெல்லாம் உலர்ந்த கோடுகள். அவளே ரொட்டியைப் பிய்த்து கறுப்புக் காப்பியில் முக்கி முக்கி வாயில் ஊட்டினாள். சிணுங்கிச் சிணுங்கி மறுத்துக்கொண்டே... முழுங்கினான். மாத்திரைக்கு ஒரேயடியாய் மறுத்து அடம்பிடித்தான். அவனை ஒருவழியாக சமாதானம் செய்து, அரவணைப்பாய் பேசி... விழுங்க வைத்துவிட்டாள்.

"படுத்துக்க ராசா" என்றாள். சேலையை மூடினாள். தலையைப் பரிவோடு கோதிவிட்டு, நெற்றியில் கை வைத்தாள்.

ஒருக்கழித்துப் படுத்திருந்த ராமசாமி, சின்ன விழிகளால் அம்மாவைப் பார்த்தான். அரவணைப்பு கிடைத்துவிட்ட கதகதப்பான நிம்மதியும், சந்தோசமும் கண்களில் ஆறுதலாய் மின்னுகின்றன. அதை மனதால் உணர்ந்த முத்தக்காவால் சகித்துக்கொள்ள முடியவில்லை. பொங்கி பொருமிய அழுகையை, அடுப்பங்கரைக்குள் வந்து முழுசாகக் கொட்டித் தீர்த்தாள்.

ஓடிப்போன புருஷனை- பொழுது அடைகிறவரை வேலை வாங்குகிற வேல்ச்சாமி அண்ணனை- கண்ணாமூச்சி காட்டி அழுக வைக்கிற வாழ்க்கையை- தும்பப்படுத்தி வேடிக்கை பார்க்கிற கூத்துவனை- சகலத்தையும் ஒரு மூச்சு திட்டித் தீர்த்துப் புலம்பினாள்.

அடுப்பு வேலைகள் வேலைகளாயிருக்க, அவ்வப்போது மகனையும் தொட்டுத் தொட்டுப் பார்த்துக்கொண்டாள்.

நெற்றி, தலையெல்லாம் சீராக வந்தது. அவளுக்கும் மனசு ஒருநிலைப்பட்டது. 'காச்ச குறைஞ்சிருக்கு...'

வீட்டைப் பெருக்கி முடித்தாள். விளக்கு வெளிச்சத்தில் அவளும் எதையோ வயிற்றில் அள்ளிப் போட்டுக்கொண்டாள். நாளைக்கும் புஞ்சையில் போய் உசுரைக் கொடுக்க உடம்பில் சக்தி வேணுமே...

அப்போதுதான் தெற்குத் தெரு ராமாத்தா வந்து சேர்ந்தாள்.

"என்ன முத்தக்கா... சாப்புடுதீயா?"

"ம்... ஆச்சு. அத்தை, என்ன இன்னைக்கு வழி தப்புனாப் போல இந்தப் பக்கம் வந்துருக்கீகளே... என்ன விஷயம் அத்தை?"

"சும்மாதான் வந்தேம்மா..."

"சும்மான்னு ஒன்னு இருக்கவா செய்யுது? சோலி இல்லாம, சுத்திப் பாக்கவா வரப் போறீக?"

"என்ன, பேராண்டி ஒறங்கிட்டானாக்கும்?"

"அதை ஏன் கேக்குறீக கொடுமையை..." என்று ஆரம்பித்தவள், மகனுக்குக் காய்ச்சல்- மகனின் தவிப்பு- என்றெல்லாம் மனசின் ஆற்றாமையையெல்லாம் ஒரு பாட்டம் கொட்டித் தீர்த்தாள். ராமாத்தாவும் தலையைத் தலையை ஆட்டி, உம் கொட்டிக் கொண்டேயிருந்தாள். அவளது காதுகளில் தொங்கிய பாம்படமும் அசைவுக்கேற்ப ஆடின.

ஊர் மாறி வந்துவிட்ட நாயைப் போல, பேச்சு நிகார் கெட்டுப்போய், அதுபாட்டுக்கு எங்கெங்கோ சுற்றியலைந்துவிட்டு, மையத்துக்கு வந்து சேரும் போது... இருவரின் உள் மனசும் ரொம்பக் கூர்மையாகிக்கொண்டது.

"பேசிப் பேசி தும்பம் குறையவா போகுது? நா ஒரு கிறுக்கச்சி. நாம் பாட்டுக்குப் பேசிக்கிட்டிருக்கேன்... என்ன சோலியா வந்தீக, அத்தை?"

"தெக்காட்டுப் புஞ்சையிலே மொளகாயிலைகளை வெட்டணும். தண்ணிக்குப் பின்னாலேயே பருத்தி விதை ஊனணும். கொத்துக்கு ஆள் கூப்புடத்தான் வந்தேன். ஒன்னைத்தான் கூப்புட முடியாதே... நீதான் வேல்ச்சாமி வயக்காட்டுக்கு பதிவா போய்க்கிட்டிருக்கீயே..."

"அப்படிப் போய்ப் போய்த்தானே இம்புட்டுச் சீரழிவு? பெத்த புள்ளையை, தாயிருந்தும் நாதியத்த புள்ளையா தவிக்கவிட்ட பாதகத்தியா நிக்கேன்..."

"அப்ப... நாளைக்கு வேலைக்கு வாரீயா?"

"வாரேன் அத்தை... நாலு மணிக்கு வேலை விட்டுடுவீகளா?"

"ஆமா... தாயி. அப்ப வாரேன்..."

"அத்தை...இன்னொரு சங்கதி..."

"சொல்லு தாயி..."

சொன்னாள். ராமாத்தாவும் உம் கொட்டினாள். யோசனையோடு பதில் சொல்லிவிட்டுப் போனாள்.

மறுநாள்.

சாயங்காலச் சூரியன், நிறம் மாற்றம் பெற்றுக்கொண்டிருந்தது.

வீட்டு வாசலில் முத்தக்கா. இப்படி முற்றத்தில் நின்று சாயங்காலச் சூரியனைப் பார்த்து ரொம்ப காலமாகிவிட்டது. அவளுக்கே அது அதிசயமாக- மகிழ்ச்சியாக இருந்தது.

ராமசாமிக்கோ... இன்றைக்கு சந்தோஷம் பிடிபடவில்லை. பைக்கட்டை வீசியெறிந்துவிட்டு ''அம்மா'' என்று மடியில் வந்து விழுந்தான். பூவாகப் பூத்துச் சிரிக்க, முகமெல்லாம் உற்சாக வெள்ளமாக மடியில் கிடக்கிற மகனைப் பார்க்கப் பார்க்க, அவளுக்குள் பொங்கி வழிகிற ஓர் இன்ப நதி.

காற்றில் மிதக்குற பஞ்சாக மனசே லேசாகி... தாய்மை உணர்வில் ததும்பி நின்றது.

இறுகிக் கிடந்த சாளரமெல்லாம் திறந்து கொண்டதைப்போல, நானா திசைகளிலிருந்தும் மனசுக்குள் பாய்கிற இனிய காற்று, வாழ்க்கையே புதுமுகத்துடன் அறிமுகமாகிற மாதிரி, ஒரு மர்ம மயக்கம்.

மடியில் உல்லாச நதியாய் கும்மாளமிடுகிற வாழ்க்கை.

மகனுக்கு, பொழுதிருக்க சோறு வைத்துக் கொடுத்தாள். ஆசை ஆசையாய்ப் பேசிக்கொண்டே சாப்பிட்டான். டீச்சர் கொடுத்த பாராட்டுகளை, சக பிள்ளைகளுடன் விளையாடிச் ஜெயித்த சமாச்சாரங்களையெல்லாம் பெருமிதம் ததும்பச் சொன்னான்.

கேட்கக் கேட்க இவளுக்குள்... இழந்துபோன இன்பமே மனசுக்குள் இறங்குவதைப் போன்ற சுகம். மனசை மயிலிறகால் நீவுகிற சிலிர்ப்புணர்வு.

வாழ்வின் வெளிவட்ட வறுமை நீங்கிப் போய்விடவில்லை. உள்வட்ட ஜீவிதத்திற்குள் விழுந்திருந்த ஒரு முடிச்சு அவிழ்ந்திருக்கிறது. அம்புட்டுத்தான்... அதுவே எம்புட்டு ஆறுதலாக இருக்கிறது...!

''வெள்ளை... யாடப் போறேன்'' ராகம் போட்டுக் கத்திக் கொண்டே, ராமசாமி தெருவில் பாய்ந்தான், சிட்டுக்குருவியாக. கூடு கிடைத்த குருவியாக இவள் மனசு, நிம்மதியில் தலை சாய்ந்தது.

வீட்டு முற்றத்தைப் பெருக்கிவிட்டு, அடுப்பில் சுட வைத்திருந்த வெந்நீரில் குளித்துவிட்டு, வீட்டு வாசலில் நின்று 'சிணுக்கலி'யால் தலையை சிக்கெடுத்துக் கொண்டிருந்தாள். முத்தக்காவுக்கு, உடம்பே சிக்கெடுத்தது போல சிலாக்கியமாக இருந்தது. கல்யாணமான புதுசில் போல் மனசு ததும்பிக் கிடந்தது.

கருகருவென்று மசங்குகிற நேரம். கதர்த்துண்டை இழுத்து மூடிக்கொண்டு வேல்ச்சாமி வருகிறான். முத்தக்காவுக்குள் திக்கென்றிருந்தது. பிடிபட்டுக்கொண்ட திருடிபோலத் தவித்தாள்.

தப்பித்து ஓட முடியாதே... எதிர்கொண்டாகணுமே... தன்னைச் சமாளித்துக் கொண்டாள்.

கோபமேயில்லாமல் ரொம்ப அன்பாய், சகஜமாய் கேட்டார்:

''என்னம்மா... இன்னைக்கு ராமாத்தாவுக்கு வேலைக்குப் போனியாக்கும்?''

பதில் சொல்ல நா எழவில்லை. படபடக்கிற மனசோடு, மௌனமாய் அவன் முகத்தைப் பார்த்தாள். உடம்பில் பல்லி ஏறுவதைப்போல மனசில் ஒரு கூச்சம்.

வேல்ச்சாமி முகத்தில் அமைதியான சிரிப்பு. கள்ளமில்லாத ஒரு பரிவான பார்வை. தங்கச்சியிடம் உரிமையோடு பேசுகிற தினுசில், அவரது அன்பான வார்த்தைகள்...

''மச்சான் ஓடிப்போன காலத்துலே- நாதியத்துப் போய் நீ ஒத்தையிலே உக்காந்து அழுதுக்கிட்டிருந்தப்ப ஆறுதலும், தைர்யமும் சொன்னது, இந்த அண்ணன்தாம்மா... வேலையத்த காலத்துலே அடைமழைக்கும் - கோடைக்கும், சாப்பாட்டுக்கும் தான்யம் குடுத்ததும் இந்த அண்ணன்தாம்மா. ஆடு குட்டிப் பிடிக்கணும்னு வந்து வாசல்லே நின்னப்ப, ரூபாயைத் தூக்கிக் குடுத்ததும் இந்த அண்ணன்தாம்மா... ராமாத்தா இல்லே.''

அன்புத்திரை போட்ட அடிகள். பரிவோடு குத்துகிற ஊசிகள். அவளுக்குள் நறுக் நறுக்கென்கிற வலி. செய்ததைச் சொல்லிக்காட்டி குத்துகிற வார்த்தைகள். உள்மனசைச் சுண்டியிழுத்து செருப்பால் அடிப்பதுபோல் இருக்கிறது அவளுக்கு.

நெஞ்சு, உதடெல்லாம் சட்டென உலர்ந்து போய்... பேச முடியவில்லை. அவனது ஒவ்வொரு வார்த்தையும் இவளை இங்குட்டுக் குத்தி, அங்குட்டு பிடுங்குவதைப் போலிருக்கிறது...

''அண்ணாச்சி... நீங்க சொல்றது வாஸ்தவம்தான். நானும் அந்த நன்றி விசுவாசத்தை மறக்கலே. நா சோத்துலே உப்பு போட்டுத்தானே சாப்பிடுதேன் அண்ணாச்சி? ஆனா... நா உசுர் வைச்சுப் பிழைக்கிறதே எம்புள்ளைக்காகத்தானே, அண்ணாச்சி? எம்புள்ளையை நாதியத்து தவிக்கவிட்டுவிட்டு... அந்தக் கொழுந்து மனசை ஏங்க விட்டுட்டு, நா எதுக்குப் பாடுபடணும் அண்ணாச்சி? நீங்களே சொல்லுங்க.''

"ராமாத்தா புஞ்சைக்கு வேலைக்குப் போனா... ஒம் புள்ளைக்கு நாதி வந்துருமாக்கும்? சரிசரி... எதுக்கு வெட்டிப்பேச்சு? நீ யாருக்கு வேணுமானாலும் வேலைக்குப்போ. போகாம... ஊஞ்சல்லே மகனோட சேர்ந்து ஆடணும்னாலும் ஆடு. எனக்கென்ன வந்தது? எனக்கு ஏம்பாக்கியைக் கணக்கு முடிச்சிடம்மா..."

கண்ணுக்குப் புலப்படாத கயிறுகள், அவள் கழுத்தில் சுருக்காக விழுகிறது. இழுத்து இறுக்குகிறது.

"இப்பிடி... விட்டாத்தியா வெடுக்கென்னு பேசுனா... எப்புடி அண்ணாச்சி? நீங்க அப்படி கட்டன்ரைட்டா கேட்டா... நானும் ராமாத்தா அத்தைகிட்டே வாங்கி, உங்க கடனை அடைச்சிருவேன். ஆனா, என்னை விசுவாசம் கெட்ட சிறுக்கின்று ஊர்லே பேசுவாகளே...?"

"அதுக்கு நா என்ன செய்ய முடியும்?"

"நாலுபேரைப்போல வெள்ளனத்துலே வேலை விடணும்."

"வெள்ளனத்துலே வேலைவிட்டா... தூரம் தொலைவான காட்டுலே என்ன வேலை நடக்கும்?"

"தூரந்தொலைவுலே நீங்க காடு வைச்சிருந்தா... அதுக்கு நா என்ன செய்ய முடியும்? அதுக்காக நா எம் புள்ளையைத் தவிக்க விடணுமா?"

அந்தக் கயிறுகளை முடிச்சவிழ்த்து எறிந்துவிட்டாள். வேல்ச்சாமி அவளை ஏறிட்டுப் பார்த்தார். கோபமான பார்வை, ஆத்திர அக்னி, அந்த அக்கினியை அவள்மேல் வீசமுடியாத நிர்ப்பந்தம்.

தூரந்தொலைவான காட்டிற்கு யாரும் வேலைக்கு வரமாட்டார்களே. ஒரு ரூபாய் கூலி அதிகமாய் கொடுத்தாலும், வீடு வர இருட்டிரும் என்ற பயத்தில் மறுத்து விடுவார்களே... வருகிற ஓரிருவர்களையும் இழந்துவிடுவதா...

அவரது பார்வை நிலைகொள்ளாமல், இடம்மாறி இடம்மாறி உட்கார்ந்தது. வாய்க்குள் வார்த்தைகளே வரவில்லை. திகைத்து நின்றார்.

"அண்ணாச்சி... நானும் விசுவாசத்தை நெனைக்கிறவதான். நீங்க நாலு பேரைப் போல வெள்ளனத்துலே வேலை விடுறதுன்னா... சொல்லுங்க, நாளையிலேயிருந்து வயக்காட்டுக்கு வாரேன்."

''ம்ஹூம்... நீயும் இப்படிப் பேசுற காலம் வந்ததே... இதெல்லாம் எங்க தலையெழுத்து... எப்படியும் வந்து தொலை...''

போய்விட்டார். அவர் முதுகையே வெறித்தாள். அவளுக்குள் நீண்ட அயற்சி. ஒரு போர்க்களத்தில் மல்லுக்கட்டி முடித்த ஆயாசம்.

ஒரு சின்ன நகர்வுக்கு... இத்தனை முரண்டு பண்ணி சண்டைபோட வேண்டியிருக்கே...

முத்தக்காவுக்குள் ஒரு திருப்தி பூவாய் மலர்ந்து விகசித்தது. நன்றி கெட்டவள் என்ற கெட்ட பெயர் வாங்காமலேயே... ஒரு பிரச்னை தீர்ந்ததே!

–செம்மலர் 1987



# 16. காற்று மாறி அடிக்கும்

கோடாரி தலைக்கு மேலே போய், காலுக்கு முன்பாக அழுத்தமாய் விழுகிறது. தொடர்ந்து சப்தம் வருகிறது. புஜங்களும், சதைத்திரட்சிகளும், லயத்துடன் அசைகின்றன.

கறுத்த உடம்பெல்லாம் செம்புழுதி. வியர்வைக் கசிவு. செம்புழுதியை ஈரமாக்கி... சில இடங்களில் கண்ணீராக வழிந்து காக்கி டவுசரை நனைக்கிறது.

நெஞ்சுக்கூடு, களைப்பில் தித்திக்கென்று அடித்துக் கொள்கிறது. மூச்சு இரைக்கிறது. நாசி நுனியில் வியர்வைத் துளி 'மூத்துப் புல்லாக்காக' ஆடுகிறது.

கோடாரியின் தாக்குதலில் தாக்குப்பிடிக்க முடியாமல், வேலித்தூர் சிறாயாக பிளவுபட்டுக்கொண்டிருக்கிறது.

விறகு உடைப்பை நிறுத்திவிட்டு, கோடாரியை தரையில் ஊன்றி நின்ற சங்கையா, உடைபட்டுக் கிடந்த சிறாய்க் குவியலைப் பார்த்தான். மனசில் ஒரு நிறைவு ததும்பியது. பலனைப் பார்க்கிற உழவனின் சந்தோஷம்.

''ஒரு லோடுக்கு சரியா வரும்.'' திருப்தியான முணுமுணுப்புடன், களைப்பான பெருமூச்சுத் தொடர்கிறது.

வயிறு பசிக்கிறது. வாய் உலர்ந்து எச்சில் கட்டியாகி விட்டது. உச்சி வெயில் நெருப்பாக எரிக்கிறது.

கோடாரியை போட்டுவிட்டு, வாகை மரத்துக்குப் போனான். சைக்கிளில் தொங்கிய தூக்குச்சட்டியை, கீழே எடுத்து வைத்துவிட்டு, பிளாஸ்டிக் கேனில் கொண்டு வந்திருந்த நீரில் முகத்தையும், உள்ளங்கைகளையும் கழுவி, தலைத் துண்டால் துடைத்துக் கொண்டான்.

கஞ்சியை கரைத்துக் குடித்தான். வயிறு நிரம்ப, மனசும் நிறைந்தது. பீடியை நுனியைக் கடித்துத் துப்பிவிட்டு, பற்ற வைத்தான். புகை உள்ளுக்குள் இறங்கிப் பரவி... வெளியேறியது.

உடம்புக்கு சுகமாக- இதமாக இருந்தது.

வாகை மரத்தில் சாய்ந்துகொண்டு, ஒரு காலை நீட்டி, மறு காலை மடக்கி, வகையாக உட்கார்ந்துகொண்டான். பீடியை உறிஞ்சிக் கொண்டான். உடலுக்குக் கொஞ்சம் ஓய்வு தேவைப்பட்டது.

பார்வை, விறகு கிடந்த இடத்துக்குச் சென்றது. கடைசித் தூர்-அதையும் இன்று உடைத்தாகிவிட்டது. அதைச் சுற்றிலும் கிளறப்பட்டுக் கிடந்த மண்; தூர்கள் வாழ்ந்த குழிகள்.

இங்கே... கும்பல் கும்பலாக வேலி மரங்கள் நின்றன. 'மேல் விறகு'களை வெட்டி டீக்கடைக்காரருக்கு விற்றாகிவிட்டது. தினசரி ஒவ்வொரு தூராக உடைத்து, சிறாய்களாக்கி, லோடு ஏற்றி... ஆலங்குளத்தில் வீடு வீடாக அலைந்து விற்றாகி... தீர்ந்துவிட்டது.

'ஹ்ம்... நாளை விறகுக்கு எங்க போறது?' என்ற நினைவில் மனசு அலைந்துகொண்டிருந்தது.

கிழக்காக நீளும் ஆறு, நீரில்லாமல் காய்ந்த நாணல்களும், பொறிந்த மணல்களுமாக லட்சணமில்லாமல் தெரிந்தது.

கரைகளில் அடர்ந்து, பசுமைக் கிளைகளை அசைத்துக் கொண்டு அழகாக இருந்த வேலி மரங்களும், கொஞ்சம் கொஞ்சமாக அகற்றப்பட்டுவிட்டன.

விவசாயம் நொறுங்கிப்போய் வேலை கிடைக்காமல் 'குடி பெயர'த் தயாராகிவிட்ட எத்தனையோகூலிக் குடும்பங்களுக்கு வேலை கொடுத்து கஞ்சி ஊற்றியது இந்த மரங்கள்தான்.

இந்த வேலி மரங்கள் மட்டும் இல்லாமலிருந்தால்...

எத்தனை ஜீவன்கள் வேலையற்று, பிழைப்புக்கு வழியற்று... அகதிகளைப்போல மாவட்ட எல்லைகளைத் தாண்டவேண்டிய அவலம் நிகழ்ந்திருக்கும்!

சங்கையா பெருமூச்சு விட்டான். கோடை காலத்து வெயில் சுள்ளென்று உறைக்கிறது. காடுகளில் பசுந்திட்டுக்களை எங்கேயும் காண முடியவில்லை.

காய்ந்த புற்கள்... செடிகள் பழுத்து உலர்ந்த விதவிதமான இலைகள்... காடே தீப்பற்றி எரிந்து முடிந்ததுபோல் கிடக்கிறது. கானல் அலைகள் ஓடுகின்றன...

கண்கள் எரிந்தது. பார்வையை அகற்றினான். வாகை மர நிழலும்கூட குளுமையாக இல்லை. எங்கு பார்த்தாலும் வறட்சி... வறட்சி... வறட்சி...!

துண்டை மறுபடியும் தலையில் கட்டிக்கொண்டான். சைக்கிளைப் பார்த்தான். பெடலையும், பிரேக்கையும் அன்புடன் தொட்டுப் பார்த்தான். மக்கார்டுகளில் படிந்திருந்த செம்புழுதியை

பரிவுடன் கையாலேயே துடைத்தான். அது ஓர் உயிர்ப் பிராணி போல இவனுக்குப் பட்டது. தொழிலின் துணைவன்! கேரியலுடன் இணைந்து நாலு கம்புகள் கட்டப்பட்டு உயரமாக நின்றன.

எழுந்து வெயிலுக்குள் வந்தான். சுள்ளென்று உறைத்தது. இருந்தாலும் பழகிப்போன வெயில்தானே!

உடைக்கப்பட்டுக் கிடந்த சிறாய்களின் பக்கம் வந்தான். வேலிக்கட்டைகளிலிருந்து உரித்து வைத்திருந்த நார்களை விரித்து, சிறாய்களை அடுக்கினான்.

சின்னச் சின்னக் கட்டுக்களாக மூன்று கட்டுக்கள்.

கேரியலுடன் இணைந்து உயரமாக நின்ற கம்புகளுக்கிடையில் ஒன்றின்மீது ஒன்றாகக் கட்டுகளை அடுக்கி... கயிறைப் போட்டு இழுத்துக் கட்டி... அப்பாடா!... லோடு ஏற்றியாகிவிட்டது.

கோடாரியையும் அரிவாளையும் சைக்கிளில் கோர்த்துக் கொண்டு, எல்லாவற்றையும் ஒழுங்குபடுத்திவிட்டு வண்டியை உருட்டினான்.

டயர் செம்புழுதிக்குள் பதிந்து கொண்டு சவால்விட்டது. மூச்சைப்பிடித்துக்கொண்டு வண்டியைத் தள்ளினான். சிறாய்கள் வலது உள்ளங்கையில் குத்தி வலியெடுக்கிறது. பழகிப்போன வலிகள் தானே!

இந்த வேலிமரச் சகவாசம் ஏற்பட்டபிறகு எத்தனை முட்கள் தோலைக் கிழித்து ரணப்படுத்தியிருக்கின்றன... இரத்தக் கசிவுகள்...

வாழ்க்கைச் சுமையை இழுத்துச் செல்லும் போராட்டத்தில்... இந்தக் கிழிப்புகள் ஒரு பொருட்டாக இருந்ததில்லை. சங்கையா வண்டியை உருட்டினான். ஆற்றின் கரையை ஏறிக் கடந்து... வண்டிப்பாதைக்கு வந்து சேர்ந்தபோது-

ஒரு சிகரத்தையே எட்டிப்பிடித்த சந்தோஷம் மனதுக்குக் கிடைத்தது.

பொருத்தமான இடத்தில்... பெடலை மிதித்து ஏறிக் கொண்டான். வண்டி, பாரத்தினால் அலைபாய்ந்தது.

புழுதிக்குள் சரிய முயன்றது. சமாளித்துக்கொண்டான்.

'நாளை விறகுக்கு எங்க போறது?'

மனசுக்குள் கேள்வி வலுவுடன் நின்றது. நினைவு அதையே சுற்றிச்சுற்றி வந்தது. எப்போதும் போலவே இப்போதும் தெளிவற்ற நம்பிக்கை பக்கபலமாக நின்றது...

'ம் ம்... பார்ப்போம். நாளைக்கு ஒரு வழி பொறக்காமலா போயிடும்...?'

பெடலை அழுத்தினான். வாழ்க்கை நகர்ந்தது.

காற்று எதிர்த்து வந்து மோதியது. சைக்கிள் மலைத்து திகைத்தது. சிரமப்பட்டு பெடலை மிதித்து, சைக்கிளை நகர்த்தினான்.

கால் ரொம்ப வலித்தது.

விறகின் பாரம்... எதிர்த்து மோதும் காற்று... இவனே மலைத்தான். நிமிர்ந்தான். சிமிண்டாலைக் குழாய் தூரத்தில் தெரிந்தது. முக்கி முக்கி மிதித்தான்.

'டபார்!'

சப்தத்தில் காது இரைந்தது. புழுதி பறந்தது. குண்டு வெடித்த மாதிரி பயங்கர சப்தம். திடுக்கிட்டுப்போனான்.

முன் சக்கர ட்யூப் வெடித்துவிட்டது. டயரின் கம்பிக் கட்டும் பிய்ந்து, சிவப்பாக பல்லையிளித்தது. ஏற்கனவே நிறைய ஒட்டுக்களால் நிரம்பிப்போன ட்யூப். ஏகப்பட்ட இடத்தில் தையல் விழுந்த டயர். சொல்லி வைத்தாற்போல ஒரேசமயத்தில் ரிட்டையர்டாகிவிட்டது.

மனசு ரொம்ப சோர்ந்து போயிற்று. பாரத்தை நெஞ்சில் தாங்கி நின்றான். இப்போது சிமிண்டாலைக் குழாயைப் பார்த்தான். முன்னை விட தூரத்திற்குப் போய்விட்டது போலிருந்தது.

'இந்த லோடு... நல்லாப் போனா... பதினைஞ்சு ரூபாய்க்குப் போகும். டயரும் ட்யூப்பும் வாங்கிப் போடாமல், வீடுபோய்ச் சேரமுடியாது... வாங்கணும்னா... முப்பதுக்கு குறையாம ஆகும். மிச்சத்துக்கு என்ன செய்றது?'

நெஞ்சுக்குள் நினைவுகள் மருகித் தவித்தன.

வழியறியாமல் திகைத்துப்போய்... நம்பிக்கையிழந்து பெருமூச்சுவிட்டான். மனசின் அவஸ்தை தாங்காமல், யாரையாவது திட்ட ஆசைப்பட்டான்.

'எந்த வெறுவாய்க் கட்டை மூஞ்சியிலே முழிச்சி எந்திச்சேனோ... எல்லாமே முட்டுக்கட்டையாயிருக்கு...'

இடது கையால் ஹாண்ட்பாரைப் பற்றி... வலது கையால் லோடைப் பற்றி உந்தித் தள்ளினான். வண்டி சீராக உருள மறுத்தது.

சிறாய்கள் கையை அழுத்தியது. வேதனைப்படுத்தியது. உடம்பு பூராவும் தளர்ந்து சிரமப்பட்டது.

'மாட்டேன்னு சொன்னா... விட்டுட்டா போகும். எதெது வருதோ... அதையெல்லாம் தாங்கித்தானே ஆகணும்...'

சோர்ந்த பெருமூச்சுடன்... தன் வாழ்வையே நொந்துகொண்டு முன்னேறினான். சிமிண்டாலைக் குழாய் போய்க் கொண்டேயிருப்பது போலிருந்தது.

விறகு விற்றுக் கிடைத்த பணம் போக- இருபது கடன் வாங்கி, புது டயர், ட்யூப் மாட்டிக்கொண்டு வீடு வந்து சேர்ந்தபோது...

அந்தக் கேள்வி கனத்து நின்றது;

'நாளை விறகுக்கு எங்க போறது?'

பதிலும் பக்கத்திலேயே நின்றது: 'பாக்கலாம்.'

சுவரில் சரிந்து உட்கார்ந்திருந்தான். உடம்பு பூராவும் வலித்தது. ரொம்பக் களைத்திருந்தது. அடிபட்ட உடம்பாக, அலுப்பாக இருந்தது.

வீட்டில் போட்டிருந்த காபியை மனைவி முத்தம்மா தந்தாள். குடித்தான். பீடியை பற்றவைத்துக் கொண்டான். சற்று தெம்பு வந்தது. கண்கள் ஏனோ எரிந்தன. மனம் நினைவுகளுக்குள் புதைந்தது.

"பொழுதாகுது. சோறு காய்ச்சணும். கடைக்குப் போவட்டா?"

முத்தம்மாதான் கேட்டாள். சிரத்தையில்லாமல் சொன்னான்:

"போயிட்டு வா. புள்ளையெ எங்க?"

"எங்கயாச்சும் வெளயாடப் போயிருக்கும். சரி... விறகு எம்புட்டுக்கு வித்திக...? ரூவாயைத் தாங்க."

"துட்டு இல்லே..."

"ஏன், விறகு கடனா போட்டுட்டீகளா?"

"இல்லே. டயரும் ட்யூப்பும் வெடிச்சிடுச்சி. வாங்கிப் போட்டேன்."

அவள் பார்வை வித்தியாசப்பட்டது. கேள்வியும் பதிலுமாக நிறம் மாறிய அந்தப் பார்வை, கடைசியில் சைக்கிளின் மீது கோபத்துடன் நின்றது. "நல்ல சைக்கிள்!"- பழித்தாள்.

"உழைச்சு உழைச்சு இதுக்குப் போட்டுட்டுப் போக வேண்டியதுதான். வவுத்துலே ஈரத்துணியையா கட்டிக்கிட்டு உறங்குறது?"

"சரி சரி... அலுத்துப்போய் வந்துருக்கேன். இச்சிலாத்திப்படுத்தாதே... கடைக்குப் போயிட்டு வா."

"எதை வைச்சு வாங்குறது?"

"கடன் சொல்லி வாங்கிட்டு வா..."

முணுமுணுத்துக்கொண்டே நடந்தாள். சலிப்பா, கோபமா?

இனம் பிரிக்க முடியவில்லை. பிரித்துப் பார்த்துக்கொண்டிருக்க மனசிலும் தெம்பில்லை.

அணைந்துபோன பீடியை, மறுபடியும் பற்றவைத்துக் கொண்டபோது, தீக்குச்சியின் சுடர் நாசி நுனியைச் சுட்டது. எரிச்சலுடன் திட்டிக்கொண்டான்.

"ச்சே, பொழைப்பைப் பாரு... நாய்ப் பொழைப்பு... எத்தனை உழைச்சு என்ன செய்ய? ஊரை ஏமாத்தி உலையிலே போடுறவன் உல்லாசமா திரியுறான்... நம்ம பொழைப்பு இப்படி நாறிக் கிடக்கு..."

நினைவுகள் பசியெடுத்துப்போய் அலைந்தன.

'சரி... நாளைக்கு லீவு போட்டாக் கட்டுப்படியாகாது. நிலைமை மோசம்... பொழுது மயங்குறதுக்குள்ளே... எங்கையாச்சும் பொறம் போக்குலே... வேலித்தூரு கிடைக்குதான்னு பாத்துட்டு வந்துட வேண்டியதுதான்.'

பெருமூச்சுடன் எழுந்தான். வெளியேறினான். உஷ்ணத்தை இழந்து வெயில் வெறுமையாகிப் போயிருந்தது. காலில் செருப்பு இருக்கிறதா என்று பார்த்துக்கொண்டான்.

கடைக்குப் போய்விட்டு வந்த முத்தம்மா... வீதியில் எதிர்பட்டாள்.

"என்ன... வந்தவுடனே கிளம்பியாச்சு... எங்க, குளிக்கவா?"

"இல்லே... இன்னிக்கோட இங்க தூரு தீர்ந்து போச்சு... நாளை லோடுக்கு தூரு வேணுமே... பாத்துட்டு வாரேன்..."

"நம்ம ரெங்கசாமி அண்ணாச்சியோட புஞ்சைக்கு நேரா... ஆத்துக்குள்ளே பத்து இருபது, வேலி மரங்க இருக்கு. இன்னைக்கு அங்கதானே வேலைக்குப் போயிருந்தேன்..."

"அப்படியா!" மனதுக்குள் சந்தோஷம் துளிர்விட்டது. கனம் குறைந்து நெஞ்சு இலேசாயிற்று.

திடுமென்று ஒரு சந்தேகம்.

"மரங்க... அவரு புஞ்சைக் கரையிலே இருக்கா? இல்லே, தள்ளி ஆத்துக்குள்ளே இருக்கா?"

"கரையிலேயும் இருக்கு, ஆத்துக்குள்ளேயும் இருக்கு. நீங்க, கரையிலே இருக்கிறதை விட்டுட்டு... ஆத்துக்குள்ளே இருக்கிறதை வெட்ட வேண்டியதுதானே... ஆறு எல்லார்க்கும் பொதுதானே..."

"அதுவும் சரிதான்... நா பாத்துட்டு அப்படியே குளிச்சிட்டு வந்துடுறேன்."

"வெருசா.. வந்து சேருங்க."

சங்கையா நகர்ந்தான். அவன் மனதுக்குள் ரெங்கசாமி வந்தார்.

அந்தக் கிராமத்திலேயே பெரிய புள்ளி. நிலபுலன் நிறைய. வரவு செலவு ஜாஸ்தி. 'மடிப் பை'யில் வாடாத செழுமை. விபரமானவர். நாலெழுத்துப் படித்தவர். கோடு, நாடு கண்டவர்.

யாரும் அவர் பேச்சுக்கு, மறுபேச்சு பேசுவது கிடையாது. பயம். அவரை எதிர்த்து எவரும் எதுவும் செய்வதில்லை. சகலத்தையும் தனக்கு சாதகமாக வளைத்து விடுவதில் வல்லவர் என்பதை ஏற்கனவே சில சம்பவங்களில் நிரூபித்திருக்கிறவர். 'பொசுக்' கென்று போலீஸ் போய்விடுவார், சின்னச் சின்ன விவகாரங்களுக்குக்கூட. அவரை அந்த ஊரில் சில இளவட்டங்கள்தான் தைர்யமாக விமர்சிப்பார்கள்.

போகிற போக்கில் கடையில் பத்து பைசாவுக்கு பீடி வாங்கிக் கொண்டு, ரெங்கசாமி புஞ்சைக்குப் போய்ச் சேர்ந்தான்.

ஆற்றின் கரையில் புஞ்சை அமைந்திருந்தது.

எல்லாப் புஞ்சைகளும் கரையில் நூல் பிடித்தாற்போல வரிசையாக அமைந்திருக்க... இவர் நிலம் மட்டும்... ஆற்றுக்குள் கொஞ்சம் முகத்தை நீட்டி துருத்திக்கொண்டிருந்தது.

புஞ்சைக்கு கரை சேர்க்கிற சாக்கில்... 'விஸ்தரிப்பு' நடந்து நாலைந்து வருடமாகிவிட்டது.

சில சமயங்களில்-

கரையைத் தாண்டி புஞ்சைக்குள் 'விழுந்த' ஆடுகளை விரட்டிவிட்டு, ஆட்டுக்காரனை மிரட்டுவார் ரெங்கசாமி. கொஞ்ச தூரம் தள்ளிச் சென்ற பிறகு, அவன் வைது விட்டுப் போவான்.

"ஆத்தையெல்லாம் மறிச்சு புஞ்சையாக்கிக்கிட்டா... ஆடு எங்க போய் மேயுமாம் தாயோ..." கெட்ட வார்த்தைகள் தொடர்வதை சங்கையாவே, பலமுறை காதுபடக் கேட்டிருக்கிறான்.

நினைவுகளை உதறிவிட்டு நடப்புக்கு வந்தான். பம்ப்ஷெட்டில் மோட்டார் தடதடத்துக் கொண்டிருந்தது. தண்ணீர் பீச்சியடிப்பது- மாலை வெயிலுக்கு உருக்கி வார்த்த வெள்ளியாக- அழகாக- இருந்தது.

'ம்ம்... சரி, ஆத்துக்குள்ளே இறங்கிப் பாத்துட்டு, குளிச்சிட்டுப் போகவேண்டியதுதான்.'

குளித்துவிட்டுப் புறப்படும்போது திருப்தியுடன் சென்றான்.

'நாளை லோடுக்கு இங்க வந்துட வேண்டியதுதான். இருபது நாள் பாடு ஓடும்...'

விடிந்தது. இன்னும் முழுதாக இருள் பிரியவில்லை. வழக்கம் போல சாப்பிட்டுவிட்டு... கேனில் தண்ணீரை நிரப்பிக்கொண்டு- முத்தம்மா நிரப்பித் தந்த தூக்குச்சட்டியை வாங்கிக்கொண்டு- கோடாரியையும் 'கும்பிட்டு' எடுத்துக்கொண்டு- கிளம்பினான்.

மனசில் உற்சாகம். நேற்று வரை கனத்த பிரச்னை... கற்பூரமாக கரைந்துபோன சந்தோஷம். உள்ளுக்குள் இன்ப ராகம்.

வேலையை 'கும்பிட்டு விட்டு' ஆரம்பித்தான். விறகுக் கட்டையை வெட்டிச் சரித்தான். பசுமையான முட்குவியல் ஒதுக்கப்பட்டு, 'மேல் விறகு' நறுக்கிக் குவிக்கப்பட்டது.

பழகிப்போன வேலை. அதிலும் குளிர்ந்த காலை நேரம். வேலை விறுவிறுவென்று சாய்ந்தது.

அரிவாளைப் போட்டுவிட்டு, கோடாரியை எடுத்தான்.

மேல் விறகை இழந்து, பூமிக்கு மேலே நாலடி உயர- அகலத்தில் நின்ற தூரில் கோடாரியை வீச ஆரம்பித்தான்.

சிறாய்கள் குவிந்தன. மதியத்துக்குள் வேலை முடிந்தது.

சிறாய்களை கட்டுப்போடத் துவங்கினான். மனசுக்குள் ஆனந்த ராகம் அலைமோதியது...

"எவன்டா இங்க விறகு வெட்டுறது?"

அதட்டலாக- அபஸ்வரமாக- வந்த குரல். திடுக்கிட்டுத் திரும்பினான். ரெங்கசாமி 'வேகு வேகெ'ன்று வந்து கொண்டிருந்தார். 'கோடு, நாடு' கண்டவர். மனசுக்குள் சிலீரென்று ஓடிப் பரவியது பயம்.

"ஏ ம் மா மா... நாந்தான்'- நாக் குழறியது.

'எதுக்காகப் பயப்படணும்? ஆறு, புறம்போக்குலே வெட்டுறதுக்கு யாருக்குப் பயப்படணும்...?' அவனையும் மீறி மனசு பயந்தது.

ரெங்கசாமி ஆங்காரமாக நின்றார்.

"என்ன நாந்தான்? புஞ்சைக்கு நேரா இருக்குற விறகை வெட்டுனா... எப்படி? யாரைக் கேட்டு வெட்டுனே?"

"என்ன மாமா... ஆத்துக்குள்ளேதானே வெட்டியிருக்கேன்?"

"ஓகோ... சட்டம் பேசுறீகளோ... எனக்கும் மேலே சட்டம் படிச்சிட்டீயோ...?"

மிரட்டலாக உறுமினார்.

"இல்லே மாமா... எங்களுக்கும் இதை விட்டா... பொழப்புக்கு வேறெ வழியில்லையே?"

"அதுக்கு யார் என்ன செய்றது? ஊரான் புஞ்சையிலே வெட்டுனா... விட்டுடுவாகளா?"

"இது உங்க புஞ்சையில்லையே..."

"பொறகு? உங்கப்பன் வீட்டுப் புஞ்சையா?"

"மரியாதையா பேசணும். வார்த்தை தவறக்கூடாது."

"என்னடா... மிரட்டுதே? மயிராண்டி... உனக்கெல்லாம் என்ன மரியாதை...?"

அவருக்கு மூச்சு இரைக்கிறது. கோபத்தில் உடலெங்கும் நடுங்குகிறது. உதடுகளும், முகமும் கடுகடுத்துப் போயிருக்கிறது.

இவர் எதுக்காக வந்து மிரட்டுகிறார்? என்ன காரணம்? ஆற்றுக்குள் வெட்டினால் இவருக்கென்ன வந்தது? ஆறு எல்லோருக்கும் பொதுதானே!

ஒருவேளை... ஆற்றுக்கும் சேர்த்து 'சொந்தம்' கொண்டாடுகிறாரோ?...

"சரி... இப்ப என்ன செய்யணும்ங்கிறீர்?"

"என்ன செய்யணுமா? இங்க மத்த எவனும் வந்து வெட்டக் கூடாதுன்னா... வெட்டக்கூடாதுதான்."

"ஆறு புறம்போக்கு. எல்லோருக்கும் பொதுதானே? ஆத்துக்குள்ளேதானே வெட்டியிருக்கேன். உங்க புஞ்சைக்குள்ளே வெட்டலியே."

"விட்டா... எங்க வேணும்னாலும் வெட்டுவீக!"

"நீங்க மட்டும் ஆத்தையும் சேர்த்து புஞ்சையாக்கலாமோ?"

ரெங்கசாமியிடம் ஒரு ஸ்தம்பிப்புத் தெரிந்தது. அந்தரங்கத்தைத் தொட்டு உலுக்கிவிட்டானே?

அவருக்குக் கண்கள் சிவந்து சுருங்கின... ஆத்திரத்தில் மட்டியைக் கடித்தார். கடைசியாக, கறாராகக் கேட்டார்.

"இப்ப விறகைப் போட்டுட்டுப் போறியா... இல்லையா?"

'வசதியானவர்... 'கோடு, நாடு' கண்டவர்... எதிர்த்துப் பேச எவரும் பயப்படுவார்கள்.'

மனசு பயந்தாலும், துணிச்சலாகக் கேட்டான்:

"இல்லேன்னா... என்ன செய்வீக?"

"அரசாங்கத்துக்குச் சொந்தமான மரங்களை சீரழிச்சதாக பாரஸ்ட்டுக்குப் புகார் பண்ணுவேன். நாளைக்கே போலீஸ் வரும். கேஸ் நடக்கும். உன்னாலே... அதையெல்லாம் தாங்கிக்க முடியுமா?"

மனசு நடுங்கிக் குலுங்கியது. இருப்பினும் இந்தக் கேள்வியும் குடைந்தது.

'அதே மரங்களை- நிலத்தை- ஆக்கிரமித்துக்கொண்ட இவரை மட்டும் அந்த அரசாங்கம் ஒன்னும் செய்யாதா? வலுத்தவனுக்கு ஒரு ஞாயம், இளைச்சவனுக்கு ஒரு ஞாயமா?'

ரெங்கசாமி கடைசியாகக் கூறினார்:

"ஒழுங்கு மரியாதையா சொல்றேன். இதை இப்படியே போட்டுட்டுப் போயிடணும். எடுத்துட்டுப் போனே... நாளைக்கே புகார் பண்ணுவேன்."

-போய்விட்டார்.

பிரத்யட்ச நிலைமைகள் அவனைப் பயமுறுத்தினாலும்... அக்ரமத்தைத் தாங்காமல் மனசு கொதித்தது.

போய்க்கொண்டிருக்கும் அவரைப் பார்த்தான்.

'இப்படியே கோடாலியை எடுத்து அவர் முதுகு மேலே வீசிவிடலாமா...'

வெட்டிக் கிடந்த விறகை- கொட்டிக் கிடந்த உழைப்பை- குதறப்பட்டுக் கிடந்த நியாயத்தை- பார்த்தான்- மனசு கிடந்து தவித்தது.

அழுகையும், ஆத்திரமும் அலைமோதியது.

'அட, அக்ரமக்காரப் பாவிகளா... தலைகால் தெரியாம ஆடாதீக... ஆட்டம் ரொம்ப நாளைக்கு ஆட முடியாது. இந்த காத்து இப்படியே அடிக்காது... மாறியும் அடிக்கும்டா... பாவிகளா...'

குமையும் நெஞ்சுடன் அரிவாளையும், கோடாரியையும் எடுத்துக்கொண்டு, வெறுமையாக சைக்கிளுக்கு வந்தான். உடம்பு தளர்ந்தது. ஆனால், மனம் புகைந்துகொண்டிருக்கிறது.

-செம்மலர், ஆகஸ்ட் 1980



# 17. வார்த்தைகள்

மூக்கையா, பனியனையும் கழற்றி தோளில் போட்டுக்கொண்டு வராண்டாவில் உட்கார்ந்திருந்தார். சனிக்கிழமை. பள்ளி லீவ். ரொம்பப் புழுக்கம். நெஞ்சுக் குழியெல்லாம் வியர்வை. மனசெல்லாம் நசநசப்பு.

வீட்டுக்குள் பிள்ளைகளின் விளையாட்டுக் கூச்சல். அந்தக் கூப்பாடுகளின் இச்சிலாத்தி தாங்காமல், சள்ளென்று எரிந்து கத்துகிற பார்வதியின் அதட்டல்கள்.

வீட்டு முன்னால்... வேப்பமர நிழலில் நாலைந்து சைக்கிள்கள் வந்து நிற்கின்றன. யார் இவர்கள்? சக ஆசிரியர். மற்றவர்கள் யார்? பேண்ட்களும், ஷர்ட்களுமாய். பளிச்... பளிச்சென்று...

சக ஆசிரியர் 'விஷ்' செய்தார். மூக்கையா 'விஷ்' பண்ணிக்கொண்டே, எல்லோரையும் வரவேற்றார். வீட்டிலிருந்த இரண்டு சேர், ஒரு ஸ்டூல்... ஒரு நீள பெஞ்ச் எல்லாவற்றையும் தடபுடலாகத் தூக்கிப்போட்டு உட்காரச் சொன்னார்.

மூக்கையா, சக ஆசிரியரைக் கேள்விக்குறியோடு பார்க்க... அவர் தர்மசங்கடமாய்ச் சிரித்தார்.

"சார்... இவர் லாயர். இந்த மாவட்டத்திலேயே கிரிமினல்லே லீடிங் லாயர்- பரமசிவம். இவர் கோட்டியப்பன், டாக்டர். இவரு பதினெட்டான், தாலுகா ஆபீஸிலே ஒர்க் பண்றார். இது அடைக்கண். டவுன்லே பெரிய காண்ட்ராக்டர். எல்லாரும் உங்களைச் சந்திச்சுப் பேசணும்னு பிரியப்பட்டு, ஏங்கிட்டே காண்டாக்ட் பண்ணுனாக... நா கூட்டிட்டு வந்தேன் சார்."

"அப்படியா...! வாங்க... வாங்க... என்னை எதுக்கு சந்திக்கணும்னீங்க?"

"நம்ம அமைப்பு விஷயமா, உங்களைப் பார்க்க வந்தோம்..."

"அமைப்புன்னா... எந்த அமைப்பு?"

"நம்ம சமுதாய அமைப்புதான் சார்... நீங்க டீச்சராயிருக்கீக... ரொம்ப நல்லா ஒர்க் பண்ணி... ஜனங்ககிட்டே நல்ல பேரு, நல்ல செல்வாக்கு சம்பாதிச்சிருக்கீக... அதான் நம்ம தலைமை முடிவு பண்ணி, எங்களை அனுப்பி வைச்சாக. உங்களை நம்ம அமைப்போட மாவட்டச் செயலாளராப் போடணும்னு ஒரு முடிவிருக்கு..."

''சமுதாய அமைப்புன்னா... சாதி அமைப்பைச் சொல்றீகளா?''

''ஆமா...''

''இதுக்கு நா சம்மதிப்பேன்னு எப்படி நினைச்சீக?... எங்க சார் ஒன்னும் சொல்லலியா?''

''சொன்னாரு... எங்களிடம் டிஸ்கரேஜிங்காத்தான் சொன்னார். நாங்கதான் கன்வின்ஸ் பண்ற முடிவோட... ட்ரை பண்ணிப் பார்ப்போமேன்னு வந்தோம்...''

''ஓ...கோ, அப்படி..யா?''

மூக்கையா, யோசித்தார். அதற்குள் பார்வதி, எல்லோருக்கும் காபி கொண்டுவந்து தந்தாள்.

''எதுக்கு இந்த வெயில்லே...'' என்று பிகு பண்ணிக் கொண்டே மரியாதைக்காக காபியை வாங்கினர்... குடித்தனர். ஒரு பையன் ரோஜா வெத்தலை... சிகரெட் கொண்டு வந்து கொடுத்தான்.

வராண்டாவில் புகை வளையங்கள் நெளிந்தன.

மூக்கையா, மனசுக்குள் தெளிவாக இருந்தார். வார்த்தைகளை உள்ளுக்குள் தேடினார். கோர்த்துப் பார்த்தார். அதிலேயே நினைவுகள் கூடுகட்டிக் கொண்டிருந்தன.

லாயர் பரமசிவம், விஷயங்களை அடுக்கிப் பேசிக் கொண்டிருந்தார். உதவியாக, மற்றவர்கள் வார்த்தைகள் எடுத்துக் கொண்டிருந்தனர்.

...நம்ம ஜாதி மக்கள் அடிமைப்பட்டுக் கிடப்பது, அரசியல் வாதிகளின் மோசடிகள்... நம்ம உரிமைகளுக்காக நாம் ஒன்றுபடுவது... நமது ஜாதியிலுள்ள படித்தவர்கள் அதற்காக முன் வந்து உழைக்க வேண்டிய அவசியம்...

மூக்கையா புன்சிரிப்பு மாறாமல் தலையை அசைத்துக் கொண்டிருந்தார். அடிக்கடி தலையைக் கோதிக்கொண்டார். தாடையைத் தடவிக்கொண்டார்.

''என்னோட கருத்தைச் சொல்லட்டுமா...?'' என்றார்.

''சொல்லுங்க'' என்றார் காண்ட்ராக்டர்.

''நம்ம நாடு இப்ப இருக்கிற நிலைமையிலே... நாம மறக்க வேண்டிய விஷயம் மூணு இருக்குன்னு நெனைக்கிறேன்... நாம என்ன ஜாதி... நாம என்ன மதம்... நாம எந்த இனம்ங்கிற மூன்றையும்

கட்டாயமா மறந்தாகணும். பாடுபடற வெள்ளைச்சட்டைக்காரன்... காக்கிச்சட்டைக்காரன்... கிராமத்து அழுக்கு வேட்டிக்காரன் எல்லாரும், இந்த மூணையும் மறந்து ஒண்ணு சேர்ரதுதான், இப்ப ரொம்ப முக்கியம்னு நெனைக்குறேன்... இப்ப நமக்கு மனிதாபிமானமும், தேசாபிமானமும்தான் முக்கியமா வேணுமே தவிர... ஜாதியபிமானமில்லே..."

"நம்ம சாதிக்காரங்க இப்புடி நாலாந்தர மனுசங்களா நசுக்கப்பட்டு, கேவலப்படுறதுதான்... ஞாயம்னு சொல்றீகளா?"

"இல்லே... நாட்டுலே தொண்ணூறு சதவிகித ஜனங்க அவங்க எந்தச் சாதியாயிருந்தாலும் சரி- எல்லாரும் நாலாந்தர நிலையிலே நலிஞ்சுகிடக்குறாங்கங்கிற உண்மையை மறந்துட்டு... நம்ம ஜாதிக்காரங்க மட்டும் நசுக்கப்படுறதாக நெனைக்குறது பொய்யில்லையா...? அந்தப் பொய்யை நம்பி, ஒரு இயக்கம் வைச்சு... பகைகளை வளர்த்துக்கறது... நாட்டுக்கும், மனிதாபிமானத்துக்கும் செய்ற கெடுதல் இல்லையா?"

வாயடைக்கப்பட்டார் லாயர். அசட்டுத்தனமாய் விழித்தார். பதினெட்டான் தொடர்ந்தார். நாலு பேரும் தனித்தனியாய்- கோரஸாய் பேசினர். மூக்கையா வாத்தியார், அதே நிலையில் அசையாமல் நின்றார்...

"நீங்களும் யோசிச்சுப் பாருங்க. எதுக்கும் அடுத்த வாரம் வாரோம்."

"எப்ப வந்தாலும் இதான் பதில்... ஆனா... நீங்க வாங்க..."

"மாவட்டச் செயலாளர் பதவி லேசானதுல்லே சார்... ஏராளமாய் பணம் புரள்ற உத்யோகம்... பெரிய பெரிய தலைவர்களோட தொடர்பு வாங்கித்தர்ற கௌரவம் சார்... யோசிங்க..."

புறப்படுவதற்காக எழுந்தனர். வேப்பமரம் மெல்லத் தலையையாட்ட, காற்று வந்தது. வியர்த்துக் கிடந்த வாத்தியாருக்கு, காற்று பட்டவுடன் ரொம்பச் சுகமாக இருந்தது... மனசுக்குள் இறங்கி, நரம்புகளில் பாய்கிற சுகம்...

வேலை பார்க்கிற பள்ளிக்கூடம் மூன்று மைல் தள்ளியிருக்கிறது. காலை எட்டு மணிக்கெல்லாம் சைக்கிளில் கிளம்பிவிட்டார். ஊருக்குள் நுழைந்தார். அன்போடும், மரியாதையோடும் வணக்கம் சொல்கிற சிறுவர்கள், இளைஞர்கள், பெரியவர்கள்...

பெண்கள்கூட விலகி வழிவிடுவதிலேயே காட்டுகிற மரியாதைகள். வழிநெடுக பூச்சிதறலாக விழுகிற உணர்வுகள்...

வகுப்பு துவங்கிவிட்டது. கரும்பலகையில் முதல்நாள் எழுதிய வார்த்தைகளை டஸ்டரை எடுத்து அழிப்பதற்காகத் திரும்பி நிமிர்ந்தால்...

அதிர்ச்சி! எந்த மாணவனும் செய்யத்தகாத சேட்டை இது. அதிலும் நாலாம் வகுப்பு மாணவனுக்கு, இது ரொம்ப தூரமான சேட்டை. இந்த வயசில் இப்படியோர் வக்கிரப் புத்தியா?

போர்டில் முதல்நாள் எழுதியிருந்த வார்த்தை:

வெண்டை என்ற அந்த வார்த்தை சற்று திருத்தப்பட்டு...ச்சே!

பின்னால் உள்ள மாணவனின் 'களுக்'கென்ற ரகசியச் சிரிப்பு... அந்தச் சிரிப்பு, சேதுவின் சிரிப்பு. வாத்தியாரின் அதிர்ச்சியில் மகிழ்ச்சி காணுகிற சிரிப்பு.

இந்த எழுத்துகூட.... சேதுவின் எழுத்துதான். அவனது ஸ்டைல் தான் இது...

நரம்பெல்லாம் குப்பென்று பற்றிய அக்கினி. மனசெல்லாம் கொதிக்கிற அக்கினி. பாதகம் செய்வதைக் காணச்சகியாத தார்மீகத் தீ... சிறுவனின் மனசில் இத்தனை சில்மிஷமா? என்று சீறுகிற அக்கினி...

''இதை யார் எழுதுனது?''

அதட்டலாய்க் கேட்டார். எல்லா மாணவர்களையும்-மாணவிகளையும் பார்வையால் ஆராய்ந்தார். நடுங்கி நிற்கிற மாணவர்கள். முகம் கறுத்துக்கிடக்கிற மாணவிகள்...

சேது மட்டும் வித்தியாசமான முகத்துடன்...

'எனக்கொண்ணும் தெரியாது' என்கிற மாதிரியான அலட்சியமாய்... எகத்தாளமாய்...

''சேது... இங்க வாடா...!''

''என்ன சார்?'' சற்றும் கலங்காத குரல். முகத்தில் கோபம். 'என்னை ஏன் கூப்பிட்டாய்?' என்று கண்டிக்கிற கோபம்...

''இது உன்னோட எழுத்துதானே?'' எரிமலையை அடக்கிக் கொண்ட அனலின் உஷ்ணம்.

''நா எழுதலை சார்.'' சிடுசிடுப்பான பதில். பயப்படாத பதில்.

சகித்துக்கொள்ளவே முடியாத சில்லறைத்தனம் இது. செய்வதையும் செய்துவிட்டு எதிர்த்துப் பேசுகிற துடுக்குத்தனம்...

ஸ்கேலை எடுத்து சட்டென்று அடித்தார், தலையில். ஆத்திரத்தில் அடித்ததாலோ என்னவோ... சற்றுப் பலமாகவே விழுந்தது...

"போடா வெளியே..."

கொஞ்ச நேரம்தான் ஆகியிருக்கும். இடிமுழக்கமாய் பத்திரகாளி வந்துவிட்டாள், சேதுவுடன். பள்ளியே அதிர்கிற மாதிரி வசவுச் சத்தம்... நாராசமான வார்த்தைகள்... தெருவே திரண்டு நின்ற காட்சி... சேதுவின் அம்மா போடுகிற கோபக் கூச்சல்.

கையைக் கையை நீட்டி, ஆவேசமாய் அள்ளியெறிகிற அக்கினித் துண்டுகள். ஜாதியைச் சொல்லி... ஜாதிக்குணம் சொல்லி, இழிவாகப் பாய்கிற கத்தி வீச்சுகள்...

"எருமைமாடு மேய்க்கிற ப... பயகளுக்கும், ப... பயகளுக்கும் வாத்தியார் வேலை போட்டுக்குடுத்தா... மாடு மேய்க்கிற புத்தி போகவா செய்யும்?... எருமை மாட்டை அடிச்ச மாதிரி அடிச்சிருக்கானே... சின்னச்சாதிப்பய... அவன் கையிலே புத்து பெறப்பட..."

"அம்மா... உங்க பையன் செஞ்சிருக்கிற தப்பு என்னன்னு தெரிஞ்சுக்கிட்டு பேசுங்கம்மா..."

"என்னதான் தப்பு செய்யட்டுமே... அதுக்காக இப்புடியா... அடிச்சு புள்ளையை மண்டை வீங்க வைக்கிறது? சாதி கெட்ட பயகளுக்கெல்லாம் வாத்தியார் வேலை போட்டுக்கொடுத்தா... இப்புடிக் கொடுமைதான் நடக்கும்..."

குன்றிப்போய் நின்றார் மூக்கையா. கூடியிருந்தவர்களின் மௌனம் இவரைக் குத்திக் குதறியது. அவமானம், அடிமனசைக் கிள்ளியது. உடம்பெல்லாம் ஊர்கிற தேள்கள்... கொட்டாமல் கூசவைத்துக் கொடுமை செய்கிற பூரான்கள்...

சக ஆசிரியர்கள் தலையிட்டு, அந்த அம்மாவைச் சமாதானம் செய்து அனுப்பி வைக்க, மூக்கறுபட்ட அவமானத்தில் மூக்கையா கூசிக் குமைந்தார். செத்துப்போன முகமாய் வெளுத்து, கண்கள் கலங்கி, யார் முகத்தையும் நிமிர்ந்து பார்க்கப் பயந்த மனசோடு...

வகுப்புக் குழந்தைகள் முகத்தில் விழிக்கக்கூட அஞ்சுகிற மனசு...

இப்படியே செத்துப்போனால் தேவலையே என்று மனசு தவிக்க... அரண்டுபோய் நின்றார் மூக்கையா.

அந்த அம்மா பேசியது கொடுமை என்றால், அதைவிடக் கொடுமை தெருவில் கூடிநின்றவர்களின் மௌனம். திராணியற்ற மௌனம். அதர்மத்துக்கு அங்கீகாரம் அளிக்கிற நெட்டைமர மௌனம். கைவிடப்பட்டு ஒற்றை மனிதனாய் தனிமைப்படுத்திய கொடிய மௌனம். அதுதான் அவரை ரொம்பக் குத்திக் குடைந்தது.

'நாலாந்தர மனுசங்களா நாம நசுக்கப்பட்டு, கேவலப் படுறதுதான் ஞாயம்னு சொல்றீகளா?...'

கசந்த மனசுக்குள் லாயர் பரமசிவத்தின் கேள்வி ஊசியாகப் பாய்ந்தது. வகுப்பு நடத்த முடியவில்லை. மனசுக்குள் ஏகப்பட்ட உளைச்சல். வலிக்கிற மனசுக்குள் வாலாட்டுகிற நினைவுகள். நிலைகொள்ளாமல் அலைபாய்கிற நினைவுகள். வெட்டுண்ட செடியாக வாடி, நிறம் மாறுகிற நினைவுகள்.

'நீங்களும் யோசிச்சி வையுங்க. எதுக்கும் அடுத்த வாரம் வர்றோம்.'

நேற்று அவர்கள் வீசிவிட்டுப்போன வலை வார்த்தைகள். குற்றமே செய்யாமல்... ஒற்றையாய் நிறுத்தப்பட்டு வெட்டுண்ட இந்தக் கொடிக்கு... அதுதான் பற்றுக்கோலா...!

துவண்ட மனசோடு, சோர்ந்த உடம்போடு வீடு வந்து சேர்ந்தபோது, வீடு... ரணகளமாகிக் கிடந்தது. பார்வதி, மூத்தவனைப் போட்டு அடித்துக்கொண்டிருந்தாள். அவன் துடித்துத் துடித்துக் கதற... அவள் திட்டிக்கொண்டே மாறி மாறி விளாசிக் கொண்டிருந்தாள்.

பதைத்துப் போய் ஓடிவந்த மூக்கையா, பாய்ந்து வந்த மகனைப் பிய்த்துப் பிடுங்கினார். ஏறிட்டுக் கோபமாய் பார்த்த மனைவியை, பலத்த சத்தமிட்டு அதட்டி அடக்கினார்.

''எதுக்கு... இப்படிப் புள்ளையைப் போட்டுக் கொல்லுறே?''

''எதுக்கா...? அவன் பண்ற அக்குருமத்துக்கு அவனைக் கொல்லத்தான் செய்யணும்.''

''அதான் கேக்கேன்... அவன் அப்படி என்ன அக்குருமம் பண்ணிட்டான்? சொல்லு...''

''சின்னவனைப் போட்டு அடிச்சிக்கிட்டேயிருக்கான். நானும் சொல்லிச் சொல்லி அலுத்துப் போனேன். கூட பிறந்த தம்பியை

அடிக்காதேடா, அடிக்காதேடான்னு... காதுலேயே கேட்டுக்கலே... அவனை விரட்டி விரட்டி அடிச்சு... அவன் பயந்து பயந்து ஓடி... இங்க பாருங்க... சோத்துப் பானையை உடைச்சுப் போட்டான்...''

மூக்கையா தளர்ந்து போனார். விறைத்துப் பேசமுடியவில்லை. தப்பு மூத்தவன் மேல்தான்... வேதனையோடு மூத்தவனைப் பார்த்தார்...

அடிவாங்கிய அழுகையோடு, அப்பாவைப் பார்த்துவிட்ட பயமும் சேர்ந்து... நனைந்த கோழிக் குஞ்சாக நடுங்கிக் கொண்டிருந்தான். பாவமாக இருந்தது.

நொந்துபோன மனசோடு ''ஏண்டா... இப்புடிச் செய்றே? சரி... போ'' என்றார். மனசு சங்கடப்பட்டது.

போய்விட்டான். அரண்டு போய்க் கிடந்த மற்ற பிள்ளைகளும் மூச்சுவாங்க வெளியே ஓடிவிட்டன.

பார்வதியைப் பார்த்தார்.

''விபரமில்லாம, விளையாட்டுப் புத்தியிலே அவன் செய்ஞ்ச காரியம் தப்புதான். ஆனா... அதுக்காக ஆத்திரப்பட்டு நீ செய்ஞ்ச காரியம்... அதைவிட விபரங்கெட்டதாயில்லே? பார்வதி. அவன் தரத்துக்கு... அது இயற்கை. பெத்த தாயாயிருக்கிற ஒந் தரத்துக்கு... இது எம்புட்டுப் பெரிய தப்பு? நீயே யோசிச்சுப்பாரு...''

கனிவோடு கூறிவிட்டு... ஷர்ட்டைக் கழற்றினார். பனியனைக் கழற்றி தோளில் போட்டுக்கொண்டு... உடம்பைக்கூட கழுவாமல்... குழம்பிய மனசோடு வராண்டாவில் வந்து உட்கார்ந்தார்.

குளிர்ந்த காற்று வந்து மோதியது. ஜில்லென்று சுகமாக இருந்தது. கண்களை மூடிக்கொண்டார்.

மனசுக்குள் இறங்கி, நரம்பெல்லாம் பாய்கிற இன்ப நதிகள்...

பார்வதியிடம் கூறிய வார்த்தைகள், அவரையே கவர்ந்துவிட்டன. அதுவே மனசில் ஓடி ஒலித்தது. அடடே... எவ்வளவு நுட்பமாய் பேசியிருக்கோம்... இதைவிடத் தெளிவா- சுருக்கமா- பேசவே முடியாது... அடேயப்பா... எவ்வளவு பெரிய விஷயத்தை, எவ்வளவு சாதாரண சொற்கள்லே சொல்லி முடிச்சுட்டோம்...'

அவரே, அவரை நினைத்து வியந்து கொண்டிருந்தபோது... அந்த வார்த்தைகளே முள்ளாக உறுத்தின. நெஞ்சுக்குள் நெருடின. பள்ளிச் சம்பவத்தைக் கிளறிவிட்டன.

ஜாதி சொல்லிப் பேசிய அந்த அம்மா... விபரம் தெரிஞ்சு பேசுனவங்களா? கூடி நின்று மௌனம் அனுஷ்டித்தவர்கள் விபரம் தெரிஞ்சு நின்றவர்களா...? அறியாமையிலே ஊறிக்கிடக்கிற அவங்க, விபரமில்லாம பேசுன விஷயத்துக்காக... நா ஏன் ஆத்திரப்படணும்? அவமானப்படணும்?

விபரமில்லாத அப்புராணிச் சனங்க பேசுனதுக்காக... விபரந்தெரிஞ்ச நா... ஏன் நிறம் மாறணும்? அப்படி நிறம் மாறினா... நானும் அவங்களும் ஒரே தப்பைச் செய்ததாகத்தானே அர்த்தம்?... பார்வதிக்கு நா சொன்ன பதில், எனக்கும் பொருந்துமே...

உள்ளுக்குள் ஓடிய இந்த மின்னலில், நிறைய விஷயங்கள் வெளிச்சமாகியது போலிருந்தது. தன்னைத்தானே இனம் கண்டு காப்பாற்றிக் கொண்ட மாதிரி, மனசு தெளிவாயிருந்தது...

"நீங்க எப்ப வேணும்னாலும் வாங்க... என்னோட பதில் இதுதான்."

அன்று லாயரிடம் கூறிய வார்த்தைகள், இன்றும் செத்துப்போகாத வார்த்தைகள். இவரிடம் என்றென்றும் நிறம் மாறாத வார்த்தைகள்...

–செம்மலர். ஜூன். 1988



